TIC 53



## 1936

தனது 20வது வயதில் கம்பௌண்டர் பட்டணத்திலே மிகப் பெருமையுடன் ஒரு குறைவுமின்றி வசித்து வருகிறான். அவன் விவேகமானவன், நல்ல உத்தியோகமும் கூட. அவனிடம் ஒரு ஹெர்குலிஸ் ஸைக்கிளும் இருக்கிறது.

## இன்று

உலகம் எவ்வளவு மாறிவிட்டது! முன்பு கம்பௌண்டர் உபயோகித்து வந்த அதே நம்பகமான ஹெர்குலிஸ் ஸைக்கிள் இன்றும் அவன் மகன் கலாசாலைக்கு செல்ல உதவுகிறது!

**ஹெர்குலிஸ்** ஓர் ஸைக்கிள் மட்டும் அல்ல,

வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை



சுமார் 50 வருஷங்களாக உயர்தர ஸைக்கிள்களைத் தயாரித்துவரும் அனுபவ மிகுந்தவர்களால் இப்பொழுது, இந்த நுட்பவேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் ஸைக்கிள் டி. ஐ. ஸைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. அதன் உயர்தர அமைப்பையும், அதிகப் பிரயாசையில்லாமல் ஓடும் தன்மையையும் கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். ஸைக்கிள்களில் மிகச்சிறந்தது ஹெர்குலிஸ். ஆயினும் மிதமான விலையில் கிடைக்கிறது.

உங்கள் ஸைக்கிள் ஒரு சிறந்த முலதனம். **ஹெர்குலிஸ்** உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்.

இந்தியாவில் தயாரிப்பவர்கள்,

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

3 புதிய தயாரிப்புகளை
இந்தக் கோடையில்
உங்களுக்கு அளிக்கிறோம் !





ஆப்கன்
டாய்லட் பவுடர்

ஆப்கன்
டால்கம் பவுடர்






ஆப்கன் ஸ்னோ
அழகு சாதனங்களை
அளிப்பவர்களின் தயாரிப்பு

அடியா
கூந்தல் தைலம்
இரண்டு வாசனைகள்

ஈ. ஸ். பட்டான்வாலா
கன்னூட் ரோட், பம்பாய் - 27



மலர் 17 இதழ் 38

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

விளம்பி௵ சித்திரை மீ 7௳

# கைத்தறியும் கண்துடைப்பு உதவியும்

பாரத நாட்டில் விவசாயத்துக்கு அடுத்தபடி முக்கியமான தொழில் கைத்தறித் தொழிலாகும். இக் கைத்தறியை நம்பியே நாட்டில் பல கோடி மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். அதனால்தான் நெசவாளர்கள் குடும்பத்துக்குக் கால் வயிற்றுக் கஞ்சிக்கு ஏற்பாடு செய்து விட்டால் நாட்டில் பெரும் பகுதி பஞ்சம் நீங்கிவிடும் என்று கருதி, தேசபக்தர்கள் மேல் நாட்டு ஆலைத் துணிகளைப் பகிஷ்கரிக்கச் சொன்னார்கள். இவற்றின் காரணமாக அயல்நாட்டு மில் துணி இறக்குமதி பெரிதும் பாதிக்கப்பட்டது. உள்நாட்டுத் துணிக்குக் கிராக்கி ஏற்பட்டது. கைத்தறி நெசவாளர்கள் வாழ்வில் புது ஒளி பிறந்தது!

இது அடிமை நாடாக இருந்தபோது ஏற்பட்ட நிலை. சுதந்திர பாரதத்தில், காந்தி மகானின் வழியைப் பின்பற்றித் தியாக வாழ்க்கை நடத்திய தலைவர்களின் ஆட்சியில் கைத்தறி நெசவாளர்களின் நிலை மகிழ்ச்சியூட்டுவதாக இருக்கும்; வாழ்வு சிறக்கும் என்று எதிர்பார்த்தார்கள். அது வெறும் பகற்கனவாக ஆகிவிட்டிருக்கிறது! மேலை நாட்டு ஆலைகளினால் அவர்கள் வாழ்வு நசித்துப் போகவில்லை. உள்நாட்டு ஆலைகளினால் அவர்கள் வாழ்வு நாளுக்கு நாள் தேய்ந்து வருகிறது!

இவ்வளவு பரிதாபகரமான நிலையிலிருந்தும், நமது மந்திரிகள் பாரதத்தில் நெசவுத் தொழிலாளியின் கஷ்டத்துக்கு நிரந்தரமான பரிகாரம்காண முற்படாமல், நெசவாளர்களின் உண்மை நிலையை மறைத்து மூடுவதற்குத்தான் வழிசெய்து வருகிறார்கள்!

ஆண்டுதோறும் கைத்தறி 'வாரம்' நடத்துகிறார்கள். சர்வ கட்சித் தலைவர்களைக் கூப்பிட்டுப் பேசச் சொல்லுகிறார்கள். நாடகங்கள் போடுகிறார்கள். இசைக் கச்சேரிகள் நடத்துகிறார்கள். சாதாரண மக்களுக்கு நாட்டில் கைத்தறியாளர்கள் ரொம்பவும் சுபிட்சமும் சந்தோஷமுமாக இருப்பதாக ஒரு பிரமையை உண்டாக்கி விடுகிறார்கள். அவ்வளவுதான். நிரந்தரமான பிணி இருந்துகொண்டே தானிருக்கிறது!

கைத்தறித் துணியை வாங்குவோருக்கு ஊக்கம் அளிப்பதற்காகச் சில ஆண்டுகளுக்கு முன் ரூபாய்க்கு ஒன்றரையணா கழிவு (ரிபேட்) தருவதாகச் சர்க்கார் சொல்லியிருந்தார்கள். மேலும் கைத்தறிக்கு உதவுவதற்காக மில் துணி மீது 'செஸ்' வரியும் விதிக்கப்பட்டுவந்தது. அந்தரங்க சுத்தமில்லாத கண் துடைப்பு உதவி எத்தனை நாட்கள் நீடிக்கும்?

இந்த வருஷம் மில் துணியின் மீது விதிக்கப்பட்ட 'செஸ்' வரி எடுத்துவிடப்பட்டது. கைத்தறித் துணிக்கு அளிக்கப்பட்டு வந்த ரிபேட் தொகையும் குறைக்கப்பட்டது.

ஏற்கனவே கைத்தறித் துணிகள் ஏராளமாகக் கைவசம் சேர்ந்து வியாபாரமாகாமல் இருந்தன. இதனால் கைத்தறி நெசவாளர்களுக்கு வேலையில்லாத பெரும் கஷ்டம் மீண்டும் ஏற்படும் என்றதோர் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. கைத்தறி நெசவாளர் குடும்பங்களின் கஷ்டம் என்றால் தெருத் தெருவாகப் பட்டினிப் பட்டாளம்தான். இந்த நிலையில் மத்தியசர்க்கார் இப்படியொரு முடிவு செய்து சென்னை மந்திரிகளைத் திக்குமுக்காட வைத்து விட்டார்கள். எனினும் நமது சென்னை முதன் மந்திரி காமராஜும், தொழில் மந்திரி ஆர். வெங்கடராமனும் தில்லிக்கு விரைந்து சென்று ரூபாய்க்கு ஆறு பைசாக்கள் அதிகப்படியாக ரிபேட் வாங்கி வந்திருக்கிறார்கள். அதாவது, இனி ஒரு ரூபாய் பெறுமான முள்ள கைத்தறித் துணி வாங்கினால் இரண்டணா கழித்து வாங்கிக் கொள்வார்கள். இதனால் கைத்தறித் துணித் தேக்கம் சிறிது குறையலாம்.

ஆக, இந்த முயற்சியை உடனடியாக எடுத்துக்கொண்டு கைத்தறிக்குச் சிறிது புத்துயிர் அளித்த சென்னை மந்திரி சபைக்கு நமது பாராட்டுதல்கள் உரியதாகும்.

ஆனால் இப்படி எத்தனை நாட்களுக்கு நடத்த முடியும்? இப்பொழுது புதுதில்லிக்குப் பறந்து சென்று கொண்டு வந்த சஞ்சீவி போன்ற இந்த ஆறு பைசா ரிபேட் இரண்டு மாதங்கள்தான் நீடிக்கும்.

இந்த இரண்டு மாதங்களிலும் நெசவாளர்கள் நெய்து கொண்டுதான் இருப்பார்கள். இல்லாவிடில் பசியோடு இருக்க வேண்டியது. இரண்டு மாதங்களுக்குப் பிறகு என்ன? ''பழைய குருடி கதவைத் திறடி'' என்பது போல், கைத்தறியாளர் நிலைமை மோசமாகத்தானே போகும்!

ஆகவே, இந்த ரிபேட் சர்க்கார் கூட்டுறவுச் சங்கங்களில் தேங்கிக் கிடக்கும் சரக்கு சற்று வெளியேறுவதற்கு உதவும்; அவ்வளவுதான்! கூட்டுறவுச் சங்கங்களில் இடம் பெறாத கைத்தறியாளர்களின் தொகை, கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்தவர்களின் தொகையை விட அதிகம். அவர்களுக்கு இந்த உதவி எட்டவே செய்யாது.

ஆகவே கைத்தறியாளர்கள் நிலைக்கு, நிரந்தரமான பரிகாரம் தேடியாக வேண்டும். இதைத் தள்ளிப் போட்டுக் கொண்டிருப்பதில் பயனில்லை. சென்னை மந்திரிகள் தில்லிக்குச் சென்று ஆறு பைசா வாங்கி வந்ததில் ஒரு வெற்றிக் குதூகலம் அடையலாம். ''எங்களுக்குத் தில்லியில் எவ்வளவு செல்வாக்கு இருக்கிறது பாருங்கள்!'' என்று மார் தட்டிக் காண்பிக்கலாம். இவை யெல்லாம் நல்ல பிரசார தந்திரம்தான். ஆனால் பிரத்யட்ச நிலைக்கு ஒவ்வாது.

கைத்தறியாளர்களின் நிலையை நேரடியாகப் பார்த்துக் கொண்டிருக்கும் கைத்தறி போர்டார், இந்த ரிபேட், கைத்தறியாளர்களின் நிலையைச் சற்றும் உயர்த்தப் போவதில்லை என்பதை உணர்ந்து, மில் முதலாளிகளை ''ஐயா, உங்கள் உற்பத்தியைச் சற்றுக் குறைத்துக் கொள்ளுங்கள். எங்கள் கைத்தறி நெசவாளர்கள் பிழைப்பதற்கு வழி கோலுங்கள்!'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

முன்பு கைத்தறியாளர்கள் லங்காஷயர் மில் முதலாளிகளின் போட்டியால் நசித்து வந்தார்கள்! அவர்கள் கொடுமையிலிருந்து பாரத நாட்டு ஏழை நெசவாளர்களை அந்தக் காலத்துத் தேசபக்தர்கள் காப்பாற்றினார்கள். இப்போது உள்நாட்டு ஆலை முதலாளிகளிடமிருந்து ஏழை நெசவாளர்களை யார் காப்பாற்றப் போகிறார்கள்?

ஆலைகள் நடந்தால்தான் இந்தியாவுக்குப் போதுமான துணி உற்பத்தியாகும் என்பது டி. டி. கே. முதலியவர்களின் கொள்கை. அந்தக் கொள்கை இன்னும் மத்திய சர்க்காரால் விட்டு விடப் படவில்லை. மில் உற்பத்திக்கும் கைத்தறி உற்பத்திக்கும் போட்டியில்லாமல் ஒரு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது

## பானை நிறையுமா?



## காளைகள் அடங்குமா ?




காங்கிரஸ் கட்சியில் லஞ்ச ஊழலும் கோஷ்டிப் பூசலும் அதிகரித்து வருகின்றன. இவற்றைக் கட்டுப்படுத்தக் காங்கிரஸ் அக்கிராசனர் தேபர் முயற்சி செய்து வருகிறார்.

---

நம்முடைய கட்சி. மின் உற்பத்தி இருந்தே தீர வேண்டும் என்பதற்கும் இந்தக் கட்சிக்கும் முரண்பாடு இல்லை. இரண்டும்கூடச் சேர்ந்து வாழலாம்.

ஆனால் இரண்டிற்கிடையில் போட்டியிருக்கலாகாது. ஒரு பக்கத்திலிருந்து 'செஸ்' வாங்கி இன்னொரு பக்கத்தில் ரிபேட் கொடுப்பதில் போட்டி இல்லாமற் போகாது. கண்ணீர்த் துடைக்கும் மேல்வாரியான சமரசம் தான் ரிபேட்டின் பயனாகும். அரசியல் வாதிகளுக்கு இதில் லாபமே தவிர, நெசவாளிகளுக்கு இதில் பயனில்லை.

# இந்தோனீசியாவில் கலகம்

இந்தோனீசிய ஜனாதிபதியைப் பாரத மக்கள் அறிவார்கள். அவர் பாரதப் பிரதமர் நேருஜியிடம் பெரு மதிப்பும் மரியாதையும் கொண்டுள்ளவர். பாரத மக்களிடம் பேரன்பு கொண்டவர். பாரத நாட்டுக்குப் பலமுறை விஜயம் செய்திருக்கிறார். இதற்குக் காரணம் ஜவாஹர்லால் நேரு அவர்களும் டாக்டர் சுகர்னோவும் ஒரே மாதிரியான கொள்கைகளை உடையவர்களாக இருப்பதுதான்.

டாக்டர் சுகர்னோவின் தலைமையில் இந்தோனீசியத் தீவுகள் டச்சு ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் அடைந்தன. சுதந்திர இந்தோனீசியாவை, மேற்கத்திய வல்லரசுகள் தங்கள் பிடியில் போட்டுக் கொள்ளப் பார்த்தன. இந்தோனீசியத் தலைவர் மேற்கத்திய கோஷ்டியிலோ, கம்யூனிஸ்ட் கோஷ்டியிலோ சேர விரும்பாமல் பாரத நாட்டைப் போல் சுதந்திரமான அயல்நாட்டுக் கொள்கையைக் கடைப்பிடிக்க ஆரம்பித்தார். மேற்கத்திய நாடுகளிடமும் நேச பாவம் கொண்டார். ருஷ்யா சீனா முதலிய கம்யூனிஸ்ட் நாடுகளிடமும் நட்பு பூண்டார். இந்தக் கொள்கை மேற்கத்திய வல்லரசுகளுக்குப் பிடிக்கவில்லை. டாக்டர் சுகர்னோ ஆயுத தளவாடங்கள் வேண்டுமென்று அமெரிக்காவைக் கேட்டபோது, அது மறுத்துவிட்டது. ஆகவே டாக்டர் சுகர்னோ, ருஷ்யச் சார்புள்ள ஐரோப்பிய நாடுகளில் அவற்றை வாங்கினார். இது மேற்கத்திய வல்லரசுகளுக்குப் பிடிக்கவில்லை.

மேலும் உள்நாட்டில் பல கட்சிகள். கம்யூனிஸ்ட் கட்சி சற்றுச் செல்வாக்கு அதிகமுள்ள

கட்சி. அந்தக் கட்சியுடன் டாக்டர் சுகர்ணோ நேசமுடன் இருக்கிறார் என்று இந்தோனீசிய ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் உள் நாட்டில் கலகம் செய்ய ஆரம்பித்துச் சில நாட்களாக நடத்தி வருகிறார்கள். இந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பும் மேற்கத்தியர்கள் ''சுகர்ணோ ஒரு கம்யூனிஸ்ட்'' என்று துஷ்பிரசாரம் செய்யத் தொடங்கி யிருக்கின்றனர். கலகக்காரர்களுக்கு வேறு ரகசியமாக அமெரிக்கா ஆயுதங்கள் அளித்து உதவி வருகிறது. இப்படிப் பலவிதமாக இந்தோனீசியாவில் மேற்கத்திய வல்லரசுகள் புகுந்து அமைதியைக் கெடுத்து வருகின்றன என்ற ஐயம் உலக மக்களிடையே எழுந்துள்ளது.

டாக்டர் சுகர்ணோ தம் மக்களிடையே செல்வாக்கு மிகுந்த மனிதர். அதனால் அவர் இக்கலகங்களை யெல்லாம் வெற்றிகரமாகச் சமாளித்து விடுவார் என்பதில் ஐயமில்லை!

# விற்பனை வரி விஷயம்

சென்னை விற்பனை வரி சம்பந்தமாக டாக்டர் லோகநாதன் செய்த சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக் கொண்டுள்ளது என்றும், அவற்றை அமுல் நடத்த விரிவான ஒரு மசோதா தயாராகி வருகிறதென்றும் சென்னை அரசாங்கம் சட்டசபையில் அறிவித்தபோது அதைக் கேட்டு வியாபாரிகள் மகிழ்ந்தனர். அவர்கள் பத்து வருஷங்களாக அனுபவித்து வந்த தொல்லைகள் ஓரளவுக்கேனும் தீரும் என்று எண்ணிக் களிப்பெய்தினர். ஆனால், என்ன ஏமாற்றம்! எதிர்பார்த்த மசோதாவுக்குப் பல விதத்திலும் மாறாக அமைந்திருந்தது பிரசுரமான மசோதா.

இப்படிப்பட்ட விரிவான திருத்தங்களைச் செய்து மாறுதல் செய்ய அரசாங்கம் தீர்மானித்திருந்தால் டாக்டர் லோகநாதனுடைய சிபாரிசுகளில்லாமலே இவற்றைச் செய்திருக்கலாம். அதற்காக விசாரணை ஏற்படுத்தியிருக்க வேண்டியதில்லை. அவ்விசாரணையின் சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிறது என்று பறைசாற்றவும் வேண்டியதில்லை.

வியாபாரிகள் இம்மசோதாவைப் பார்த்த பின் எவ்வளவு தூரம் அதிருப்தியடைந்திருக்கிறார்கள் என்பது அவர்கள் நடத்திக் காட்டிய கடையடைப்பிலிருந்தும் கண்டனக் கூட்டத்திலிருந்தும் ஓரளவு தெரிந்தன. சென்னை சில்லறை வியாபாரிகள் சங்கம் விடுத்த வேண்டுகோளுக்கு ஆதரவு எவ்வளவு அமோகமாக இருந்ததென்பது ஒருநாள் ஹர்த்தாலிலிருந்து நன்கு தெரிந்தது.

சிபாரிசுகளுக்கும் மசோதாவுக்குமுள்ள வித்தியாசங்களைக் கவனித்தால் வர்த்தகர்களுடைய அதிருப்திக்குக் காரணம் விளங்கும்.

பல முனை வரி விதிக்கப்படலாம் என்ற இனங்களுக்கு வரி விகிதம் ஒரு சதவீதம் இருந்தால் போதும் என்பது சிபார்சு. மசோதாவில் இது 2 சதவீதமாகவே விதிக்கப்படுகிறது.

ஒரு முனை வரி விதிக்கப்படலாம் என்று 67 இனங்களுக்கு வரி விகிதங்கள் குறைந்தபட்சமாக ½ சத விகிதத்திலிருந்து அதிகபட்சமாக ஆறு சதவீதம் செய்யப்பட்டிருக்கிறது சிபாரிசில். ஒரு சதவீதம் குறைந்தபட்சமாகவும் ஏழு சத வீதம் அதிகபட்சமாகவும் அமைந்திருக்கிறது மசோதாவில்.

வரியிலிருந்து விலக்களிக்கப்பட்ட இனங்களில் அழுகிப் போகக் கூடிய பொருள்கள் என்று மதிக்கப்படும் காய்கறி, பழங்கள், உருளைக் கிழங்கு, பச்சை மிளகாய் போன்றவைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தற்போது அமுலிலிருக்கும் விற்பனை வரிச் சட்டத்திலேயே இவ்விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. புது மசோதாவில் இவ்விலக்கு எடுக்கப்பட்டிருக்கின்றது. வருஷத்துக்கு 7500 ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்யும் வர்த்தகர்கள் கட்டாயமாகப் பதிவு செய்து 'லைசென்ஸ்' எடுத்துக் கொள்ள வேண்டுமென்கிறது சிபாரிசு. இந்த வரம்பு 4000 ரூபாயாக்கப் பட்டிருக்கிறது மசோதாவில். ரூபாய் 10000 வரையில் உள்ள விற்பனைக்கு வரி விலக்கு அளிக்கப்பட வேண்டுமென்றும், ரூபாய் 10,000க்குமேல் 25,000 வரையில் உள்ள விற்பனைக்கும் கணக்கு வைத்துக் கொண்டு அவதிப்படும் தொல்லையைத் தவிர்க்க வேண்டி, உத்தேச வரி மாதத்துக்கு ரூ. 5, 8, 12 என்ற அடிப்படையில் வசூலிக்கலாம் என்பதும் சிபாரிசு. ரூபாய் ஐயாயிரத்திலிருந்து ரூபாய் 25,000 வரையில் செய்யப்படும் விற்பனைக்கு மாதம் ரூபாய் 5, 10, 15, 20 என்ற அடிப்படையில் உத்தேச வரி விதிக்கப்பட்டிருக்கிறது மசோதாவில். இந்த விதியின் கீழ் சிபாரிசில் முதல் கட்டம் ரூ. 10000க்கு மேலுள்ள விற்பனை. மசோதாவின்படி இது 5000 ரூபாயாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. உத்தேச வரி விகிதம் சராசரி ஒரு சதவீத அளவுக்கு அதிகமாகாத வகையில் நிர்ணயிக்கப்பட்டிருப்பதாகச் சிபாரிசுகள் கூறுகின்றன. மசோதாவில் இவை இரண்டு சத அளவில் விதிக்கப்படுகின்றன.

இந்த ஜாபிதாவிலிருந்து சிபார்சுகளுக்கும் மசோதாவுக்கும் எவ்வளவு மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்பது விளங்கும்.

இந்தச் சிபாரிசுகளால் அரசாங்கத்தின் வருமானம் இப்போது கிடைத்துக் கொண்டிருக்கும் அளவைக் காட்டிலும் குறையாது. ஒருகால் அதிகமாக கூடும் என்று தீர்க்கமாகப் பரிசீலனை செய்த பின்னரே டாக்டர் லோகநாதன் தம்முடைய சிபார்சுகளைச் செய்திருக்கிறார். அப்படியிருந்தும், வரி விகிதங்களை அதிகரித்தும், இனங்களை விரிவுபடுத்தியும், விலக்குகளை நீக்கியும், வரம்புகளைக் குறைத்தும் வியாபாரிகளுக்கு இடுக்கண் விளைவிக்கும் முறையில் சர்க்கார் மசோதா தயாரித்திருக்கிறது. இதை எதிர்த்து வியாபாரிகள் எடுத்துக் கொண்ட முயற்சி பயன் அளிக்குமென்றே நம்புகிறோம். அவர்கள் விடுத்த கோரிக்கைகளையும், நிறைவேற்றிய தீர்மானங்களையும், அரசாங்கமும், தற்போது இம்மசோதாவைப் பரிசீலிக்கும் பொறுக்குக் கமிட்டி அங்கத்தினர்களும் கவனத்துடன் ஆராய்ந்து பரிகாரம் அளிப்பது அவர்களுடைய கடமையாகும்.

# அருள் வாக்கு

அழுக்கைப் போக்க வேண்டி நமது உடலையும் ஆடைகளையும் அன்றாடம் சுத்தம் செய்கிறோம். நாம் விழித்திருக்கும் காலத்தில் ஒவ்வொரு நிமிஷமும் மனத்தில் அழுக்கு சேருகிறது. கெட்ட எண்ணங்கள், காமம், குரோதம், ஆசாபாசங்கள் இவற்றினால் மனத்தில் அழுக்குப்படுகிறது. உடலைக் கழுவுவதுபோல் ஒவ்வொரு நாளும் மனத்தையும் கழுவவேண்டும். மனத்தில் அழுக்கு சேர்ந்தால் கஷ்டங்களும் துக்கமும் அதிகரிக்கும். மன அழுக்கைப் போக்கக்கூடிய ஜலம் தியானம் தான். ஆகவே, ஒவ்வொரு நாளும் சில நிமிஷங்களாவது பகவானை தியானம் செய்து அவனது அருளால் நமது மனத்தைப் பரிசுத்தப்படுத்த வேண்டும். ஒருவன் எவ்வளவு கெட்டவனாக இருந்தாலும் அம்பாள் சன்னிதானத்தில் அவன் மனம் திருந்தும்.

அம்பாளின் சொரூபமான ஸ்ரீ கன்னிகாபரமேச்வரி ஆர்ய வைசிய சமூகத்தினருக்கு முக்கிய ஆராத்ய தேவதை. அம்பாளின் மற்றொரு சொரூபமான ஸ்ரீ காமாக்ஷிதான் காஞ்சீபுரத்தில் ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறாள். மக்களுக்கு நன்னெறி புகட்ட சாஸ்திரங்களில் கூறியுள்ள தர்மங்களை உபதேசிக்க வேண்டி ஆதிசங்கரர் மடங்களை ஸ்தாபித்தார்.

காலமாறுபாட்டினால் நமது சமூக நிலையிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. சாஸ்திரங்களால் தடுக்கப்பட்டுள்ள ஆகாரத்தை மக்கள் சாப்பிடுகிறார்கள். நெறிதவறி, தன்மை குறைந்து வருகிறது. சமூகத்தில் வகுப்பு, ஜாதி ஏற்பாடு செய்தது பிளவுபடுத்த அல்ல. கடமைகளை ஒட்டி ஜாதி வித்தியாசம் செய்யப்பட்டது. அந்தந்த சமூகம் அதனதன் நலன்களைப் பஞ்சாயத்துக்கள் நாட்டாண்மை மூலம் பாதுகாக்க அந்த ஏற்பாடு எளிதாக இருந்தது. தவற்றைக் கண்டு திருத்த அதற்கு வசதி உண்டு. இந்த ஏற்பாட்டினால் சமூகம் சீர்ப்பட வழி இருந்தது. அவரவர் கடமைகளைச் செய்து பொதுவாகச் சமூகநலனைத் தேடி வந்தார்கள். சாஸ்திர முறையான வாழ்க்கை சிஷ்டாசாரங்களை உபதேசிப்பது இந்தப் பீடாதிபதி ஹோதாவில் எனது கடமை. இந்தப் பீடத்தின் மகிமையும் பலமும் ஜனங்கள் காட்டும் பக்தியையே பொறுத்திருக்கின்றன. மேனாட்டினர் இந்தியாவைக் கௌரவிக்கிறார்கள். இந்தியாவின் செல்வத்தைக் கண்டு அல்ல. இந் நாடு போற்றி வந்துள்ள ஆத்மீக அறிவைக் கொண்டே அன்னியர் கவரப்படுகின்றனர். இத்தேசத்தினரும் அந்த ஆத்ம விவேகத்தைப் போற்றி அதற்கான சாஸ்திர நெறியுடன் வாழ்ந்தால் பிறர் இன்னும் அதிகமாகக் கௌரவிக்க முடியும்.

—ஸ்ரீசங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# சம்பூர்ண ராமாயணம்

**[ராஜாஜியுடன் நிருபர் பேச்சு]**

சினிமாவைப் பற்றி ராஜாஜியின் அபிப்பிராயம் என்னவென்பது யாவரும் அறிந்ததே. என்றாலும் "ராமாயணத்தைத் திரைப்படமாக எடுத்திருக்கிறோம். நீங்கள் வந்து அவசியம் பார்க்க வேண்டும்" என்று எம். ஏ. வி. பிக்சர்ஸின் சம்பந்தப்பட்டவர்கள் மிகவும் வற்புறுத்தியதின் பேரில் ராஜாஜி பார்க்கச் சென்றார். பேச வேண்டியதில்லை என்ற வாக்குறுதியின் பேரில் உடல் நிலை சரியாக இல்லாதிருந்தும் சென்றார். சினிமாவைப் பார்த்துவிட்டு, "இந்தப்படத்தை எடுத்தவருக்கு என் வாழ்த்து! பரதனுக்கும் என் வாழ்த்து!" என்று கூறிவிட்டுராஜாஜி விடைபெற்றுக் கொண்டு வந்து விட்டார். படம் எடுத்தவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பெரும் திருப்தியளித்தது.

ஆனால் இது எனக்குத் திருப்தியளிக்கவில்லை. ராஜாஜியை, "இவ்வளவுதானா நீங்கள் சொல்ல வேண்டியது? இதற்கு மேல் உங்களுக்குச் சொல்ல ஒன்றும் இல்லையா?" என்று கேட்டு வைத்தேன்.

"ஒரு அம்சத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டியிருக்கிறது. புராணங்களை எடுத்துப் பாமரர்களுக்குப் படமாகக் காட்டுவது மிகவும் நல்ல பணி. அந்தத் துறையில் கலை அம்சம் மேலும் மேலும் விருத்தியாவதற்கு இடம் இருக்கிறது" என்றார் ராஜாஜி.

ஏதோ சொல்ல வந்து திடீர் என்று நிறுத்தி விட்டாற்போல் தோன்றியது. அதனால் மீண்டும் "அவ்வளவுதானா? இன்னும் ஒன்றுமில்லையா?" என்றேன்.

"இந்த எம். ஏ. வி. படத்தில் வரும் கூனிக் காட்சிகளைப் பற்றி ஒருவார்த்தை சொல்ல வேண்டியிருக்கிறது" என்றார்.

"அது என்ன?" என்று கேட்டேன்.

"கம்பர் உள்பட பக்தர்கள் கொள்கை என்னவென்றால் அரக்கர்கள் அழிவதற்காகக் கூனியின் அவதாரமும் காரியமும் நிகழ்ந்தன என்பது. இதற்கே துளசிராமாயணத்தில்கூட அழுத்தம் தரப்பட்டிருக்கிறது. வால்மீகியின் பெரும் காப்பியத்தில்கூனியின் நடவடிக்கைக்குக் காரணம் கைகேயியினிடம் அவளுக்கு இருந்த பட்சபாதமே என்று சித்திரிக்கப்பட்டிருக்கிறது. வால்மீகியில் ராமனுடைய பால்ய பருவ விளையாட்டைப் பற்றிப் பிரஸ்தாபமே இல்லை. கம்பராமாயணத்திலும் இதைப் பற்றி ஒரு பாட்டுத்தான் இருக்கிறது. அந்த ஆதாரத்தை வைத்துக் கொண்டு எம். ஏ. வி. படத்தில் ராமனுடைய பால்ய பருவ விளையாட்டையும் கூனி முதுகின் பேரில் உண்டை வீசியதையும் கொஞ்சம் அதிகமாக நீட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. இதைக் கொஞ்சம் குறைத்திருக்கலாம். குழந்தைப் பருவ விளையாட்டின் பயனாகக் கூனிக்குத் துவேஷம் வளர்ந்து விட்டதாக எம். ஏ. வி. படத்தில் அதிகமாக வற்புறுத்தப்பட்டிருக்கிறது. இதற்கு ஆதாரம் இருந்த போதிலும், படத்தில் அவ்வளவு பெரும் பாகம் தந்திருக்க வேண்டியதில்லை. கைகேயியின் பந்துவும் வேலைக்காரியுமான கூனி, தன் எஜமானியைப் பற்றிக் கவலை கொண்டு சூழ்ச்சி செய்ததில் இயற்கையழகும் கலைரஸமும் இருப்பதால் குழந்தை பேரில் கோபமே ராமாயணத்தின் அடிப்படைக் காரண நிகழ்ச்சி என்று எண்ணுவதற்கு இடமில்லாமற் செய்திருக்கலாம்" என்றார்.

"இந்தப் படம் லாபகரமாக ஓடும் என்று நினைக்கிறீர்களா?" என்றேன்.

"ஓடும். நம்முடைய நாட்டில்—வடக்கேயாகிலும் சரி, தெற்கேயாகிலும் சரி - இதிகாச, புராணக் கதைகளை வைத்து, பக்தித் துறையில் எடுக்கப்பட்ட நல்ல படங்களைத்தான் பெரும் பாலோர் விரும்புகிறார்கள். சளைக்காமல் திரும்பத் திரும்பப் பார்க்கப் பிரியப் படுகிறார்கள். பழைய ராகங்களை நன்றாகப் பாடும் சங்கீதக் கச்சேரிக்குத்தான் கிராக்கி. அதைப் போலவே படங்களும். இந்தச் சம்பூர்ண ராமாயணத்தில் பரதனுடைய நடிப்பைப் பார்த்தவர்கள் எத்தனை முறையானாலும் திரும்பத் திரும்பப் படத்தைப் பார்க்க வருவார்கள் என்பதில் சந்தேகமில்லை" என்றார்.

"சபாஷ்! சிவாஜி கணேசன்!" என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன்.



# நியாயம் கிடைக்குமா ?

கொழும்பு, ஏப்ரல் 11டை

இலங்கையில் கொஞ்ச காலமாக நெருக்கடிகள் அடுத்தடுத்து ஏற்பட்ட வண்ணமாயிருப்பதினால் மக்கள் அதிசயப்படும் சக்தியையே இழந்து விட்டார்களென்று கூறுவது மிகையாகாது.

சென்ற வாரம் ஸ்ரீ எதிர்ப்பு இயக்கமும் தார் சட்டி இயக்கமும் துப்பாக்கிப் பிரயோகமும் பரபரப்பான நிலைமையை உண்டு பண்ணியதைப் பின்பற்றி இவ்வாரம் இன்னொரு முக்கியமான சம்பவம் நடைபெற்றிருக்கிறது. சென்ற வருடம் நாட்டில் ரத்தக் களரியை உண்டுபண்ணிய வகுப்புக் கலகங்களின் விளைவாகப் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா தமிழரசுக் கட்சித் தலைவர்களுடன் ஒரு மொழி ஒப்பந்தம் செய்து கொண்டாரல்லவா ? அந்த ஒப்பந்தத்தை அமுல் நடத்துவதற்கில்லையென்று பிரதமர் இவ்வாரம் அறிவித்திருக்கிறார். குதிரை குழியைப் பறித்ததோடு நில்லாமல் ஆளையும் தள்ளி மூடியதாக ஒரு கதையுண்டு. அதைப்போல், செய்து கொண்ட ஒப்பந்தத்தை அமுல் நடத்த முடியாதென்று பிரதம மந்திரி அறிவித்ததுடன் நிற்காமல் இதற்குக் காரணம் தமிழரசுக் கட்சிதானென்று அறிவித்திருக்கிறார் ! தமிழ் அரசுக் கட்சியினர் நடத்திய சிங்கள ஸ்ரீ எதிர்ப்பு சத்தியாக்கிரகம் நாட்டில் நெருக்கடியான நிலைமையை உண்டுபண்ணி, மொழி ஒப்பந்தத்தை அமுல் நடத்த முடியாத சங்கடத்தை உண்டுபண்ணிவிட்டதென்பது பிரதம மந்திரியின் வாதம்.






மொழி ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டுப் பல மாதங்களாகியும் அதை அமுல் நடத்த அரசாங்கம் எவ்வித முயற்சியும் செய்யவில்லை. அதோடு வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதைப் போல் சிங்கள ஸ்ரீ எழுத்துப் பொறித்த பஸ்களை யாழ்ப்பாணத்துக்கு அனுப்ப வேண்டாமென்று தமிழ்த் தலைவர்கள் கோரியபடி அரசாங்கம் செய்திருந்தால் நெருக்கடி ஏன் ஏற்படப் போகிறது ? அரசாங்கம் வேண்டுமென்றே நெருக்கடியை விளைவித்துவிட்டு, மொழி ஒப்பந்தத்தை ரத்துச் செய்ய நொண்டிச்சாக்கு சொல்லுகிறது என்று தமிழரசுக் கட்சித் தலைவர்கள் கூறுகிறார்கள்.

இவ்வாரம் பார்லிமெண்டிலும் மொழி நெருக்கடியைப் பற்றி விவாதம் நடந்தது. அந்த விவாதம் ஒருவர் மீது மற்றொருவர் குற்றம் சாட்டுவதாயிருந்ததே தவிர வகுப்பு ஒற்றுமையை நிலைநாட்ட ஒருவரும் உருவான யோசனைகளைச் சொல்லக் காணோம்.

மொழி ஒப்பந்தம் ரத்தாகி விட்டதற்காக யாரும் ஒரு சொட்டுக் கண்ணீரும் சிந்துவார்களென்று தோன்றவில்லை. சென்ற வருடம் வகுப்புக் கலகத்தை அடக்கிய இந்த ஒப்பந்தம் வரவேற்கப்பட்டதே தவிர தமிழரசுக் கட்சி உள்பட யாருக்கும் அந்த ஒப்பந்தம் திருப்தியைக் கொடுக்கவில்லை. மொழிப் பிரச்னையை அது தீர்த்து வைக்கவுமில்லை. தோட்டப்பகுதிகளில் வசிக்கும் பத்து லட்சம் இந்திய வம்சாவளியினர்களை இந்த ஒப்பந்தம் ஒதுக்கி வைத்திருந்தது. ஆகையால் ஒப்பந்தம் செயலற்றுப் போனதில் யாரும் வருந்த நியாயமில்லை. ஆனால் ஒப்பந்தத்தைப் பிரதம மந்திரி ரத்துச் செய்த சூழ்நிலைதான் வருந்தத்தக்கது. மொழி வெறியர்கள் கூட்டம் கூடிக் கோஷம் செய்கிறார்களென்பதற்காக ஒரு நாட்டின் பிரதம மந்திரி, செய்து கொண்ட ஒப்பந்தத்தை ரத்துச் செய்தால் இந்நிலைமை பெருமைப்படக் கூடியதில்லை.

அடுத்தபடி என்ன என்பதுதான் இப்பொழுது எல்லோரும் கேட்கும் கேள்வி. மொழி ஒப்பந்தத்தை அமுல் நடத்தா விட்டாலும் தமிழ் மக்களுக்கு நியாயம் வழங்கப்படும் என்று பிரதம மந்திரி கூறுகிறார். எவ்விதம் அவர் நியாயம் வழங்கப் போகிறார் ? பல்லாண்டு பல்லாண்டுகளாக இருந்து வந்ததைப் போல் தமிழ் மக்களுக்கு நியாயம் செய்வதாயிருக்க முடியாது. அரசாங்கம் இவ்விதம் செய்ய வேண்டுமாயின் இன்று நவக்கிரகங்களைப் போல மூலைக்கு ஒருவராகப் பிரிந்து நிற்கும் தமிழ்த் தலைவர்கள் இன்றையப் பேராபத்தை நினைத்தாவது ஒன்றுபட வேண்டும். ஒன்றுபட்டால்தான் வாழ்வு உண்டு என்பதை அவர்கள் உணரும் வரையில் கதிமோட்சம் ஏற்படப் போவதில்லை. — ரஜனி



## திருமலையில் திருமணம்

ராஜாஜியின் பேத்தி ஸ்ரீமதி இந்திராவுக்கும் 'மான் அனந்தநாராயணனுக்கும் சென்ற 6ம் தேதி நுப்பதி—திருமலையில் திருமணம் வெகு சிறப்பாக டைபெற்றது. இந்த மணமக்களைப் போன்ற ாக்கியசாலிகள் யாருமே இருக்க முடியாது.

கலியுகத்திலே கண்கண்ட கடவுளாக வணங்கும் நுப்பதி வேங்கடேசப் பெருமானின் சந்நிதியில், ாரத மக்களின் தனிப் பெரும் தலைவராக விளங்கும் 'ஜாஜி திருமணம் நடத்தி வைக்கும் பேறு யாரே பற முடியும்? அன்றையத் திருமணப் பந்தலில் 'ஜாஜியைப் பார்த்தவர்கள், ஜனக மகாராஜனும் ப்படித்தான் சீதைக்குத் திருமணம் நடத்தி வைத் நுக்க வேண்டும் என்று நினைத்தார்கள்!

ராஜாஜியின் பால்ய நண்பரும் ராஜாஜியை விட த்தவருமான பங்களூர் நவரத்ன ராமராவ், திரு .பொ.சி. சதாசிவம் தம்பதிகள், காளா சுப்பாராவ் . எஸ். நாராயணசாமி அய்யர் இன்னும் பல ண்பர்களும் உறவினர்களும் வந்துசிறப்பித்தார்கள். னுதிபதி ராஜேந்திர பிரசாத், பிரதமர் நேரு, ம்பாய் கவர்னர் ஸ்ரீ பிரகாசா, சென்னை ராஜ்ய ந்திரிகள், ஆந்திர முதன் மந்திரி முதலியவர்களிட நந்து வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

ஸ்ரீ வேங்கடாசலபதியின் அருளால் மணமக்கள் லா நலன்களையும் பெற்று நீடூழி காலம் வாழ்ந்து னிய இல்லறம் நடத்துவார்களாக.







## நல்ல ஆரம்பம் !

புத்தாண்டு மலரை வெகு நல்ல முறையில் கொண்டு வந்திருக்கிறீர்கள். குறிப்பாக, திருமதி ரங்கநாயகியின் சிறுகதை அபார மான கற்பனை — வெகு அபூர்வமானதும் கூட — அவளுடைய 'மாப்பிள்ளை விருந்தை' வெகுவாக ரசித்தவன் நான். இப்போது எழுதியிருக்கும் கதையும் கருத்தாழமும் கற் பனைச் செறிவும் நிறைந்து காணப்படுகிறது.

பொங்கி வரும் பெருநிலவைக் கண்டேன். ஆரம்பம் எடுப்பாக இருக்கிறது. முக்கியமாக ஆசிரியரின் முன்னுரையைப் படிக்கும்போது, மறைந்த மேதை கல்கி அவர்களின் எழுத்துத் தான் என் நினைவுக்கு வந்தது. வரப்போகும் தொடர்ச்சிக்கு நல்லதொரு கட்டியம் கூறு கிறது நாவலின் ஆரம்பம்......அதற்கு என் பாராட்டுக்கள்.

ஸ்ரீரங்கம்
11—4—58
டி. ராமன்

## பாராட்டுகிறோம் !

'கல்கி' புத்தாண்டுமலர் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமி களின் ஸ்ரீமுகம் எல்லோருக்கும் ஆசி கூறுவது போல் உள்ளது. ஸ்ரீ ராஜாஜியின் புது வருஷ வாழ்த்துக்கு நேயர்கள் அனைவரும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்கள். ஸ்ரீ சங்க ராச்சாரிய சுவாமிகளின் முகப்புப் படம் 'பிரேம்' போட்டு வைக்கக் கூடியதாக உள்ளது. நற்றிணைக் காட்சிகள், கவிச்சக்கர வர்த்தி கம்பர் சித்திரக் காட்சிகள் வரவேற் கத்தக்க அம்சங்கள் ; பாராட்டக் கூடியவை.

சேலம்
11—4—58
ஆ. நடராஜன்

## மனம் மாறினேன் !

கல்கி விலை 30 நயா பைசா ஆனவுடன் கல்கி வாங்குவதை நிறுத்தியவர்களுள் நானும் ஒருத்தி. கடந்த ஒரு வாரமாக இவ்வூரில் எங்கு சென்றாலும் ஒரே 'பொங்கி வரும் பெருநிலவு' விளம்பரங்களாக ஒட்டப்பட் டிருந்தன. இந்த வாரக் கல்கி மாத்திரம் வாங்கிப் பார்க்கலாமே என்று இன்று காலை ஒரு 'கல்கி'ப் பிரதி வாங்கச் சொன்னேன். ஆகா ! இனிமேல் கல்கி விலை 50 நயா பைசா வாக உயர்த்தினால் கூட வாங்குவதை நிறுத்தப் போவதில்லை. கி. ராஜேந்திரனின் 'பொங்கி வரும் பெருநிலவு' எங்கள் ஆவலை மேலும் மேலும் பொங்கிவரச் செய்கிறது. ஸ்ரீ ஆசார்யாள் அவர்களின் படத்தைத்தான் எப்படிப் புகழ்வது ?

பம்பாய்
10-4-58
ஸ்ரீமதி சரஸ்வதி ஜெயராமன்

## அற்புதமான மலர்

'கல்கி'யின் புத்தாண்டு மலர் கண்டேன். வெகு அற்புதம். ஸ்ரீபகவத் பாதாளின் ஒளி மயமான திருவுருவப்படமும், அதையடுத்து வெளியாகியுள்ள அவர் தம் மெய்யெழுத்தும் தமிழர்களை ஆசீர்வதிப்பதுபோல் அமைந் திருக்கின்றன.

நமது தலைத்தலைவர் ராஜாஜி அவர்களது சின்னஞ்சிறு வாக்கியங்களின் மூலம், ஒரு ஆங்கிலக் கவிதையைத் தழுவியதாக இருப் பினும், நல்லதொரு சூழ்நிலையில், தனக்கே உரித்தான ஆத்மஞான போதனையையும் இணைத்து எழுதியுள்ள சாணக்கியத்திறனுக் குத் தலைவணங்காமல் இருக்க முடியவில்லை. இளைஞர் ராஜேந்திரனது கைத்திறனை நாங்கள் அறிவோம். மொழியறிவும், பற்றும், வன்மை யும் உயரிய நகைச்சுவையையும் தந்தையின் சொத்தாகப் பெற்றிருக்கும் பெரும் பேறு படைத்தவரன்றோ அவர் ? அவரது முன் னுரையிலுள்ள விநயம், பீடிகையின் தோரணை இவைகளெல்லாம் நமது பேரா சிரியரை (ரா. கி) நினைவூட்டியது.

நா. பா. அநுத்தமா, ரங்கநாயகி இவர்க ளது புகழ் பெற்ற பேனாக்கள் வடித்துத் தந்துள்ள சொல்லோவியங்களுக்கு, என்றுமே தமிழ்நாட்டில் பெரும் மதிப்புண்டு. "பாவிச் சிறு உலகே": "வெள்ளெழுத்து நீங்குமா?" இரண்டையும் மீண்டும் மீண்டும் ஸ்ரீமான் பொதுஜனம் படித்தால், இன்றைய உலகினை நன்கு அறிவார்கள்.

புதுதில்லி
10—4—58
ஏ. ஆர். ராஜாமணி

## தனிச் சிறப்பு !

'கல்கி' புத்தாண்டு மலரைப் பார்த் தேன். அளவில்லா ஆனந்தம் அடைந் தேன். இம்மலரில் கி. ராஜேந்திரன் எழுதும் "பொங்கிவரும் பெருநிலவு" தொடர்கதை தனிச் சிறப்பாக விளங்குகின்றது. ராஜாஜி யின் புதுவருஷ வாழ்த்தும், மீராபென் அவர் களின் "வெள்ளெழுத்து நீங்குமா?" என்ற கட்டுரையும் இக் 'கல்கி' கடல்கடந்து செல்லும் நாட்டுக்கு உகந்த பத்திரிகை என்பதை நிரூபிக்கின்றது.

தேனாச்
11—4—58
ஜெ. ராமசாமி

## சர்க்கார் கவனிக்குமா?

சிதம்பரம் தாலுக்காவிலேயே வறண்ட பிர்க்கா ஸ்ரீமுஷ்ணம் ஆகும். இந்தப் பிர்க்கா சமுதாய நலத் திட்டத்தில் இதுவரையில் சேர்க்கப்படவில்லை.

மழை பொய்த்துப் போனாலும் வீராணம் ஏரியின்மூலம் பாசனத்தைப் பெற்றுச் செழிப் புற்றிருக்கும் மற்றப் பிர்க்காக்கள் மேற்படி திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. மழை யையே நம்பி வாழும் வறண்ட பிரதேசம் ஒதுக்கப்பட்டு விட்டது. இதுதான் கிராமாபி விருத்தியா? தேசப் பிதாவின் எண்ணப்படி நாட்டு நிர்வாகம் நடப்பது உண்மையானால் பின்னடைந்துள்ள கிராமங்களே முதலில் முன்னேற்றமடைய வேண்டும் ;

தெ. ஆ. மாவட்டம்
26—3—58
மாதவன்

# மேஜை



## ஆமை வேகம்!

கிராம மராமத்து இலாகா மந்திரி அவர்கள், தம் இலாகா அதிகாரிகள் திறம்படச் செயலாற்றுவதாகப் புகழ்ந்து பாராட்டியிருக்கும் செய்தியை இன்றையத் தினப் பத்திரிகையில் வாசித்தேன். இவ்வூர்வாசியாகிய எனக்கு இது வேடிக்கையாக இருக்கிறது! வாணிப நகரமாகிய காரைக்குடிக்கு எங்களூரிலிருந்தும், இவ்வூர் வழியாகவும் பஸ்கள் செல்கின்றன. இவ்வூர் ஓரத்தே கல்லலுக்கு இடையில் ஒரு சிறிய பாலம் கட்டத் துவங்கி சுமார் ஒன்றரை வருடம் ஆகின்றது! (ஒன்றரை மாதமல்ல!) அக்கறை எடுத்து வேலை செய்தால் ஒரு வாரத்தில் முடிக்கக்கூடிய கட்டுமானம்! மராமத்து இலாகாவின் திறமையால் நாளொரு செங்கல்லாக அடுக்கப்பெற்று ஆமை வேகத்தில் வளர்ந்து வருகிறது. வேலை பூர்த்தியாகித் "திறப்பு விழா" நடத்துவதற்கு இன்னும் எத்தனை மாதங்களாகுமோ?

இராமநாதபுரம்
30—3—58
ஓ. சேதுராமன்

## பாகுபாடு வேண்டாம்!

கை ஏர், மாட்டு ஏர் வாரதாரர்களுக்கு மட்டும் மூன்று ஏக்கருக்குக் கீழ்ப்பட்டவர்களுக்குச் சலுகைகள் உண்டு என்று பத்திரிகையின் மூலமாக அறியலானேன். பத்து ஏக்கருக்குக் கீழ்ப்பட்டவர்கள் மூன்று ஏக்கர் வரை சொந்த விவசாயத்துக்கும் எடுத்துக் கொள்ளலாம் என்றும் பத்திரிகை மூலம் அறியலானேன். அதேபோல் மற்றச் சிறு நிலச்சுவான்தாரர்களும் இருக்கின்றனர். அவர்களுக்கும் ஏன் மூன்று ஏக்கருக்குக் கீழ்ப்பட்டுள்ளவர்களுக்குச் சலுகைகள் அளிக்கப் படவில்லை?

கரூர்
1—4—'58
எஸ். நாகராஜன்

## வேதனைதரும் காரியம்!

கேரள சுகாதார மந்திரியான திரு ஏ. ஆர். மேனன் அவர்கள் பி. ஸி. ஜி ஊசி போடுவதைப் பலவந்தமாகச் செய்வதற்கான ஒரு சட்டம் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயன்று வருவதாகக் கூறியுள்ளார். பி. ஸி. ஜி பற்றி நம் ராஜாஜி அவர்களின் கருத்தை ஒரு அங்கத்தினர் எடுத்துரைத்த போது, பல டாக்டர்களும், அறிஞர்களும் அதை ஆதரித்துள்ளனர் எனமந்திரி கூறினார்.

பி. ஸி. ஜி யால் பலர் துன்பப்பட நேர்ந்துள்ளது. அதனால் பல பேர்களுக்கு நோய்கள் உண்டாகி, கண்களை இழந்ததைத் தங்கள் 'வட்ட மேஜை'ப் பகுதியில் வரும் பல கடிதங்கள் மூலமாகத் தெரியவந்துள்ளது. பி. ஸி. ஜி யின் நன்மைகள் பற்றியோ, தீமைகள் பற்றியோ இன்னும் முடிவாகச் சொல்ல முடியாமலிருக்கும் இந்த நிலையில், இதைக் கட்டாயமாக அமுலுக்குக் கொண்டு வருவதை நினைத்தால்தான் மிகவும் வேதனை தருவதாயுள்ளது.

கல்பாத்தி
3—4—58
சி. எம். ராமச்சந்திரன்

## வரி உயர்வு!

வாணியம்பாடி நகரசபையார் நகரத்தில் உள்ள சுமார் ஆறாயிரம் வீடுகளுக்கு வீட்டு வரிகளைப் பல மடங்கு அதிகமாக உயர்த்தியுள்ளார்கள். முன்பு ஒரு வீட்டுக்கு ஐந்து ரூபாய் வரி என்றால் இப்பொழுது ரூ. 25-0-0 ஆகவும் முன்பு 50-0-0 ரூபாய் வரி இருந்ததென்றால், இப்பொழுது ரூ. 100, ஆகவும் வீட்டு வரி விதித்துள்ளார்கள். முன்பு அறவே வரியில்லாத ஏழைகள் ஓலைக் குடிசைகளுக்கெல்லாம்கூட ரூ. 10, 5, 3 வீதம் சுமார் 1500 ஓலைக் குடிசைகளுக்கு வரி விதித்துள்ளார்கள். 'இது தர்மமா?' என்றால் நகரசபையார் 'அரசாங்கந்தான் வரி உயர்வுக்குக் காரணம்' என்கிறார்கள். யார் காரணமாயினும் இந்த வரி உயர்வு நியாயமல்ல.

வாணியம்பாடி
3—4—'58
வி. என். தத்தப்பன்

## இதுதான் முறையா?

'சிறு சேமிப்பு நிதி' என்று கூறிக்கொண்டு எங்கள் ஊரிலும் எங்கள் ஊரைச் சார்ந்துள்ள பல ஊர்களிலும் மாணவர்கள் மாணவிகளிடத்தில் வற்புறுத்திப் பணம் வசூலிக்கிறார்கள். குறிப்பாக, கையெழுத்து இடத் தெரியாத, மூன்றாவது நான்காவது வகுப்பில் படித்துவரும் மாணவ மாணவிகளை நோக்கி, "நீ சிறுசேமிப்பு நிதிக்குப் பணம் கொடுக்கவில்லையானால் பள்ளியில் அனுமதிக்க மாட்டோம்; தேர்வில் வெற்றியடைய விட மாட்டோம். பெற்றோர்களிடம் பணம் கேளுங்கள். தரவில்லையானால் திருடியாவது கொண்டு வந்து கொடுங்கள்" என்கிறார்கள்.

இவ்வாறு பணம் வசூலிப்பவர்கள் மாணவர்கள் உள்ளத்தில் சொல்லம்பைப் பாய்ச்சுகிறார்கள். இதுதான் சிறு சேமிப்பு நிதி வசூலிக்கும் முறையா?

ஏர்வாடி
26—3—58
க. நா. மீ. முகமதலி

## வைத்தியச் செலவு

நான் ஒரு என். ஜி. ஓ.வின் மனைவி. சென்ற ஆறு மாத காலமாய் நான் முதுகெலும்பு முறிந்து ஆஸ்பத்திரியில் தக்க சிகிச்சை பெற்றுப் பூரண குணமடைந்து விட்டேன். ஆனால் இம்மாதிரி எலும்பு வியாதி உள்ளவர்களுக்கு, அதாவது கைகால் முறிந்தவர்களுக்கு, சப்பைக் கட்டுகளும், பூட்ஸுகளும் இடுப்பில் வலி உள்ளவர்களுக்கு ஒருவகை 'பெல்ட்', முதுகில் வலி உள்ளவர்களுக்குக் கவசமும் போட்டுத்தான் ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறச் சொல்கிறார்கள்.

மேற்கண்ட சாமான்கள் உயர்ந்த தோலிலும் சிறந்த வேலைப்பாட்டுடன் செய்ய வேண்டி யிருப்பதால் அளவுமிக்க பணம் செலவழிக்க வேண்டி யிருக்கிறது. ஒரு ஏழை என். ஜி. ஓ. எப்படிப் பெருந் தொகையைச் செலவழிக்க முடியும்? காச நோய் முதலிய சரும வியாதிகளுக்கு அளிக்கப்படும் விசேஷச் சலுகைகள் இதற்கும் அளிக்கப்படுமா?

கைசைப்பூர்
4—4—58

லக்ஷ்மி

## தமிழ்த் தொண்டு

தமிழ் மொழியின் வரலாற்றிலும், தமிழ் இலக்கியத்தின் வரலாற்றிலும் ஒரு பொற்காலம் இன்று பிறந்திருக்கிறது.

மாஸ்கோவில் புதிதாய்த் தமிழ் ஆராய்ச்சி நடத்தத் தொடங்கி இருக்கிறார்கள். ஆனால் போதிய ஏடுகள் அங்கு இல்லை; அவற்றைப் பெறும் வசதியும் இல்லை. இதுபற்றி அங்கு கடமையாற்றி இரவும் பகலும் தமிழுக்காக அரும்பாடுபடும் பண்டிதர் பி. ஆர். எம். பிள்ளை அவர்கள் வருந்தி விடுத்த அழைப்புகள் பலருக்கும் தெரியும். தேமதுரத் தமிழோசையை நாம் உலகமெல்லாம் பரப்ப வேண்டும்; பரப்பவும் முடியும். மலிவுப் பதிப்புகள் மலிவாக வந்து சங்கத் தமிழ் ஏடுகளைக் கூடப் பொலியச் செய்கின்றன. இந்த மலிவுப் பதிப்பு வெளியீட்டு நிலையங்கள் எல்லாம் ஒவ்வொரு ஏட்டிலும் இரண்டொரு பிரதிகளை அங்கு அனுப்பினால் அதுவே தமிழுக்குச் செய்யும் ஒரு சிறந்த தொண்டாகும்.

நூல்கள் அனுப்ப வேண்டிய விலாசம் :

Pandit P. R. M. Pillai, M. A.,
ZUBOVSKY Boule Vard 21,
MOSCOW U. S. S. R.

மாஸ்கோவுக்கு மட்டுமல்ல, பாரிசும், லண்டன், செக்நாடு, மியூனிச், அமெரிக்கா முதலிய இடங்களில் உள்ள தமிழ் ஆராய்ச்சி நிலையங்களுக்கெல்லாம் அனுப்பினால் தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம் பரவாதா? தமிழ் செழிக்காதா?

கொழும்பு
2—4—58

ஆ. தேவராசன்

## தொழில் சின்னங்கள்

சென்னை சர்க்காரின் ஆதரவில் இயங்கும் சில தொழில் ஸ்தாபனங்களின் தயாரிப்புக்களான செருப்பு, தீக்குச்சி இவற்றின் விளம்பரங்களைக் காண நேர்ந்தது. அவற்றில் சென்னை சர்க்காரின் நிர்வாகச் சின்னமான கோபுர இலச்சினை பொறிக்கப்பட்டிருப்பது விரும்பத் தக்கதல்ல. சர்க்கார் ஆதரவு பெற்று நடைபெற்ற போதிலும், வர்த்தகக் கிளைகளாக இயங்கும்போது, தயாரிப்புகளுக்கு ஏற்ற முறையில் தனிச் சின்னங்கள் ஏற்படுத்திக் கொள்ளுவதுதானே முறை?

செகந்திரபாத்
25—3—58

சுபஸ்ரீ




## 26

ஒழுக்கம் தவறாமல் வாழ்ந்தாலே தான் மனிதன் உயிர் வைத்துக்கொண்டிருப்பதற்குப் பொருள் உண்டு. ஒழுக்கம் தவறினால் அதைவிடச் சாவதே நல்லது. ஆகையினால் உயிரைவிட ஒழுக்கமே காக்க வேண்டிய பொருளாகும்.

தன்னைத்தான் காத்துக்கொள்வதே உயிரின் இயற்கை. உடலானது மூளையைக் கேட்காமலே தன் உயிரைத் தான் காத்துக் கொள்ளப் பாயும். அது இயற்கை வேகம். உடல் உயிரைக் காப்பதுபோல், பண்பட்ட மனிதன் ஒழுக்கத்தைக் காப்பதில் முனைந்து நிற்க வேண்டும். உயிரைக் காட்டிலும் ஒழுக்கமானது விலையுயர்ந்த பொருளாகும்.

**ஒழுக்கம் விழுப்பம்**
**தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப்**
**படும்.**

[விழுப்பம்—சிறப்பு; 'ஓம்பப்படும்' என்றால் ஓம்பத்தகும் என்று பொருள்.]

ஒழுக்கம் உயிருக்குச் சிறப்பு தருகிறது. ஒழுக்கம் இல்லையேல் உயிருக்கு விலையில்லை. ஒழுக்கம் என்பது ஆசாரம். கடமைகளைச் சரிவரக் காத்தல் பெரிதாயினும், தன் நிலைமைக்கு ஏற்பவும் சுற்றத்தாருக்கும் நண்பருக்கும் சமூகத்துக்கும் மனம் நோவாமலும் நாள்தோறும் நடந்து கொள்ள வேண்டிய முறைக்கு ஆசாரம் என்று பெயர். அதுவே தமிழில் ஒழுக்கம் என்பது. இவ்வாறு வாழ்க்கை நடத்துபவர்களுக்கு நல்லொழுக்கம் சிறப்பு தரும். ஒழுக்கத்தில் தவறு ஏற்பட்டால் அது வாழ்க்கையைப் பயனற்றுப் போகச் செய்யும்.

• • •

**பரிந்தோம்பிக் காக்க**
**ஒழுக்கம் தெரிந்தோம்பித்**
**தேரினும் அஃதே**
**துணை.**

ஒழுக்கத்தைப் பழுதுபடாமல் கண்காணிப்புடன் காக்க வேண்டும். அதில் சிரமம் உண்டு. ஆகையால் 'பரிந்து' என்றார். 'ஓம்பிக் காக்க' என்பது காப்பதற்கு வேண்டிய கண்காணிப்பைக் குறிக்கிறது. அந்தக் காப்புக்குச் சாஸ்திரப் பயிற்சி மட்டும் போதாது. நாள்தோறும் வருந்திச் செய்யும் முயற்சியினால் உண்டாகிற பயிற்சியே தருமத்தைக் காப்பதற்குத் துணையாகும். நூலறிவு மட்டும் போதாது. சாஸ்திரம் மிகப் படித்துத் தேர்ச்சி அடைந்த போதிலும் வாழ்க்கையில் தவறிப் போவோம். ஒழுக்கத்தைக் காத்து வந்தோமானால் தவற மாட்டோம். இதுவே உபநிஷத்திலும் சொல்லப்படுகிறது. "மேதையினாலும் சாஸ்திரப் படிப்பினாலும் பிரவசனத்தினாலும் ஆன்மாவை அடைய மாட்டாய்!" என்பது உபநிஷத் வாக்கியம். சாஸ்திரங்களும் தத்துவ நூல்களும் படித்தும் விவகரித்தும் சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் கடைசியில் காப்பது, நம்முடைய ஒழுக்கமே. அதைக் காப்பதில் என்ன கஷ்டம் ஏற்பட்ட போதிலும், வருந்தியும் காப்பாயாக என்கிறார் முனிவர்.




தொடர் கதையின் முடிவு தெரிந்து விட்டால் ஒருவரும் அந்தத் தொடர்கதையைத் தொடர்ந்து படிக்க மாட்டார்கள். திரைக்கதையின் முடிவு முன்னதாகவே தெரிந்து விட்டால், அதை யாரும் திரைப் படத்தில் பார்க்க விரும்ப மாட்டார்கள்.

ஆனால் ஊழி ஊழி காலமாக உலகப் பிரசித்தி பெற்ற ராமாயண காவியத்துக்கு மட்டும் மேற்கூறிய நியதியிலிருந்து விதிவிலக்கு உண்டு. அரச மரத்தடியிலிருந்து அரசர் மாளிகை வரையில் ராமாயண உபந்யாசம் எத்தனை எத்தனையோ ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. ஆயினும் ராம கதையின் சுவை குன்றாமல் இருந்து வருகிறது. கதாப் பிரசங்கத்தில் எத்தனை குறைகள் இருந்தாலும் அவற்றைப் பொருட்படுத்தத் தோன்றுவதில்லை. ராமாயணம் படமாக வந்தாலும் குறைகள் காணத் தோன்றாது.

சமீபகாலத்தில் சமூகக் கதைகளே வெள்ளித் திரையில் இடம் பெற்று வந்தன. இப்பொழுது ஒரு திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. தெய்வமாக் கதையான ராமாயணம் மீண்டும் திரையிடப் பட்டிருக்கிறது.

சேலம், எம். ஏ. வி. பிக்சர்ஸின் உரிமையாளரான திரு எம். ஏ. வேணு சம்பூர்ண ராமாயணத்தைப் பல நாள் முயற்சியில், ஏராளப் பொருட் செலவில் தயாரித்திருக்கிறார். சுமார் 23,000 அடிகள் வரையில் படம் நீண்டிருப்பதை அப் புராதன இதிகாசத்தின் புகழ் நீண்டிருப்பதாகத்தான் கூற வேண்டும். படத்தின் பல்லாயிரம் அடிகளும் ராமாயண எதிர்ப்புக்கு எதிராக விழுந்திருக்கும் அடிகளாகவே கொள்ள வேண்டும்.

தாந்தன்

மல்லிகை மலரை யார் புனைந்தாலும் அது மணம் தர மறுப்பதில்லை; தென்றலை யார் நுகர்ந்தாலும் அது அவரைக் குளிர்விக்கத் தவறுவதில்லை: அது போல ராமாயண காவியம் தன்னை நடிப்பவரையும், படிப்பவரையும், கேட்பவரையும், பார்ப்பவரையும் இன்ப சாகரத்தில் ஆழ்த்துவதில் அதிசயம் ஏது?

தசரத சக்கரவர்த்தி நான்கு புத்திரர்களைப் பெற்ற மகிழ்ச்சியில் திளைக்கிற கட்டத்திலிருந்து படம் ஆரம்பமாகிறது.

தசரத பூபதியின் பாத்திரத்தைச் சிறந்த குணசித்ர நடிகரான வி. நாகையா ஏற்றிருக்கிறார். அந்தப் பாத்திரத்துக்கு அவரை விடத் தகுதியானவரைத் தேர்ந்தெடுப்பது சிரம சாத்தியமானது. படத்தின் ஆரம்பத்தில், அலை ஓய்ந்த சமுத்திரம் போலிருந்த நாகையா, கைகேயியின் சாகஸத்தில் மயங்கி, அவள் கோரிய வரங்களைக் கொடுத்ததிலிருந்து புயல் சூழ்ந்த கடலைப் போல் பொங்கி யெழுந்து, உயிரையே விட்டு எல்லோரையும் திகைக்க வைத்து விட்டார்!

கைகேயியாக நடித்த ஜி. வரலக்ஷ்மி, கூனி மந்தரையின் சதிப் பேச்சுக்குப் படிப்படியாக இணங்கி, அணிகலன்களை யெல்லாம் கழற்றி யெறிந்து கோபாவேசமுற்ற போதும், கணவன் தசரத பூபதியிடமிருந்து பிடிவாதமாக இரண்டு வரங்களையும் பெற்றபோதும் பாவம் பொங்க நடித்திருக்கிறார்.

ராமனாக நடிப்பதற்கு நல்ல வேஷப் பொருத்தமுள்ளவர் என். டி. ராமராவ். அவர் ஆரம்பமுதல் கடைசிவரையில் நாம் ஏற்ற பாத்திரத்துக்கு ஏற்றம் உண்டாகும் வண்ணம் நடித்து, சாந்தமாகப் பேசி, நல்ல பெயர் வாங்கி விடுகிறார்.

ராமாயண காவியத்தில் சீதை ஓர் அருமையான பாத்திரம். பண்பு, பரிவு, நாணம், அச்சம், கற்பு, கனிவு, கருணை ஆகிய அருங்குணங்களுக்கெல்லாம் உறைவிடமான பாத்திரம்; இவ்வளவும் போதாக் குறைக்கு, சௌந்தர்ய தேவதையுங்கூட.

எந்தப் பாத்திரத்தையும் ஏற்றுத் திறமையுடன் நடித்து அநுபவப்பட்ட நட்சத்திரமான பத்மினி சீதையாக வருகிறார். பதிக்கேற்ற பத்தினியாக விளங்கி, வன வாசத்தில் வியப்புடன் விழித்து, கலகல வென நகைத்து, கண்ணீர் விட்டு, பதிபக்தியில் மெய்மறந்து நடிக்கிறார். ஆனால், அவர் உடைகள் புராதனப் பாணியில் இல்லை. அதில் டைரக்டர் கொஞ்சம் கவனம் செலுத்தி யிருக்க வேண்டும்.

குகனாக வரும் வி. கே. ராமசாமிக்கு இது புதுமாதிரி பாத்திரம். பிரதாபமாக வந்து யாரையும் மிரட்டி, காதலர்களுக்குக் குறுக்கே நின்று பழகிய அவருக்கு இப் படத்தின் ராம பக்தியில் கரைந்து உருகுவதற்கு வாய்ப்புக் கிடைக்கிறது. அபாரமாக நடிக்கிறார்.

லக்ஷ்மணனாக வரும் நரசிம்ம பாரதி துடுக்குப் பேச்சுடன் மிடுக்காக நடிக்கிறார்.

வேகமாகப் போய்க் கொண்டிருக்கும் ஆற்று வெள்ளம் பள்ளம் கண்ட இடத்தில் பாய்ந்து குதித்து ஓடுவது போல், பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்தி திரும்பியதும் படத்தில் விறுவிறுப்பு காண்கிறது.

பரதன், சத்ருக்னன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மறுமொழி கூறாமல் ரதத்தில் மௌனமாகப் போவதைப் பார்க்கும்போதே, ''மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை'' என்ற பழமொழி எனக்கு நினைவுக்கு வந்தது.

அரண்மனை வாசலில் ரதத்திலிருந்து இறங்கிய போதே பரதனின் முகபாவங்கள் மாறத் தொடங்கின. அவன் மனத்திலுள்ள குழப்பம் முழுதும் முகத்தில் பிரதிபலித்தது. உள்ளே சென்று அவன் கைகேயியுடன் பேசி, நடந்த விவரங்களை அறிந்ததும் அந்த மௌனம் நீங்கிப் புயலும் மழையும் வீசத் தொடங்கின.

சிவாஜி கணேசனுக்கு மிகவும் பொருத்தமான பாத்திரம் பரதன். கைகேயியினிடம் அவர் பொழியும் இடிமுழக்கம் போன்ற வாசகங்கள் அவருக்குப் பழக்கமானவைதான் என்றாலும் உணர்ச்சியோடும் உருக்கத்துடனும் வருகின்றன. கானகம் சென்று ராமனைக் கண்டு அவன் பாதுகையை வாங்கிக்கொண்டு அயோத்தி திரும்பிய வரையில் அவர் நடிப்பின் சிகரத்தில் இருக்கிறார். சூர்ப்பனகையாகவரும் எம். என். ராஜம் தான் இப்படத்தின் வில்லி. நன்றாக நடித்திருக்கிறார்.

ராமன், பரதன் இவர்களைப் போலவே ராமாயணத்தில் ராவணன் மிக மிக முக்கியமான பாத்திரம். பல நாடகங்களிலும் சினிமாப் படங்களிலும் நன்றாய் நடித்துப் பிரசித்தி பெற்ற சிறந்த நடிகரான டி. கே. பகவதி ராவணனாக வருகிறார். அடேயப்பா! சக்கைப் போடுபோட்டுவிட்டார். ராவணனின் இசையறிவின் நுட்பத்தை விளக்கும் காட்சியில் பகவதியின் நடிப்பு பிரமாதம். காலத்துக்கேற்ற ராகங்களை வீணையில் இசைத்துப் பாடியது இன்னும் என் செவியில் ஒலிக்கிறது. ''இன்று போய் நாளை வா'' என்று போர்க்களத்தில் ராமன் கூறி அனுப்பியதை நினைத்து உள்ளத்தில் வேதனையோடும் கையில் வீணையோடும் சிவபெருமான் சந்நிதியில் கதறுவது மிகவும் உருக்கமாயிருக்கிறது.



ராவணன் மனைவி மண்டோதரியாக வரும் சந்தியா அன்பு மனைவியாகவும், வீரபத்தினியாகவும் அழகாக நடிக்கிறார்.



படத்தின் வசனத்தை ஏ. பி. நாகராஜன் அமைத்திருக்கிறார். கே. சோமு இந்தப் படத்தை, பக்தி சிரத்தையோடும் திறமையோடும் டைரக்ட் செய்திருக்கிறார். மருதகாசி பாடல்களை எழுதியிருக்கிறார்.

சில குறைகள் :

கம்பர் கவிதைகளை ஆங்காங்கு எடுத்துக் கையாண்டிருந்தால், இப்படம் காவிய நயத்தையும் கொண்டு மிளிர்ந்திருக்கும். கம்பர் கவிதைகளை விடுத்துக் கருத்துக்களை மட்டும் எடுத்துக் கொள்வதில் ரஸம் அதிகம் இல்லை. ராமன் கங்கையைக் கடந்த போது நதியின் பரந்த பிரவாகத் தோற்றம் காட்டப்பட்டிருக்கலாம். ஆரண்யக்காட்சிகளும், அசோக வனமும் ராமன், சீதை, லக்ஷ்மணன் ஆகியவர் தங்கியிருந்த பர்ணசாலையும் நன்கு அமையவில்லை.

பாரதப் பண்பின் உறைவிடமான ராமாயணம் முழுவதும் படமாகக் காட்டுவதற்கு இதுதான் ஏற்ற தருணம் என்பதை நினைக்கும் போது படத்தின் குறைகள் மறைந்து போய் விடுகின்றன.

மேலும் மேல் நாட்டுப் படாதிபதிகள் மாதிரி, நம் படாதிபதிகளும் ஆதிகாலக் காவியங்களின் மூலத்துக்குப் பங்கம் ஏற்படாமல் படம் எடுக்கும் காலம் வர ஆரம்பித்து விட்டது என்பதற்கு அறிகுறியாக விளங்குகிறது.

# கல்கத்தா மகாநாடு

எஸ்.வி.எஸ்.

3

## சமாதான யாத்திரை

கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வந்ததும் நண்பர்கள் பலர் என்னை விசாரித்த விதம் வேடிக்கையாக இருந்தது.

"ஆட்சி மொழி சம்பந்தமாக வங்கத்திலும் கிளர்ச்சி செய்ய நன்றாக வத்தி வைத்து விட்டு வந்து விட்டீர்கள் போலிருக்கிறதே!" என்று கேட்டார்கள்.

அதாவது தீயை மூட்டி விட்டு வந்ததாகச் சிலருக்கு நினைப்பு.

ஆயிரம் மைல்களுக்கு இப்பால் இருந்து கொண்டு, பார்ப்பவர்களுக்கு உண்மை நிலவரம் பிடிபடுவது கஷ்டம். அதிலும், கல்கத்தாச் செய்திகள் அன்றாடம் பூரணமாக வெளி வராத தென்னாட்டுப் பத்திரிகைகள் படிப்பவர்களுக்கு என்ன தெரிய முடியும்? மேலும் திடீரென்று ஒரு நாள் கல்கத்தாச் செய்திகள் பத்திரிகைகளில் ஏராளமாக வெளியானால், அன்றுதான் புதிதாக ஏதோ நடக்கிறது என்று நினைத்துக் கொள்கிறார்கள்.

ஆனால் உண்மை இதற்கு நேர்மாறாக இருக்கிறது. இரண்டாவது நாள் பிற்பகல் மகாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகள் ஒவ்வொரு தீர்மானத்துக்கும் எழுப்பிய திருத்தங்களையும் போட்ட கூச்சலையும் பார்த்திருந்தால் வேறு விதமாக நினைத்திருப்பார்கள்.

அவர்கள் போட்ட கூச்சலிலிருந்து வெளியான விஷயம் என்னவென்றால், இந்தி எதிர்ப்பு விஷயத்தில் தமிழர்களைவிட வங்காளிகள் ஒருபடி மேலேயிருக்கிறார்கள் என்பதுதான்.

வந்திருந்த வங்கப் பிரதிநிதிகள் "இந்தித் திணிப்பை எதிர்த்து சும்மா மகாநாடு கூட்டித் தீர்மானம் போடுவதில் பயனில்லை. மத்திய சர்க்காரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலம் மத்திய சர்க்காருக்கு அளித்து, 'இந்தக் கெடுவுக்குள் அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றி அமைக்காவிட்டால் கிளர்ச்சி செய்வோம்!' என்று சர்க்காரை மிரட்டும் தீர்மானம் போட வேண்டும்" என்று வற்புறுத்தத் தொடங்கி விட்டார்கள்.

வங்கமக்களின் 'கிளர்ச்சி' என்பதற்குள்ள பொருள் என்பது உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்! பஸ் எரித்தல், டிராம் வண்டி எரித்தல், ரயில் தண்டவாளம் பெயர்த்தல், கல்லடி, கலாட்டா முதலியவைகள்தாம். இதற்கெல்லாம் ராஜாஜி உடந்தையாக இருக்க முடியுமா?

ஆகவே, ராஜாஜி தம்முடைய பேச்சுத் திறமை யெல்லாம் காண்பித்து அவர்களை அமைதியாக இருக்கும்படி செய்வதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

"நம்முடைய கோரிக்கை நியாயமான கோரிக்கை. ஜவாஹர்லால் நேரு நம்முடைய கோரிக்கையிலுள்ள நியாயத்தை உணராமலில்லை. ஆனால் அவர் இந்தி வெறியர்கள் மத்தியில் சிக்கிக் கொண்டிருப்பதால் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறார். ஆகவே, அவருக்கு நாம் அவகாசம் அளிக்க வேண்டும். மேலும் பார்லிமெண்டரி கமிட்டி ஆலோசனை நடத்திக் கொண்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் நாம் அருவருப்பு உண்டாக்கும் செய்கைகளில் ஈடுபடக் கூடாது. மொத்தத்தில் இப்பொழுது கிளர்ச்சி செய்வதற்குரிய காலம் வந்துவிடவில்லை. உங்கள் எல்லோரையும்விட எனக்கு இவ் விஷயத்தில் மிகுந்த அனுபவம் உண்டு. அதனால் நான் சொல்வதைக் கேளுங்கள். கிளர்ச்சிக்கோ, புரட்சிக்கோ அவசரப்படாதீர்கள்!" என்று ராஜாஜி அவர்கள் பல முறை கூறி அவர்களைக் கட்டுப்படுத்தி வைப்பது பெரும்பாடாகி விட்டது.

தஞ்சாவூர் பொம்மை பார்த்திருக்கிறீர்களா? அதை ஒரு பக்கம் சாய்த்து வைத்தால், அதை நம் கை அழுத்திக் கொண்டிருக்கும் நாழிகைதான் அந்த நிலையில் இருக்கும். கையை எடுத்து விட்டால் மீண்டும் எழுந்து உட்கார்ந்து கொள்ளும்! அதைப் போல் இந்த வங்காளிகள், ராஜாஜி கிளர்ச்சிக்கு எதிராகச் சொல்லும் வாதங்களைக் கேட்டுச் சமாதானம் அடைவது போல் இருப்பார்கள்! இன்னொரு தீர்மானத்தின் மீது சிறிது சர்ச்சை ஏற்பட்டால், மீண்டும் பழைய விஷயத்தை ஆரம்பித்து விடுவார்கள்: 'கிளர்ச்சி' 'நேரடி நடவடிக்கை' என்பார்கள். ஆனாலும் ராஜாஜி சற்றும் பொறுமை இழக்காமல் மீண்டும் மீண்டும் தம் நிலையை வற்புறுத்தி வந்தார். அடி மேல் அடி அடித்தால் அம்மியும் நகரும் என்பார்கள். அது போல் திரும்பத் திரும்பச் சொன்னதின் பேரில் வங்காளிகள் கிளர்ச்சித் தீர்மானத்தைக் கைவிட்டார்கள். ஆகவே ராஜாஜி வங்கத்துக்குப் போய்க் கிளர்ச்சியைத் தூண்டி விட்டார் என்று சொல்வது போன்ற தவறு வேறில்லை.

இந்த ஆட்சிமொழி விஷயத்தில், இந்தித் திணிப்பை எதிர்த்துப் பலத்த புரட்சி செய்யத் தீர்மானித்திருக்கும் மக்களை ராஜாஜி அமைதியோடு இருக்கச் செய்து விட்டு வந்திருக்கிறார். அவர்களைத் தெளிவாகச் சிந்திக்கும்படி செய்துவிட்டு வந்திருக்கிறார். ஜனநாயக முறையில் போராடச் செய்துவிட்டு வந்திருக்கிறார்.

ராஜாஜியின் கல்கத்தா விஜயம் சமாதான யாத்திரை என்று சொல்ல வேண்டும். இந்த அமைதியை இனி காப்பாற்றுவது, மத்திய சர்க்காரின் கையில் இருக்கிறது. அவர்கள்

தங்கள் கொள்கையை மாற்றிக் கொள்ளா விட்டால் வங்கத்தில் என்ன நேரும் என்று சொல்ல முடியாது !

## சமஸ்கிருதம்

வங்கத்தில் மற்றொரு செய்தியைக் காண முடிந்தது. ஒரு சில பிரதிநிதிகள், "சமஸ்கிருதம் ஆட்சி மொழியாக்கப்பட்டால் என்ன?" என்று கேட்டார்கள். இப்படிச் சொன்ன கூட்டம் சிறிதாக இருந்தாலும், அதற்குச் செல்வாக்கு இருக்கிறது. மேலும் வங்கப் பள்ளிகளில் சமஸ்கிருதம் கட்டாய பாடமாக இப்போது இருந்து வருகிறது. இதிலிருந்து சமஸ்கிருதம் வங்கத்தில் எந்த ராஜ்யத்திலுமில்லாத உயர்ந்த இடம் பெற்றிருப்பது தெரிகிறது !

"சமஸ்கிருதம் ஆத்மீகச் செல்வம் நிறைந்த மொழி. அதை ஆட்சிமொழியாகப் பெற்றால், நாம் ஆத்மீகத் துறையில் வேறு எந்த நாட்டையும்விட உயர்ந்த இடத்தைப் பெறுவோம். ஆனால் இது விஞ்ஞானயுகம். நாம் விஞ்ஞானத் துறையில் மேல் நாடுகளுடன் போட்டி போட்டு வருகிறோம். இது யந்திரத் தொழில் யுகம். யந்திரத் தொழில் நுட்பக் கல்வி வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் ஆங்கிலம்தான் உபயோகமாக இருக்கக் கூடிய மொழி. ஆங்கிலத்தின் உபயோகத்தைக் கருதி ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக ஏற்க வேண்டி யிருக்கிறது !" என்று ராஜாஜி அவர்கள் விளக்கிய பிறகுதான் அவர்கள் சமாதானம் அடைந்தார்கள்.

## மைதிலியின் எதிர்ப்பு

இன்னும் சிலர் மைதிலி மொழி பேசுபவர்கள். பாரத சர்க்கார், மைதிலியை இந்தியில் சேர்த்து மைதிலி பேசும் பிரதேசத்தை இந்திமொழிப் பிரதேசமாகக் கணக்கெடுத் திருக்கிறார்கள். மைதிலி மொழி பேசுபவர்களோ, தங்கள் மொழி இந்தியிலிருந்து முற்றும் மாறுபட்ட தென்றும், இந்தி மொழித் திணிப்பால் தங்கள் மொழி சீரழிந்துவிடும் என்றும், அதனால் இப்பொழுது பீகார் ராஜ்யத்திலுள்ள தங்கள் பிரதேசத்தை மாற்றியமைக்க வேண்டும் என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள். அதாவது ராஜ்ய எல்லை ஏற்பாட்டை மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டும் என்று அவர்கள் கூறுவதற்கு ஆரம்பித்து விட்டார்கள் !

மைதிலி மொழி பேசுபவர்களுக்குச் சர்க்காரின் இந்தித் திட்டத்தில் இவ்வளவு வெறுப்பா என்பது அங்கு போனபிறகுதான் தெரிந்தது: இப்படி ஏழெட்டு வகை இந்தி மொழிகளைச் சேர்த்துத்தான் இந்திப் பிரதேசம் என்று சொல்கிறார்கள். மைதிலி மொழியாளர்கள் போல் ஒவ்வொருவரும் இந்தியை எதிர்த்தால் இந்தி என்பதே இல்லை என்றாகிவிடும் ! இப்பொழுது மத்திய சர்க்கார் சிருஷ்டித்து வரும் இந்தி யாருமே பேசாத, யாருக்குமே புரியாத இந்தி ! அதனால்தான் இவ்வளவு எதிர்ப்பு ! செயற்கை விஷயங்கள் நம் நாட்டில் எப்படி நிலைக்க முடியும் என்பது தெரியவில்லை.

மைதிலி மொழியாளர்கள், ராஜ்யப் புனர் நிர்மாண விஷயத்தைக் கிளப்பியவுடன், இது நமது முக்கிய பிரச்னைக்குத் தொடர்பில்லாத விஷயம் என்று ராஜாஜி நிராகரித்து விட்டார். ஆனாலும் அவர்களுக்கு 'இது எப்படித் தொடர்பில்லாமல் போய்விடும்' என்பது கடைசிவரையில் விளங்காமலே இருந்து வந்தது !

இப்படிப்பல உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி, பன்னிரண்டு தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன ! இது பிரதிநிதிகள் கூட்டத்தில் நிகழ்ந்தது. இந்தத் தீர்மானங்களை மீண்டும் பொதுக் கூட்டத்தில் நிறைவேற்றியாக வேண்டும். பொதுக் கூட்டம் நான்கு மணிக்குக் கூடுவதாக இருந்தது ! ஆனால் பிரதிநிதிகள் கூட்டத்தில் ஒரு மணி நேரம் தாமதமாகி விட்டதால், பொதுக் கூட்டம் ஐந்து மணிக்குத்தான் ஆரம்பமாயிற்று.



கடந்த 10—3—58 அன்று கல்கத்தா ஸிட்டி காலேஜ் மாணவர்கள்-ஆசிரியர்கள் கூட்டத்தில் தலைவர் ராஜாஜி பேசினார். ஸ்ரீ ராஜாஜி அவர்களை, கல்லூரி முதல்வர் ஸ்ரீ அமியகுமார்ஸென் வரவேற்பதைப் படத்தில் காணலாம்.

## தி. மு. க. பிரதிநிதி

பொதுக் கூட்டத்துக்கு டாக்டர் எம். ரத்னஸ்வாமி தலைமை வகித்தார். பல பிரதிநிதிகள், தீர்மானங்களைப் பிரேரேபித்தும் ஆதரித்தும் பேசினர். தமிழ்நாட்டிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகளான திருவாளர்கள் அ. சுப்பையா, அமிர்த லிங்கேசன், ஈ. வி. கே. சம்பத், வி. பி. ராமன் ஆகியவர்கள்பேசினார்கள். இவர்களில் திரு ஈ. வி. கே. சம்பத் அவர்கள் பேசும் போது, சபையி லிருந்த தமிழ் நாட்டு மக்களின்

எண்ணங்களைக் கிளரச் செய்ததால் அவர் பேச்சைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகிறது.

திரு ஈ. வி. கே. சம்பத் தி. மு. க. கட்சியைச் சேர்ந்தவர்; புது தில்லி மக்கள் சபையில் அங்கத்தினர். அவர் புதுதில்லியி லிருப்பதால், பஞ்சாபில் இந்தி வெறியர்கள் செய்யும் அட்டூழியங்களைப் பற்றி நேரிடையாகத் தெரிந்து கொள்ள நல்ல வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இவற்றை யெல்லாம் பற்றி நெஞ்சுருகச் சொன்னார் சம்பத். அப்படிச் சொல்லி வரும்போது, ''இந்தி வெறியர்கள் பஞ்சாப் சீக்கியர்களின் மத உணர்ச்சிகளை எவ்வாறு புண்படுத்தி வருகிறார்கள் தெரியுமா? சீக்கியர்களை, அவர்கள் முடியை எடுத்துவிட வேண்டும், தாடியை எடுத்துவிட வேண்டும் என்றெல்லாம் சொல்கிறார்கள். என்ன அக்கிரமம்! என்ன அக்கிரமம்!!'' என்றார்.



கல்கத்தாவில் சமீபத்தில் நடைபெற்ற ''பிராயச்சித்தமா?'' என்னும் நாடகத்தில் நடித்தவர்களையும், நாடக ஆசிரியரும் நாடகத்தின் கதாநாயகருமான கனம்பூர் ராமஸ்வாமியையும், டைரக்டர் திரு ராகவனையும் படத்தில் காணலாம்.

சீக்கியர்கள் தங்கள் மத சம்பிரதாயங்கள் காரணமாக, முடியை வெட்டுவதில்லை; தாடியை எடுப்பதில்லை. இவற்றை அவர்களின் உயிரினும் மேலாகக் கருதுகிறார்கள். இதை இந்தி வெறியர்கள் பழிக்கிறார்களே, மத சம்பிரதாயங்களைக் கேலி செய்கிறார்களே என்று அவர் உருகிப் பேசியபோது சபையோருக்கு மிக உருக்கமாகத்தான் இருந்தது. ஆனால் தமிழர்கள் சிலர், சீக்கிய மத சம்பிரதாயங்களுக்காக உருகும் இவர் கட்சிக்காரர்கள் தமிழ் நாட்டில் என்ன செய்து வந்தார்கள்? இந்து மத சம்பிரதாயங்களையும், ஆசார பழக்க வழக்கங்களையும் கேலி செய்வதே தொழிலாகக் கொண்டிருந்தார்கள் அல்லவா? அப்படிப்பட்ட கட்சியைச் சேர்ந்த திரு ஈ. வி. கே. சம்பத் சீக்கிய மதக் கோட்பாடுகளுக்காக உருகுகிறாரே என்று எண்ணினர். தமிழர் சிலருக்குச் சிரிப்பாகவும் வேடிக்கையாகவும் இருந்தது. தி. மு. க. கட்சியினர் மத சம்பிரதாயங்களைப் பழிப்பதில்லை; கேலி செய்வதில்லை; மதப் பற்றுள்ளவர்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்துவதில்லை என்ற உயரிய முடிவுக்கு வந்து விட்டார்களா, என்ன என்ற ஐயம் வேறு சிலருக்கு எழுந்தது!

## சரித்திரம் ஏது?

தலைமை உரையாக டாக்டர் எம். ரத்னஸ்வாமி அவர்கள் சுருக்கமாகவும் தெளிவாகவும் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார்.

''ஒரு நாட்டுக்கு ஆட்சி மொழி என்றால் அதற்கு ஒரு சரித்திரம் இருக்க வேண்டும். பாரத நாட்டுச் சரித்திரத்தில், வங்க மொழி ஆட்சி மொழியாக இருந்திருக்கிறது. தெலுங்கு ஆட்சி மொழியாக இருந்திருக்கிறது. தமிழ் ஆட்சிமொழியாக இருந்திருக்கிறது. பாரசீக மொழியும் அரபி மொழியும் நம் நாட்டில் ஆட்சிமொழியாக இருந்திருக்கின்றன. இந்தி ஆட்சி மொழியாக இருந்ததாக வரலாற்றிலேயே கிடையாது. ஒரு சரித்திரம் இல்லாத மொழியை, ஒரு ராஜ்யத்துக்கு என்றுமே ஆட்சிமொழியாக இருந்து பழக்கப்படாத மொழியை இன்று பாரதத்துக்கு ஆட்சிமொழியாக்கப் பார்ப்பது எந்த விதத்தில் நியாயம்?

''ஆங்கிலம் அன்னியமொழி, அதை எப்படி ஏற்பது என்கிறார்கள்? பெல்ஜிய நாட்டில் பெல்ஜிய மொழி ஆட்சி மொழியாக இல்லை. பிரஞ்சு மொழியை, வேற்று நாட்டு மொழியைத்தான் அவர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். கானடா நாட்டில் அனைவரும் ஆங்கிலேயரல்ல. பிரஞ்சு மக்கள் இருக்கிறார்கள். ஸ்பெயின் தேசத்து மக்கள் இருக்கிறார்கள். ஆனாலும் கானடா நாட்டு மக்கள் ஆங்கிலத்தை அந்நிய மொழி என்று புறக்கணிக்காமல் ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதைப்போல், நாம் ஆங்கிலத்தை ஆட்சிமொழியாக ஏற்றுக் கொண்டு விட்டால் உலகம் கண்டும் கேட்டும் இராத அதிசயத்தைச் செய்தவர்களாகி விடமாட்டோம்.

''மொத்தத்தில் ஆங்கிலம் வேண்டாம் என்று புறக்கணிப்பது தவறு. இன்று தலைவர்களாக இருப்பவர்கள் ஆங்கிலத்தினால் பெரும் பயனை அடைந்தவர்கள். இவர்கள், ஆங்கிலத்தைத் துறப்பது, 'யாம் பெற்ற இன்பம் எதிர்கால மக்கள் பெற வேண்டாம்' என்று சொல்வதற்கு ஒப்பாகும். எதிர்காலச் சந்ததிகளுக்கும் பெருந் துரோகம் செய்ததாகும்'' என்று கூறினார்.

கடைசியாக ராஜாஜி பேசினார். அவர் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தினார்.

ஆங்கிலத்தை விட்டு வேறு தேசிய மொழிக்கு மாறும் காலத்தை இப்பொழுதே குறித்து விடவேண்டும் என்று சிலர் சொல்லி வருகிறார்கள் அல்லவா? இது தற்கொலைக்கு

கோவில் திருவிழாக்களுக்கும், கும்பாபிஷேகத்துக்கும் வரும் பக்தர்களுக்கு அன்னதானம் செய்வதற்காகவே வாழ்ந்த பெரியவர் அன்னதான சிவன். அந்தப் பெரியாரின் நினைவாக நிறுவியுள்ள அன்னதான சிவன் சங்கத்தார் சிவன் செய்து வந்த திருப்பணியைத் தொடர்ந்து செய்து வருகின்றனர். அனாதைப் பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடம் நடத்துகிறார்கள். திருவிழாக் காலங்களில் வரும் அன்பர்களுக்கு அன்னதானம் வழங்கி வருகின்றனர். சென்ற மாதம் சென்னை மயிலாப்பூரில் நடைபெற்ற அறுபத்து மூவர் உற்சவத்துக்கு வந்த ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னதானம் வழங்கினர். பல ஆயிரக்கணக்கான மக்களுக்குச் சாம்பார் சாதத்தையும், தயிர் சாதத்தையும் பொட்டலங்களாகக் கட்டும் திருப்பணியில் ஆண்களும், பெண்களும் ஈடுபட்டிருக்கும் காட்சியை மேலே படத்தில் காணலாம்.

---

ஒப்பானது என்று ராஜாஜி விளக்கினார். 1965 அல்ல, 1980 அல்ல, 2001வது வருஷத்திலிருந்து ஆங்கிலத்தை விட்டு இந்திக்கு மாறலாம் என்று நாம் இன்று யோசனை கூறினால், 2001-வது வருஷத்தில்இந்தி ஆட்சி மொழியாவதற்குரிய வேலைகள் இன்றிலிருந்தே தொடங்கப் பெற வேண்டும். 1965ல் இந்தி ஆட்சி மொழியாக வேண்டும் என்று சட்டம் செய்யப்பட்டிருப்பினும், இப்பொழுதிலிருந்தே நினைப்பு ஆரம்பமாகிவிட்டதல்லவா? அதைப் போலவே ஒரு கால நிர்ணயம் செய்துவிட்டால் அதற்குரிய வேலைகள் இப்பொழுதிலிருந்தே தொடங்கவேண்டியதுதான். இப்பொழுதிலிருந்தே நினைப்பு வேலை நடத்த வேண்டியதுதான். அதனால் எதிர்காலத் தேதியைக் குறிப்பிடக் கூடாது.

''எதிர்கால மக்கள் இந்தி விரும்பலாம், விரும்பாமற் போகலாம். ஆகவே, இன்று நாம் ஒரு தேதியைக் குறிப்பிடுவது எதிர்கால மக்களின் உரிமையில், வாழ்க்கையில் குறுக்கிடுவதாகும். நம்முடைய இன்றைய வசதிக்காக எதிர்கால மக்களின் வாழ்க்கையைப் பணயம் வைப்பதாகும்; அடகு வைப்பதாகும். இக்காரியம் நியாயமல்ல. எதிர்காலம் எப்படியிருக்க வேண்டும் என்று நிர்ணயிப்பது எதிர்கால மக்களின் கடமை. அதில் தலையிட நமக்கு உரிமை கிடையாது'' என்றார் ராஜாஜி.

கடைசியாக ராஜாஜி மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட்டார். ''இந்திக்கு எதிர்ப்பாகத் தமிழ் நாடு தான் இருக்கிறது என்ற அவப்பெயர் எங்களுக்கு உண்டு. இந்த இரண்டுநாள் மகாநாடு நடத்தி 'நாங்களும் அவ்விதமே எண்ணுகிறோம்' என்று உலகறியச் செய்துவிட்டீர்கள். இதற்கு என் மனமார்ந்த நன்றி. ஆனால் இந்த இயக்கம் இளைஞர்களின், எதிர்கால மக்களின் நன்மையைக் கருதி நடத்தப்படும் இயக்கமாகும். இந்த மகாநாட்டுக்கு ஏராளமான இளைஞர்கள் வந்து பங்கெடுத்துக் கொண்டதற்கும் என் நன்றி. இவ் வியக்கத்தை இனி வெற்றிகரமாக நடத்துவது பாரத நாட்டு இளைஞர்களின் பொறுப்பு'' என்று முடித்தார் ராஜாஜி.

## ஜனகணமன

ராஜாஜி பேசி முடித்ததும் நன்றியுரை கூறக் கூட்டம் முடிந்தது. இல்லை, இல்லை. தேசிய கீதம் ஜனகணமன பாட்டுக்குப் பின் கூட்டம் முடிகிறது என்று அறிவிக்கப்பட்டது. உடனே, சபையோர், மேடையிலிருந்த தலைவர்கள் அத்தனை பேரும் மெய் சிலிர்த்து எழுந்து நின்றார்கள். மூன்று வங்காளிகள் ஜனகணமன பாடினார்கள். பாட்டு முடிந்ததும் நகர ஆரம்பித்தேன். உடனே இன்னொரு பாட்டு அதே மெட்டில் ஆரம்பமாகியது. ஜனகணமன பாட்டின் இரண்டாவது செய்யுள். அது முடிந்ததும் கூட்டம் முடிந்தது என்று நினைத்துக் கலைய ஆரம்பித்தேன். மூன்றாவது பாட்டு ஆரம்பமாகியது. என் பக்கத்திலிருந்த நண்பர் கே. கே. சின்ஹா, ''நீங்கள் வங்காளத்தில் இருக்கிறீர்கள் என்பது ஞாபகம் இருக்கட்டும். தாகூரின் மூன்று பாடல்களையும் பாடித் தீர்த்து விட்டுத்தான் உங்களை விடுவோம்!'' என்றார்.

மகாநாடு முடிந்து நேரே கல்கத்தா ராஜ பவனம் வந்தோம்.

## மாணவர்களிடையே

கல்கத்தாவுக்கு வந்த காரியம் மிகவும் வெற்றிகரமாக முடிந்துவிட்டது. எனினும் கல்கத்தா நகரமக்கள் ராஜாஜியை அவ்வளவு சுலபமாக விடத் தயாராயில்லை. கல்கத்தா நகர்க் கல்லூரி மாணவர்களில் ஒரு பகுதியினர் ராஜாஜியை வரவேற்று அவரது பொன் னுரைகளைக் கேட்க வேண்டும் என்று விரும் பினர். எதிர்கால மக்கள், ராஜாஜியைப் பார்க்க வேண்டும் என்று துடிக்கும்போது, எப்படி மறுக்க முடியும்? அதனால் மறுநாள் காலை ஒன்பது மணிக்குத் தென் கல்கத்தாவி லுள்ள ஸிட்டி காலேஜ் மாணவர்களிடம் ராஜாஜி பேச ஒப்புக் கொண்டார்.

கல்கத்தா சர்வகலா சாலையினரைப் பாராட்ட வேண்டும். சென்னை சர்வகலா சாலையைப் போலன்றி, வேலை செய்து கொண்டே பட்டம் பெற வேண்டுமென்றால் அதற்குத் தக்க வசதி அளித்திருக்கிறார்கள்.

தென் கல்கத்தாவிலுள்ள ஸிட்டி காலேஜ் வாசலில் கார் நின்றதும் கல்லூரி ஆசிரி யர்கள் பிரின்ஸ்பால்கள் ராஜாஜியை வர வேற்றார்கள். இந்தக் கல்லூரிக்கு இரண்டு பிரின்ஸ்பால்கள் என்றதும் ராஜாஜிக்கு ஆச் சரியமாகப் போய்விட்டது. "இரண்டு பேரா? உங்களுக்குள் சண்டை சச்சரவுகிடையாதா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

"எங்களுக்குள் சண்டை சச்சரவு ஒன்றுமே கிடையாது. மனமொத்துச் சகோதரர்கள் போல் வேலை செய்கிறோம்!" என்று அவர்கள் பெருமிதத்துடன் கூறிக் கொண்டார்கள்.

ராஜாஜியைக் கூட்டம் நடக்கும் இடத் துக்கு அழைத்துச் சென்றார்கள். புஷ்பத் தொட்டிகளால் அலங்கரிக்கப்பட்ட அழகிய சிறு மேடை அது. எதிரில் ஐயாயிரம் மாணவ மாணவிகள் உட்கார்ந்திருந்தனர். ராஜாஜி யைப் பார்த்த மாத்திரத்தில் எல்லாருடைய முகத்திலும் மகிழ்ச்சியும் குதூகலமும் தாண் டவமாடின. கூட்டத்தில் சரி பாதி பெண்கள் இருப்பதைப் பார்த்ததும் ராஜாஜிக்குப் பெண் கல்வியைப் பற்றியும், இன்றைய வாழ்க்கை முறையைப் பற்றியும் பல சிந்தனைகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன.

"இப்பொழுதெல்லாம் ஆண்களும் பெண் களும் ஒரேமாதிரியான கல்வி பயின்று வரு கிறார்கள். அதனால் ஆண்கள் செய்யும் வேலை களையெல்லாம், பெண்களும் செய்யப் போட்டி போடுகிறார்கள். இதனால் வாழ்க்கையில் ஆண்களுக்குப் பெருந் தொல்லையாக இருந்து வருகிறது. வாழ்க்கை என்பதே பெரும் போராட்டம்தானே!" என்றார்.

இந்தக் காலத்திய திருமணங்களைப் பற்றி வேறு குறிப்பிட்டார். "முன் காலத்தில் பெரியோர்கள் திருமணங்களை நிச்சயித்து நடத்தி வந்தார்கள். எந்தப் பெண் ஆனாலும் பரவாயில்லை என்று பெரியோர்கள் நிச்சயித்த படி பையன்கள் மணந்து வந்தார்கள். எந்தப் பையனானாலும் பரவாயில்லை என்று பெண் கள் மணந்து வந்தார்கள். ஆனால் இப் பொழுது பெண் தனக்குத் தகுந்த வரனைத் தேடுவதில் முனைகிறாள். ஆண் தனக்குத் தகுந்த மனைவியைத் தேடுவதில் முனைகிறான். இப்படித் தேடுவதில் வெகுகாலம் செல வழிந்து போகிறது. இதில் ஒரு சிலர் வெற்றி கரமாகத் தங்கள் துணைவர்களைத் தேடிக் கொள்கிறார்கள். மற்றவர்கள் ஏமாற்றமடை கிறார்கள். ஏமாற்றமடைந்தவர்கள் சந்தோஷ மாகக் காதல் திருமணம் செய்து கொண் டிருப்பவர்களைப் பார்த்துப் பொறாமைப் படுகிறார்கள்!" என்றார். இதைக் கூறியதும் சபையில் 'கொல்' என்று சிரிப்பு எழுந்தது.

இவ்விதம் அன்று கல்லூரியில் மாணவர் களுக்குப் பல அரிய உண்மைகளை நகைச்சுவை யுடன் ஒரு மணி நேரம் எடுத்துக் கூறினார்.

கல்லூரித் தலைவர்களுக்கு ஒரே சந்தோஷம். ராஜாஜி கல்லூரிக்கு, வந்துவிட்டுப் போன புனித தினத்தைக் கருதி அறைநாள் கல்லூ ரிக்கு விடுமுறை அளித்து விட்டதாக அறிவித் தார்கள். மாணவ மாணவிகளின் குதூகலத் துக்குக் கேட்க வேண்டுமா?

## ஸ்ரீ சங்கர ஜயந்தி

அத்வைத மதஸ்தாபகரான ஆதிசங்கரரின் ஜயந்தியை ஆண்டு தோறும் கொண்டாடி ஆஸ்திகம் தழைக்க அடிகோலும் பணியைப் பல ஆண்டுகளுக்கு முன்பே சாஸ்திர ரத்னாகரம் பிரும்மஸ்ரீ தேதியூர் சுப்பிர மணிய சாஸ்திரிகள் வெகு விமரிசையாகச் செய்து வந்தார்கள். ஸ்ரீ சாஸ்திரி களால் மயிலாப்பூர், அபிராமபுரத்தில் ஸ்தாபிக்கப் பெற்ற ஸ்ரீ சங்கரகுரு குலத்தில் இவ்வாண்டும் ஸ்ரீ சங்கர ஜயந்தி விழா விமரிசையாகக் கொண் டாடப்பட இருக்கிறது. சித்திரை மாதம் 7ந் தேதி முதல் 11ந் தேதி வரை (20-4-58 முதல் 24-4-58) ஸ்ரீ சங்கர பகவத் பாதாளுக்கு விசேஷ பூஜை களும் ஆராதனைகளும் நடைபெறும். வேதபாராயணம், பாஷ்ய பாடம் முதலியவற்றோடு, பிரபல பண்டிதர்களைக் கொண்டு ஸ்ரீ சங்கர மஹிமையைப் பற்றிய பிரவசனங்களுக்கும் இன்னிசைக் கச்சேரிகளுக்கும் 15-4-58 முதல் 4-5-58 வரை ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

ஆஸ்திகர்கள் அனைவரும், இந்த விழாவில் கலந்து கொண்டு ஸ்ரீ சங்கர ரின் அனுக்கிரஹத்துக்குப் பாத்திரர்களாகும்படி கோரப்படுகிறார்கள்.

## அணு விஷயம்

கல்கத்தாவில் ஒரு சிந்தனையாளர்கள் சங்கமிருக்கிறது. இச்சங்கத்தில் நீதிமன்ற நீதிபதிகள், கல்லூரிப் பேராசிரியர்கள், பிரபல எழுத்தாளர்கள், பிரபல வக்கீல்கள் ஆகியோர் அங்கத்தினர்கள். இவர்கள் ராஜாஜியை "அணுகுண்டு தடை" விஷயமாகத் தங்கள் சங்கத்தில் வந்து பேசும்படி அழைத்தார்கள்.

அன்று மாலை ஆறு மணிக்குக் கூட்டம் போடப்பட்டிருந்தது. கூட்டத்துக்குக் கல்கத்தா ஹைகோர்ட்டு நீதிபதி ஒருவர் தலைமை வகித்தார். அவர் ராஜாஜியை வரவேற்றுப் பேசிய முறையில் ராஜாஜியிடம் எவ்வளவு பக்தியும் சிரத்தையும் கொண்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகியது.

"உலகில் இருவகை சமுதாயங்கள் நிலைத்து விட்டன. ஒன்று முதலாளித்வ சமுதாயம். மற்றையது சோஷலிஸ சமுதாயம். இவை யொன்றையொன்று பார்த்துப் பயப்பட்டு, சந்தேகப்பட்டு யுத்த மின்றியே யுத்தம் நடத்தி வருகின்றன!

"இதனால் சமாதான காலமாக இருந்தும், யுத்தகாலத்தைவிடப் பீதி நிறைந்த காலமாக இருக்கிறது. உலகத்தை இந்தப் பீதியிலிருந்து விடுவிக்க ஏதாகிலும் ஒரு நாடு, எதிர்க் கட்சியை எதிர்பாராமல் ஒருதலைப்பட்சமாக அணுகுண்டு ஹைட்ரஜன் குண்டுகளைப் பகிஷ்கரிக்க வேண்டும்! இது ஒன்றுதான் வழி" என்றார். இத்துடன் ராஜாஜி கல்கத்தா விஜயத்தின் முக்கிய நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டார். இரவு, ராஜபவன் திரும்பியதும், ஸ்ரீமதி பத்மஜா நாயுடுவிடம் விடைபெற்றுக் கொண்டார். மறுநாள் காலை 8 மணிக்கு டம்டம் விமான நிலையத்துக்கு வந்து விமானமேறிச் சென்னைக்குச் சென்றார். அப்படிப் புறப்படுவதற்குமுன், கல்கத்தா நகரப் பொதுமக்கள் தம்மிடம் காட்டிய பேரன்புக்கு நன்றி செலுத்தியும், தம்மை வரவேற்க விழைந்த நூற்றுக்கணக்கான சங்கங்களுக்குத் தாம் வர இயலாமற் போனதைப் பற்றி மன்னிப்புக் கோரியும் ஓர் அறிக்கை விடுத்திருந்தார். விமான நிலயத்துக்கு ராஜ்பவனிலிருந்து கவர்னரின் ஏ.டி.ஸி. திரு முக்கர்ஜி வந்து வழியனுப்பி வைத்தார்.



தஞ்சாவூர் திரு. சரவணபவான் அதிபர் ஸ்ரீ எம். என். வெங்கடாசலம் அய்யர் குமாரனுக்கு 9-3-58ல் மிகவும் சிறப்பாக உபநயனம் நடந்தேறியது.

## எழுத்தாளர்களிடையே

பல நண்பர்கள் வற்புறுத்தியதன் பேரில், முக்கியமாக எழுத்தாள நண்பர்கள் வற்புறுத்தியதின் பேரில் ராஜாஜி சென்னைக்குப் புறப்பட்டு வந்த பிறகு நான் கல்கத்தாவில் ஒரு நாள் அதிகமாகத் தங்கினேன்.

வங்கதேசம் என்று நினைத்த மாத்திரத்தில் நமக்கு ராமகிருஷ்ண பரமஹம்ஸர் நினைவு தான் வருகிறது! ராமகிருஷ்ணர் வசித்து, பூஜை செய்து அருள் ஒளி பரப்பிய புனித ஸ்தலத்தைக் காண வேண்டும் என்று உள்ளம் விழைகிறது! அதனால் அன்று பிற்பகல் தட்சிணேசுவரம் சென்றிருந்தேன்.

அங்கே பரந்த நதியின் கரையில் சோலையாக இருந்த இடத்தில் ராமகிருஷ்ணர் பூஜித்த காளி கோயில் இருக்கிறது.

காளிதேவியைத் தரிசித்துக்கொண்டு அந்தக் கோவிலின் ஒரு மூலையில் அமைந்துள்ள ஒரு சின்னஞ்சிறு அறைக்குச் சென்றேன். அங்கு தான் ராமகிருஷ்ணர் வசித்து வந்தாராம். ராமகிருஷ்ணரும், சாரதாமணிதேவியாரும் உபயோகித்த பழம் கட்டில்கள் இன்னும் போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள். அவற்றைப் பார்த்த மாத்திரத்தில், 'எவ்வளவு எளிய வாழ்க்கை! ஆனால் எவ்வளவு பெரிய மகான்!!' என்ற எண்ணம் மேலோங்கியது.

அப்படியே பேலூர் மடத்தையும் பார்த்துக் கொண்டு கல்கத்தா மாலை திரும்பினேன்.

பாரதி சங்கத்தில் எழுத்தாள நண்பர்கள் என்னைச் சந்திக்கக் காத்திருந்தார்கள். கல்கத்தா எழுத்தாளர் சங்கத்தில் கல்கி போட்டிகளில் பரிசு பெற்ற எழுத்தாளர்கள் இருக்கிறார்கள் என்பதை அறிந்தேன். அவர்களுக்கெல்லாம் 'கல்கி' பத்திரிகையினிடமுள்ள அளவுகடந்த அன்பும் ஈடுபாடும் கண்டு பெரு மகிழ்ச்சியுற்றேன்.

மறுநாள் மாலை மூன்றரை மணிக்கு ஹௌரா ஜங்ஷனை விட்டுச் சென்னைக்குப் போகும் மெயில் புறப்படுகிறது என்றார்கள். மூன்று மணிக்கே ரயிலடிக்கு வந்துவிட்டேன். மணி மூன்றரைக்கு மேலேயும் ஆகிவிட்டது. பிளாட்பாரத்தில் வண்டியைக் காணவில்லை! வரும்போதுதான் ஒருமாதிரி நடந்தது என்றால், போகும்போதும் இப்படி என்றால் எனக்கு எப்படியிருக்கும்? கல்கத்தா ரயில் நிர்வாகம் பிரமாதம்தான் என்று நினைத்துக் கொண்டு மூன்றேமுக்கால் மணிக்கு வந்த ரயிலில் ஏறினேன். வண்டி வந்த பதினைந்து நிமிஷத்தில் புறப்பட்டு விட்டது. (முற்றும்)

# வேர்க்குருவிலிருந்து

# 2

## வழி நிவாரணம்!

சுகமளிப்பதும், கிருமிகளை ஒழிப்பதுமான ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் சோப்பு எரிச்சலூட்டும் வேர்க்குருவிற்குக் காரணமான அடைபட்ட சரும துவாரங்களை சுத்தம் செய்கிறது.

இதமளிப்பதும் புத்துணர்ச்சியூட்டுவதுமான ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரை ஸ்நானத்திற்குப்பின் உபயோகித்தால், உங்களுக்கு சுகமும் குளுமையும் அனுபவமாகும்.







**ஜான்ஸன்ஸ்** ப்ரிக்லி ஹீட் சோப்

மற்றும் பவுடர் ஒன்றுக்கொன்று இணங்கி வேலை செய்து

வேர்க்குருவிலிருந்து நிவாரணமளிக்கின்றன

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப இந்தியா பிரைவேட் லிமிடெட்

உற்பத்தியை அதிகமான அளவில் பெருக்கி இருவிதப் பயன்களை அடையுங்கள்

மிக அமோகமாக உற்பத்தி செய்து தற்போது உணவு பற்றாக்குறையைச் சரிக்கட்ட அயல்நாடுகளிலிருந்து இறக்குமதிக்காகச் செலவிடுவதை மிச்சப்படுத்துங்கள்

அதிகப் பண்டங்களை உற்பத்தி செய்து ஐந்தாண்டுத்திட்டத்தின் உயிர்நாடியான தொழில்கள் விரைவில் வளர உதவுங்கள்

வர்த்தகம், தொழில் முதலிய துறைகளில் உங்களுக்கு உதவி அளிக்கவும் ஆலோசனைகள் கூறவும், சகலவித வசதியுடன் எமது பாங்கு இருக்கிறது

# இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமைக் காரியாலயம்: வடக்கு பீச் ரோடு, சென்னை-1

தென்னிந்தியா முழுவதும் மற்றும் இந்தியா, இலங்கை, மலேயா சிங்கப்பூர் நாடுகளில் முக்கிய நகரங்களிலும் கிளைகள் இருக்கின்றன

உலகிலுள்ள எல்லா பாகங்களிலும் எங்கள் பிரதிநிதிகள் உள்ளனர்

டி. பி. பார்த்தசாரதி, காரியதரிசி



அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் க்ரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

# பாவை விளக்கு

## அத்தியாயம் 33

## யார் குழந்தை?

நள்ளிரவு. பன்னிரண்டு மணி. கீழ்வீட்டில் ஆளுக்கொரு பக்கமாக இருந்து கொண்டு உமாவின் மீது 'கிடுக்கித் தாக்குதல்' நடத்தினர், பேராசிரியரும் சௌந்தரத்தம்மாளும். பேராசிரியர் உமாவைச் சொற்களால் தாக்கினார். சௌந்தரத்தம்மாள் தணிகாசலத்தின் மீது வசைபுராணம் பாடினாள். தணிகாசலத்தைத் தாக்கினால் உமாவிடம் ஒன்பது மடங்கு பலனை எதிர்பார்க்கலாம் என்பது அவளுடைய அநுபவம்.

"என்னை எவ்வளவு வேண்டுமானாலும் பேசுங்கள். அவர் பெயரை எதற்காக அத்தை இழுக்கிறார்கள்? அவர் ஒருபாவமும் அறியாதவர்" என்றாள் உமா.

"அவருக்கும் ஒன்றும் தெரியாது; உனக்கும் ஒன்றும் தெரியாது. இதெல்லாம் என்ன நடிப்பு? வித்தாரக்கள்ளி." உமாவின் முகத்தில் இடித்தாள் சௌந்தரத்தம்மாள்.

உமாவுக்கு ஏதோ நடக்கக் கூடாத காரியங்கள் நடக்கப் போவதாக அறிகுறிகள் தோன்றின. குற்றாலத்துக்குப் போகும்வழியில் முதல் முறை அவனைச் சந்தித்ததிலிருந்து அன்று வரையில் நடந்த நிகழ்ச்சிகளை அடுக்கடுக்காய் நினைத்துப் பார்த்தாள். எத்தனை எத்தனையோ பசுமையான காட்சிகள்! உமா தனக்குள் போட்டுப் பார்த்த பழங்கணக்குப்படி தணிகாசலம் மிகவும் உயர்ந்த மனிதனாகவே விளங்கினான். அவன் உத்தமனாகவே அவளுக்குக் காட்சியளித்தான்.

'அவர் என்னைத் தவறான கண்கொண்டு நோக்கவில்லை. அவர் என்னை இழிந்த குணமுள்ளவளாக மதிக்கவில்லை. கண்ணியக் குறைவாக அவர் ஒருபோதும் நடந்து கொண்டதில்லை. அப்படி ஏதும் நான் அவரிடம் குறை கண்டிருந்தால் என்றைக்கோ அவரை விட்டு விலகியிருப்பேன். பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பார்கள். இவர் உயர்ந்து கொண்டே போகிறாரே, இவரிடம் என்ன தனித்தன்மை இருக்கிறது?' உமாவுக்குள் இத்தகைய ஆராய்ச்சி எழுந்தபிறகு அவளைப் பேராசிரியராலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. சௌந்தரத்தம்மாளாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. இரண்டு மணி அடித்தது. கண்ணிமைகள் கனமாகி உறங்கினாள் உமா.

மாடி வீட்டில் அதே நேரத்தில் மங்கலான ஊதா நிறப் படுக்கை அறை விளக்கு எரிந்து கொண்டிருந்தது. தொட்டிலில் உறங்கிய குழந்தை கல்யாணி விழித்துக் கொண்டு அழுதாள். அவளை மெல்ல எடுத்துத் தணிகாசலத்திடம் கொடுத்தாள் கௌரி. தணிகாசலத்திடம் வந்தவுடன் குழந்தையின் அழுகை ஓய்ந்தது. அவள் அப்பா பெண்; அவளை



அகிலன்

விட்டால் அடுத்தாற் போல் உமாவிடந்தான் அவள் அடங்குவாள். கௌரியிடம் இரண்டு குழந்தைகளுமே அடங்க மாட்டார்கள். பையன் பரமசிவத்துக்குப் பாட்டி செல்லம் கொடுத்தாள். குழந்தை கல்யாணிக்கு உமா செல்லம் கொடுத்தாள்.

குழந்தையை மார்பில் விட்டுக் கொண்டு அதனிடம் பேச்சுக் கொடுத்தான் தணிகாசலம்.

"கல்யாணி. நாளையிலிருந்து நீ உன் உமா அக்காவை மறந்து விட வேண்டும். தெரியுமா? நாம் வேறு வீட்டுக்குக் குடி போகிறோம்."

"அ...க்...கா!" என்று வாய் நிறையச் சொல்லிச்

"பேசாமல தூங்க மாட்டீர்களா?" என்று கேட்டு விட்டுக் கண் கலங்கினாள் கௌரி. அவளுடைய விரல்கள் தணிகாசலத்தின் நெற்றி மயிரில் இழைந்து கொண்டிருந்தன. "வீடு பார்த்துக் கொண்டு மெதுவாய்ப் போவோம். அதற்குள் என்ன அவசரம்? உங்களை அவர் பேசினால் அதில் எனக்கும் பங்கு இல்லையா? வேறு யார் நாம் வருத்தப் பட்டுக் கொள்வதற்கு? நம்முடைய உமாவின் அப்பாதானே பேசினார்? அவருடைய வருத்தம் அவருக்கு!"

"யார் மேலும் எனக்கு வருத்தமில்லை. என்னைத்தான் நான் நொந்து கொள்கிறேன்.—விதி என்ற ஒன்றை நீ நம்புகிறாயா, கௌரி? நான் இப்போது அதை நம்புகிறேன். விதியின் கை விளையாட்டுப் பொம்மைகள் மனிதர்



சிரித்தாள் கல்யாணி. 'அம்மா, அப்பா, அண்ணா, பாட்டி' என்ற சொற்கள் அவள் மழலையில் தோன்று முன்பே, 'அக்கா' என்ற சொல் தோன்றி விட்டது.

தணிகாசலத்தின் தலையைத் தூக்கித் தன் மடியில் விட்டுக் கொண்டாள் கௌரி. குழந்தை அவன் மார்பில் தவழ்ந்து விளையாடும் இந்தப் புனிதமான நேரத்தில், விவரிக்க முடியாத ஒரு புகை மூட்டம் அந்த அறைக்குள் சுழன்று கொண்டிருந்தது. அவர்களுக்கு என்னவோ போலிருந்தது. அந்தப் புகை நடுவே தீயெழுப்பப் பார்த்தன, தணிகாசலத்தின் வார்த்தைகள்.

"கல்யாணி!" என்று குழந்தையைத் தூக்கி முகத்துடன் அணைத்துக் கொண்டான் தணிகாசலம். "நாளைக்கு இதே நேரம் நாம் வேறு வீட்டில் இருப்போம், கல்யாணி! அங்கே உன் அக்காள் வரமாட்டாள், வந்து உன்னைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்ச மாட்டாள். ஆமாம், உமா அங்கே வரக் கூடாது! வந்தால் நான் அவளை வெளியில் அனுப்பி விடுவேன்!"

கள்" என்றான் தணிகாசலம்.

கௌரி அவனைத் தேற்றுவதற்கு முயற்சி செய்தாள். வீட்டுப் பஞ்சம் நிறைந்த சென்னை நகரத்தில் எப்படி மறுநாளே வீடு மாற்றிக் கொள்ள முடியும்? சண்பகத்தின் வீட்டில் அவள் வேறு யாரையும் குடி வைக்கவில்லை. அதை நினைத்துக் கொண்டுதான் அவன் இப்படிப் பேசுகிறானோ என்று பயந்தாள் கௌரி. அவனிடம் மெதுவாக விசாரித்தாள்.

"மூன்றாவது தெருவில் வெகு நாட்களாக இதைப் போல் ஒரு மாடி பூட்டிக் கிடக்கிறது. ஐம்பது ரூபாய் பெறுமானமில்லாத வீட்டுக்கு நூறு ரூபாய் வாடகையும், ஆயிரம் ரூபாய் முன் தொகையும் கேட்கிறார்கள். அதனால் தான் இன்னும் அங்கு யாரும் குடி வரவில்லை. நம்மிடம்தான் நேற்று வந்த 'மலர்க்கொத்து'ப் பணம் ஆயிரம் கையில் இருக்கிறதே?"

பகீரென்று வயிற்றைப் பிடித்து இழுத்தது கௌரிக்கு. மாதக் கணக்காக அவள் எதிர்பார்த்த பணம் அது. பல

முறை நடந்து கால் தேய வைத்த காசு அது. ஆயிரம் ரூபாய்க்கு ஐம்பது வகைச் செலவுகளை அவர்கள் இருவரும் திட்டம் போட்டு வைத்திருந்தார்கள். குழந்தை கல்யாணிக்கு வளையல்கள், கௌரிக்குப் புடவைகள், பையனுக்குச் சொக்காய்கள், பால்காரன், மளிகைக் கடைக்காரன்......

"நூறு ரூபாய் வாடகை கொடுக்க நம்மால் கட்டுப்படியாகுமா?"

தணிகாசலம் சிரித்தான். "நான் வாழும் எளிய வாழ்க்கை உனக்குத் தெரியும். நாலு முழ வேட்டியும், அரைக் கைச் சட்டையும் எனக்குப் போதும். நீயும் உமாவும் படுத்துகிற பாடு தாங்காமல்தான் நான் முழுக்கை சட்டை போட்டுக் கொள்ளுகிறேன். ஆனால் எனக்கு, விசாலமான வீடு வேண்டும். என்னுடைய தொழிற்சாலை வீடு தானே? எழுதுவதற்குக் காற்றோட்டமுள்ள ஒரு அறை வேண்டாமா?"

தணிகாசலத்தின் பிடிவாதத்துக்கு முன்னால் கௌரியின் கண்ணீர் பலன் அளிக்கவில்லை. அவர்கள் போட்டிருந்த ஐம்பதுவகைத் திட்டங்களும் இப்போது அந்தரத்தில் தொங்கின.

"வீட்டை மாற்றிக் கொண்டாலும் நீங்கள் உமாவின் வரவைத் தடுக்கக் கூடாது. வீணாக நம்முடைய குழந்தை ஏங்கிப் போவான். உமாவும் உருகிப் போவாள்" என்றாள் கௌரி.

"அவளைப் பார்க்கக் கூடாதென்பதற்குத்தானே இந்த ஏற்பாடு?"



"என்னால் அது முடியாது."

"பிறகு நீயும் இங்கே இருந்துகொள். நாங்கள் போகிறோம்."

"ஒரேயடியாக இடம் கொடுத்தவரும் நீங்கள். இப்போது ஒரேயடியாக முறித்துக் கொள்பவரும் நீங்கள்."

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? பட்டணத்துக்கு வந்தவுடன் நாம் ஒதுங்கிப் போயிருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்காதோ, என்னவோ? நடந்ததை நினைத்து இனிப்பலனில்லை. அவள் உதவி செய்யாவிட்டால் என்னால் இவ்வளவு தூரம் உழைத்திருக்கவும் முடியாது. இனிமேல் நாம் விதி விட்ட வழியில் போவோம். விதி இப்போது நம்மை இந்த வீட்டை விட்டுக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுகிறது. நாளைக்குச் சௌந்தரத்தம்மாள் என் அறைக்குள் நுழைந்து என்னை வெளியே போகச் சொல்லும்படி வைத்துக் கொள்ள வேண்டாம்."

தணிகாசலத்தை அப்படியே கட்டிக் கொண்டு கண்ணீர் வடித்தாள் கௌரி. "யாருக்கும் கெடுதல் செய்யாத உங்களுக்கா இந்தக் கஷ்டகாலம் வரவேண்டும்?" என்று தேம்பினாள்.

"கெடுதலை அறிந்து செய்தாலும் பலன் ஒன்றுதான்; அறியாமல் செய்தாலும் பலன் ஒன்றுதான். கெடுதலா, இல்லையா, அறிந்து செய்தோமா, அறியாமல் செய்தோமா என்பதெல்லாம் நாம் நாளைக்கு அந்த வீட்டில் போய்ப் பேசிக் கொள்ளலாம். நாழிகையாகி விட்டது; தூங்கு."

கல்யாணி மார்பில் படுத்தவாறே உறங்கினாள். அவளை அருகில் தனிப் பாயில் எடுத்து விட்டு, தானும் தூங்குவதுபோல் தணிகாசலம் பாசாங்கு செய்தான். கௌரியின் கவலையைத் தணிப்பதற்காகச் செய்த பாசாங்கு இது.

பொழுது விடிந்தது செக்கச் செவேரென்று. காட்டரளிக் கூட்டம் போல், சிரித்தது கீழ் வானம். தணிகாசலம் தனக்குள் அது கடைசி முறை என்று தீர்மானித்துக் கொண்டு, அந்தச் சன்னல் வழியே சூரிய உதயத்தைப் பார்த்தான். அடிக்கடி இனிமேல் சூரிய உதயத்தைக் காணலாம். ஆனால் அந்தச் சன்னல் வழியே, வேப்பமரக் கிளைகளுக்கு அப்பால் தோன்றும் காலைக் கதிரவனைக் காண முடியாது. உமா இனிமேல் அவன் அருகில் வந்து நின்று கொண்டு அவனுக்கு மாலை மதியத்தைச் சுட்டிக் காட்ட மாட்டாள். அவள் எழுதும் கவிதைகளை அவன் அவளுக்குப் பாடிக் காட்டுவது எப்போது?

விண்மீன், தண்மதி, காலைக்கதிர், சுறுமீன் இப்படி எத்தனையோ பொருள்களைப் பற்றி அவள் எழுதியிருந்தாள். சென்னைக்கு அவன் வந்த புதிதில், முதல் நாள் அவனும் அவளும் அங்கே கவிதைச் சண்டை போட்டுக் கொண்ட காட்சி அவன் கண்களில் மிதந்தது. அந்த அறைக்குள் அவன் திரும்பிய பக்கமெல்லாம் உமா நீக்கமற நிறைந்திருந்தாள். அவள் அவனுக்குக் கொடுத்த ஒரு பேனாவைத் தவிர மற்ற எதையும் அந்த அறையிலிருந்து எடுத்துக் கொண்டு போவதற்கு அவனுக்கு உரிமையில்லை.

அவள் கொடுத்த மேசை, அவள் கொடுத்த நாற்காலி, அவள் கொடுத்த அலமாரி, அவள் கொடுத்த புத்தகங்கள், அவள் வைத்து வளர்த்த பூந் தொட்டிகள், அவள் எழுதி வைத்த எழுத்துக் கற்றைகள்......

சலேரென்று திரும்பி வந்து தெருவில் நடந்தான் தணிகாசலம். சட்டைப்பைக் குள்ளிருந்த ஆயிரம் மூன்றுவது தெருவின் வீட்டுக்காரரிடம் சென்றது. "நல்ல நாள் பார்த்துக் கொண்டு வரலாமே?" என்று சம்பிரதாயப்படி பேசினார் அதன் சொந்தக்காரர்.

"எல்லா நாளும் எனக்கு நல்ல நாள் தான். 'நலிந்தோர்க்கில்லை நாளும் கிழமையும்' என்று நீங்கள் கேட்டதில்லையா?" என்றான் தணிகாசலம்.

'சரியான முட்டாள் இவன்' என்று தமக்குள் மதிப்பீடு செய்து கொண்டார் அவர். 'வேறு எவன் இத்தனை நாள் தேடுவாரற்றுக் கிடந்த இடத்துக்கு முன் பணம் கொண்டு வருகிறவன்!'

தொழிற்சாலையில் விடுமுறை பெற்றுக் கொண்டு, இரண்டு கை வண்டிகளைக் கொண்டு வந்து வாசலில் நிறுத்தினான். தாயார் கல்யாணி அம்மாளுக்கு இரவில் நடந்த விஷயங்கள் தெரியாது. கௌரி ஒரு விதமாக அதை வெளியிட்டு வைத்தாள். தன்னுடைய பிள்ளையின் குணம் அவளுக்கு ஏற்கனவே தெரிந்தது தான். அவன் முகத்தில் நிலவிய கடுமையைக் கண்டபிறகு, அவள் அவன் செய்கையைத் தடுக்கவில்லை. அவசரம் அவசரமாக மூட்டை முடிச்சுக்களை வண்டிகளில் ஏற்றினார்கள். தணிகாசலம் முதல் நடை வண்டிகளுடன் சென்று விட்டு, இரண்டாவது நடைக்குத் திரும்பினான். அதற்குள் வீடு ஒரே அழுகை மயமாய் மாறி விட்டது. யாரையும் திரும்பிப் பாராமலே அங்கு கிடந்த சாமான்களையெல்லாம் ஒவ்வொன்றாகத் தூக்கி வண்டிக்காரர்களிடம் கொடுத்தான். இரண்



ஓ-இந்த கண்ணைக்
கூசும் வெளிச்சம்...



# ஆ - ஹா! ஆர்ஜெண்டா

## — பிரகாசமான கண்ணைக் கூசாத வெளிச்சம்!




நிலவு ஒளிபோல் குளுமையானதும் ஆனால் பகல்போல் பிரகாசமானதுமான ஒளி வீசும் உன் வெண்மை ஆர்ஜெண்டா பல்புகள், வீடுகளுக்கும், வேலை ஸ்தலங்களுக்கும் சிறந்தவை.

இன்றே ஒரு ஆர்ஜெண்டா பல்பை வாங்கி, அதன் வெளிச்சம் கண்ணுக்கு எவ்வளவு குளுமையாயும் தேக ஆரோக்கியத்திற்கு எவ்வளவு சிறந்ததாயும் இருக்கிறது என்று பாருங்கள்.

**பிலிப்ஸின் தயாரிப்புகளே**
**சரியான விலைக்கே வாங்குங்கள்**

உங்களுடைய வியாபாரியிடம் பிலிப்ஸின்
விலைப்பட்டியலைக் காண்பிக்கச் சொல்லுங்கள்

**பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்**



# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்க்

### உபயோகித்தால்

**நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடனும், நறுமணத்துடனும் இருக்கலாம்**

விருந்த வைபூட்டுவதும், நறுமணம் வாய்ந்ததுமான பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகித்தால், நீங்கள் கொடிய வெப்பத்திலும், புழுக்கமான காலங்களிலுங்கூட இனிய உணர்ச்சியுடன் இருக்கலாம். மென்மையான இந்த டால்கம் பவுடரை உடம்பில் தூவிக்கொண்டால், எரிச்சலூட்டும் வியர்வைத் தொல்லை ஒழியும். நாள் முழுவதும் புதுமலரைப் போல் இனிய புதுமையுடன் இருக்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள்.

செஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)



டாவது நடையில் வண்டிகள் பாதிகூட நிரம்பவில்லை.

இனிமேல் மனிதர்கள் மட்டுமே புறப்பட வேண்டும்.

உமா அங்கிருந்து யாரையும் விடுவதாக இல்லை. காய்ச்சலோடு காய்ச்சலாக எழுந்து வந்து முதலில் கல்யாணி அம்மாளைக் கட்டிக் கொண்டாள். பிறகு கௌரியைக் கட்டிக் கொண்டாள். பெண்கள் மூவரும் சேர்ந்து கொண்டு எழுப்பிய அழுகை ஒலி தணிகாசலத்துக்குத் தலைவேதனையைக் கொடுத்தது. குழந்தைகளும் அவர்களோடு சேர்ந்து கொண்டார்கள். உமாவுக்குத் தணிகாசலத்தின் முகத்தைத் திரும்பிப் பார்க்கவே பயம். அடிபட்ட வேங்கையின் எழுச்சியுடன் அவன் முகம் குமுறிக் கொண் டிருந்தது. வாயைத் திறந்து யாருடனும் அவன் பேசவில்லை.

வெளியில் வண்டிகள் காத்துக் கொண்டு நின்றன. தணிகாசலமும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். சௌந்தரத்தம்மாள் நாசூக்காக அவன் முகத்தில் விழிக்காமல் ஒதுங்கிக் கொண்டாள். பேராசிரியர் ஒப்புக்காக ஓரிரண்டு உபசார வார்த்தைகள் அவனிடம் சொல்லிப் பார்த்தார். 'வீட்டைக் காலி பண்ண வேண்டாம்' என்று காலி பண்ணிய பிறகு, மரியாதையை உத்தேசித்துக் கூறினார். 'டிஸ்போசல் மாமா' வீட்டில் இல்லை. அவர் முன்பே 'டிஸ்போசலை'த் தெரிந்து கொண்டு ஆபீசுக்கு நழுவினார். பையன் பாலு மட்டிலும் ஏக்கத்துடன் கீழே நின்று கொண்டு வண்டிகளையெல்லாம் வேடிக்கை பார்த்தான்.

தணிகாசலத்தால் பொறுக்க முடியவில்லை. "கௌரி! அம்மா!......உம், கிளம்புங்கள்!"

கல்யாணி அம்மாள் தன் பேரனைத் தூக்கிக் கொண்டாள்.

"எதற்காக அழுகிறீர்கள்? அழுது சாதித்ததெல்லாம் போதும். நாழியாகிறது; கிளம்புங்கள்!"

கல்யாணி அம்மாள் கண்களைத் துடைத்துக் கொண்டு கீழே போனாள். பேராசிரியரிடமும் சௌந்தரத்தம்மாளிடமும் சொல்லிக் கொண்டாள்.

கௌரியால் உமாவின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. திணறினாள், திக்கினாள், தேம்பினாள், விம்மினாள்.

"அவளை விடு, உமா!" தணிகாசலம் கோபத்துடன் உறுமினான்.

"முடியாது! என்னையும் உங்களோடு அழைத்துக்கொண்டு போங்கள். நானும் வருகிறேன்" என்றாள் உமா.

"உமா! ஏ! உமா!"......பற்களை நறநறவென்று கடித்தான் தணிகாசலம்.

"இந்த வீட்டில் யாருமே மனிதர்கள் இல்லை. உங்களையும் சேர்த்துத்தான் சொல்லுகிறேன். உங்கள் யாருக்குமே ஈவு இரக்கமில்லை. இதெல்லாம் என்ன சூழ்ச்சி? என்னை உயிரோடு போட்டு இங்கே புதைத்து விட்டு, நீங்கள் மட்டும் தப்பிக் கொள்ளப் பார்க்கிறீர்களா? புறப்படுங்கள்; நானும் வருகிறேன்."

கௌரியின் கையிலிருந்த குழந்தையை வெடுக்கென்று பிடுங்கித் தோளில் சாய்த்துக் கொண்டு முன்னால் நடந்தாள் உமா. தணிகாசலம் கௌரியைப் பற்றி இழுத்தபடி கீழே இறங்கினான். தெருவில் உள்ளவர்கள் இந்தக் காட்சியைப் பார்ப்பதில் அவனுக்கு விருப்பமில்லை. உமாவை அதட்டினான். அவளைத் தடுத்து நிறுத்திவிட்டு, "நான்



குழந்தையை வாங்கிக் கொண்டு வருகிறேன்; நீங்கள் போகலாம்" என்று மற்ற இருவரையும் அனுப்பிவைத்தான்.

வண்டிகள் நகர்ந்தன. மாமியும் மருமகளும் பையன் பரமசிவத்துடன் நடந்து சென்றார்கள்.

குழந்தையும் கையுமாகத் தலை விரிகோலமாய் நின்றாள் உமா. தணிந்த குரலில் தணிகாசலம் அவளிடம் குழந்தையைக் கொடுக்கும்படி கெஞ்சினான்; மன்றாடினான். பேராசிரியர் வெளித் தாழ்வாரத்தின் தூணில் சிலை போல் சாய்ந்து கொண்டு வேடிக்கை பார்த்தார். சௌந்தரத்தம்மாளின் கண்கள் கதவுக்கு அருகில் இருந்து கொண்டு, 'இதெல்லாம் என்ன நாடகம்?' என்று இடித்துக் கேட்டன.

அழாக் குறையாக அவளிடம் மன்றாடியும் உமா அவனிடம் குழந்தையைக்

கொடுக்கவில்லை. அவன் வெகுண்டு சீறி விழுந்தான்.

"என்னையும் அழைத்துக் கொண்டு போங்கள்; அல்லது இவளை என்னிடம் கொடுத்து விட்டுப் போங்கள். இவள் என் குழந்தை! என் குழந்தை! என் கண்ணு! நீ என் குழந்தைதானே?"

'ஆமாம்' என்று தலை ஆட்டியது அந்தக் குழந்தை.

"உமா! தெருவே இங்கு கூடி வந்து சிரிக்கப் போகிறது, உமா! பைத்தியம் போல் பேசுகிறாயே! நீ படித்த பெண் இல்லையா? உனக்கு வயதாகவில்லையா?"

"இவள் என் குழந்தை" என்று குழந்தையின் முகத்தோடு முகம் வைத்துக் கொஞ்சி, கல்யாணியை மூச்சுத் திணற வைத்தான் உமா. குழந்தை வீறிட்டு அழுதது.

தணிகாசலம் உமாவின் கரங்களிலிருந்த குழந்தையை முரட்டுத்தனமாய்ப் பிடுங்கித் தன் மார்பில் சாய்த்துக் கொண்டான். குழந்தையின் அழுகை இருபது மடங்காயிற்று.

இந்த நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள் போல், சௌந்தரத்தம்மாள் வெளியில் பாய்ந்தோடி வந்து, உமாவை உள்ளே இழுத்தாள். உமாவின் கால்கள் தடுமாறின. கீழே விழுந்த உமாவைச் சௌந்தரத்தம்மாள் பரபரவென்று புழுதித் தரையில் போட்டு இழுத்தாள். உமாவின் கருங் கூந்தலில் செம்புழுதி படர்ந்தது.

குழந்தை கல்யாணி தன் பிஞ்சுக் கரங்களை நீட்டினாள். உமாவின் கரங்களும் நீண்டன. அவர்களுக்குள் இருந்த இடைவெளியும் நீண்டது.

## அத்தியாயம் 34

# குழந்தையின் கேள்வி

சொந்த வீட்டுக்காரர்கள் வாடகைக்கு வருபவர்களை மிரட்டுவதும் உண்டு; வாடகைக்கு வருபவர்கள் சொந்த வீட்டுக்காரர்களை மிரட்டுவதும் உண்டு. விட்டுக் கொடுக்கத் தெரிந்தவர்கள் ஒற்றுமையாக வாழ்வார்கள்; விட்டுக் கொடுக்கத் தெரியாதவர்கள் முட்டி மோதிக் கொள்வார்கள். எல்லா விஷயங்களுக்கும் இது பொருந்தும்.

தணிகாசலத்தின் வீட்டுக்காரர், வீடு தம்முடையது என்று எடுத்த எடுப்பிலேயே அவர்களுக்குச் சுட்டிக்காட்ட விரும்பினார். பையன் பரமசிவத்தின் கலகலப்பான விளையாட்டுக்கள் அவருக்குப் பிடிக்கவில்லை. படிகளின் கைப்பிடியில் சருக்கு இறங்குவதும், 'பார்' விளையாட்டு விளையாடுவதுமாக அவன் பொழுது போக்கினான். ஆண்பிள்ளை என்கிற தன் அந்தஸ்து தன் தங்கையோடு சேர்ந்து விளையாடினால் கெட்டுப் போகும் என்பது அவன் எண்ணம்.

வீட்டுக்காரர் பையனின் சுட்டித்தனத்தைக் கௌரியிடம் சுட்டிக் காட்டினார். "உங்கள் பையன் சர்க்கஸ் வித்தையெல்லாம் செய்வான் போலிருக்கிறதே!"

"ஆமாம்; எல்லாம் செய்வான்" என்றாள் கௌரி.

"கண்ணாடிபோல் நாங்கள் அழுக்குப் படாமல் வீட்டை வைத்துக் கொண்டிருக்கிறோம். பையனின் வாலைக் கொஞ்சம் நறுக்கி வையுங்கள்."

"அடப் பாவமே! இந்தக் கண்ணாடி வீட்டுக்கா நூறு ரூபாய் வாடகை? பையன் வீட்டை உடைத்துவிட மாட்டான்; பயப்படாதீர்கள்."

வால் நீளத்தைக் குறைக்கப் போனவர் தமது வாய் நீளத்தைக் குறைத்துக் கொண்டார்.

அந்த வீட்டுக்காரக் குடும்பம் மிகவும் பக்காவான குடும்பம். அக்கம்பக்கத்தில் கொலை — கொள்ளை நடந்தால்கூடக் கவலைப்பட மாட்டார்கள். மறுநாளே தணிகாசலத்தைத் தேடிக் கொண்டு சில நண்பர்கள் அங்கு வந்தார்கள். "மாடியில்தானே அவர் குடியிருக்கிறார்?" என்று கேட்டார்கள். "எங்களுக்குத் தெரியாது!" என்று கச்சிதமாய்ப் பதில் சொல்லி விட்டார்கள். கீழ் வீட்டுக்காரர்களின் பரோபகாரச் சிந்தைக்கு இந்த ஒரு உதாரணம் போதுமல்லவா?

எழுதுவதற்காக அவன் வைத்துக் கொண்ட அறை வெறிச்சோடிக் கிடந்தது. சிறைச்சாலையின் நான்கு சுவர்களுக்கும் அந்த அறைக்கும் வேற்றுமை இல்லை. ஒரு பக்கம் சிறிய சன்னல், மறு பக்கம் கதவுகள். உமாவின் பரிசான முருகன் படத்தை அங்கு மாட்டி வைத்தான் தணிகாசலம். அறைக்குள் அவன் குறுக்கும் நெடுக்கும் நடந்தான். உட்கார வேண்டுமானால் தரையில் உட்கார வேண்டியதுதான். இத்தனை நாள் வாழ்ந்த வாழ்க்கை வெறும் கனவுலகக் கற்பனைதானா?

தன்னுடைய உண்மையான பொருளாதார மதிப்பு இன்னதென்று அவ

னுக்கு இப்போதுதான் விளங்கியது. எழுத்துச் சிம்மாசனமாகிய தேக்கு மர நாற்காலி இரவல், உறுதியான கருங்காலி மேசை இரவல், கண்ணாடிக் கதவுகள் உள்ள புத்தக அலமாரி இரவல், புத்தகங்களும் இரவல்,—இன்னும் சுழல் விசிறி, சோபாக்கள், பூந்தொட்டிகள் எல்லாமே இரவல்! ஏன், உமாவே இரவல்தானா? தணிகாசலத்தின் கண்கள் நான்கு சுவர்களிலும் கட்டாந்தரையிலும் பட்டுத் திரும்பின.

இப்போது அங்கே வெறும் அறையும், வெறும் மனிதனுமே இருந்தார்கள். நல்ல வேளையாக உமாவின் தொடர்பு அறவே துண்டித்துப் போகவில்லை. அவள் கொடுத்த அந்தப் பழைய பேனா அவன் சட்டைப் பையில் தொத்திக் கொண்டிருந்தது. குற்றாலத்து நினைவுகள் குமைந்து கொண்டு வந்தன. அந்தப் பேனாவைக் கையிலெடுத்து, "எண்ணற்ற ரசிகர்களை எனக்குத் தேடிக் கொடுத்த அருஞ் செல்வம் நீ" என்று முணுமுணுத்தான்.

வீட்டுக்கு வந்த மறுநாளே இலக்கியப் பணி தொடங்கியது. கோரைப்பாயைத் தரையில் விரித்துப் போட்டுக்கொண்டு, தகரப் பெட்டியை மேசையாக மாற்றிக் கொண்டு, முதுகை வளைத்துக் கொண்டு ஐந்தாறு வரிகள் எழுதிப் பார்த்தான். இந்த உடம்பு இருக்கிறதே, மிகவும் பொல்லாத உடம்பு! வசதிகளுக்கு இடம் கொடுத்து விட்டால், பிறகு அது நம் இஷ்டப்படி வளைந்து கொடுக்குமா என்ன? 'செருப்புத் தைக்கப் போகிறேன்' என்று முன்பொரு நாள் கூறிய மனிதனை, செல்வத்தில் புரண்ட தாகூருக்கு வாரிசு என்றல்லவோ கற்பனை செய்யத் தூண்டி விட்டாள் உமா?

எழுந்து சன்னல் பக்கம் சென்றான். கண்ணுக்குப் பசுமையாக ஒரு மரத்தையாவது இந்த வீட்டுக்காரர்கள் நட்டு வளர்த்திருக்கக் கூடாதா? அங்கு வேப்ப மரமில்லை; அணிற் பிள்ளைகள் இல்லை; ஜோடியாகக் கூடிப் பறக்கும் தவிட்டுப் புறாக்களும் இல்லை. அடுத்த வீடுகளின் ஓட்டுக் கூரைகள் தெரிந்தன. இரண்டே இரண்டு பூத்தொட்டிகளாவது வாங்கி வர வேண்டுமென்று நினைத்துக் கொண்டான். ரோஜா மொட்டுக்களைப் பார்க்கும்போது அவற்றில் உமா இருப்பாள்.

"அப்......பா!"

திரும்பிப் பார்த்தான் தணிகாசலம். பெரிதாக ஊதி விம்மிய பலூனைக் கையிலெடுத்துக் கொண்டு, தளர் நடை போட்டு வந்தாள் கல்யாணி.

ஓடிப் போய் அவளைத் தூக்கினான்.

"ஊ....ஊ....பலூன்!" என்றான்.

"ஆமாம்" என்று, எதையோ எண்ணியபடி, "பலூனுக்குள்ளே கற்பனைக் காற்று நிறைந்திருக்கிறது; ஊசிமுனை பட்டால் வெடித்துப் போகும்; நானும் உன்னைப்போல் ஒரு பலூனை வைத்து விளையாடிக் கொண்டிருந்தேன்" என்றான் தணிகாசலம்.

குழந்தைக்கு ஒன்றும் விளங்கவில்லை. பலூனைத் தூக்கி எறிந்து விட்டு, "அப்பா!...அக்கா எங்கேப்பா?" என்று மழலையில் கேள்வி கேட்டது.

இந்தக் கேள்வி தணிகாசலத்தின் தலையில் அடிக்கும் கேள்வி. குழந்தையை முறைத்துப் பார்த்து விட்டு, "சீ, கழுதை! வாயை மூடு! அக்காளாம் அக்காள்!" என்றான்.

வாயை மூடுகிற குழந்தையா அவள்? யார் வளர்த்த குழந்தை?

"போப்பா!" என்று உதட்டை விரித்துச் செல்லம் கொஞ்சினாள். அவன் கழுத்தில் கையைப் போட்டு வளைத்துக் கொண்டு, அவன் முகத்தைத் தன் பக்கம் திருப்பி, "சொல்லுப்பா!... அக்கா எங்கேப்பா?" என்றாள்.




அவனும் சொல்வதாக இல்லை; அவளும் விடுவதாக இல்லை. திருப்பித் திருப்பிக் கிளிப் பிள்ளை போல் கேட்டு அடம் பிடித்தாள். தணிகாசலத்துக்குத் தன்னுடைய சாகசத் திறமைகள் குழந்தையிடம் தோற்றுப் போன எரிச்சல் வந்து விட்டது. நேரே அடுக்களைக்குச் சென்றான் அவன்.

"உன்னுடைய நளபாகத்தைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்துவிட்டு, கல்யாணிக்கு ஏதாவது தின்பண்டம் இருந்தால் கொடு. வாய் அசைந்தால் கேள்வி கேட்க மாட்டாள்" என்றான்.

கௌரி சிரித்தாள். "ஏன் பதில் சொல்லுங்களேன் இவளுக்கு!"

"நீயே பதில் சொல்; பெற்றவள் நீதானே?" என்றான் அவன்.

"வளர்த்தவளைக் கூப்பிடுங்களேன்!"

ஒருகணம் அவன் மௌனமாக நின்ருன். பிறகு, "அவள் பேச்சை இனி எடுக்க வேண்டாம்" என்று சொல்லி விட்டுத் தன் அறைக்குத் திரும்பினுன்.

அந்த அறையைப் பார்க்கப் பார்க்க அவனுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. 'எழுதும் அறையை ஒரு சோலைவன மாக்கி, என்னைக் கூவும் குயில் என நினைத்துக் கொண்டு எனக்காக ஒரு விசாலமான கூண்டு கட்டியிருந்தாள் உமா! பாவம், சோலைவனம் பாலைவன மாகியது. கூவும் குயில் பறந்து விட்டது. இனிமேல் கற்பனைப் பறவை சோக கீதம் இசைக்க வேண்டியதுதானு?'

'நூற்று நான்கு டிகிரிக் காய்ச்சல் அவளுக்கு.' தணிகாசலம் திடுக்கிட்டான்.



இந்த நிலையில், அருகில் இருக்காமல், உணர்ச்சி வசப்பட்டு வெளியேறியது தவருன செய்கை என்று தோன்றியது. சௌந்தரத்தம்மாளும் பேராசிரியரும் அவளை எந்த நிலையில் வைத்திருக்கிறுர்களோ? பெற்றெடுத்த தகப்பனுர் தம் பெண்ணுக்கு ஒருகாலும் கெடுதல் செய்ய மாட்டார். ஆனுல் நன்மையென்று எண்ணிச் செய்யும் செயல்கள் கூடக் கவனக் குறைவால் தீய பலன்கள் அளிக்கக் கூடும்.

தொழிற்சாலைக்குப் போவதற்கு முன், அவளுக்கு வைத்தியம் செய்த டாக்டர் வீட்டை நோக்கி நடந்தான். எதிரே மருந்தும் கையுமாக வந்த பாலுவைக் கண்டவுடன் அவன் டாக்டரிடம் செல்லவில்லை. பாலுவிடம் உமாவின் உடல்நிலையை விசாரித்தான்.

"இப்போது காய்ச்சல் இல்லை; பலவீனந்தான்; அதோடு கல்லூரிக்குப் போக வேண்டுமாம்."

'சௌந்தரத்தம்மாளின் நச்சரிப்பை விடக் கல்லூரி தேவலாம்' என்று நினைத்துக் கொண்டு, "பேராசிரியர் இங்குதான் இருக்கிறுரா?" என்று கேட்டான் தணிகாசலம்.

"உமாவுக்குக் கல்யாணம் ஆகும் வரை அவர் இங்கேதான் இருப்பார். தில்லியில் அத்தை இருக்கிறுர்களாம். அழைத்துக் கொண்டுவந்து எங்களோடு தங்கப் போகிறுர்."

சந்திரலேகாவைப் பற்றிய ரகசியம் இனி ரகசியமில்லை போலும்!

"உமாவுக்குக் கல்யாணம் ஆகும் வரையிலா?" என்று திரும்பவும் கேட்டான் அவன்.

"ஆமாம்."

கல்யாண முயற்சி ஆபத்தான முயற்சி என்று பாலுவிடம் எப்படிச் சொல்வது? பேராசிரியரிடந்தான் அதை எப்படிச் சொல்வது?

"உன் மாமாவை ஒரே ஒரு முறை என்னை வந்து பார்க்கச் சொல்கிறுயா பாலு! அவரிடம் நான் சில விஷயங்கள் சொல்ல வேண்டும்."

பாலு முடியாதென்று தலையாட்டினுன். "மாமா, அம்மா யாரும் உங்கள் வீட்டுக்கு வரமாட்டார்கள். என்னையும் உமாவையுமே அங்கே வரக் கூடாதென்று சொல்லியிருக்கிறுர்கள். நான் உங்களைப் பார்த்ததாய்ச் சொன்னுல் கூட என்னைப் பிடித்துக் கொண்டு திட்டுவார்கள்."

"சரி, போய் வா!" என்று அவனை அனுப்பினுன் தணிகாசலம். மாலையில் வீட்டுக்குத் திரும்பியபோது பாலுவைச் சந்தித்த செய்தியை அவன் யாரிடமும் சொல்லவில்லை. தெரிந்தால் அவர்கள் வருத்தப்படுவார்கள்.

ஒரு வாரம் ஊர்ந்தது. குழந்தை கல்யாணி நலிந்து கொண்டே வந்தாள். காலையிலும் மாலையிலும் அவளுக்கு உமாவோடு இருந்து பழக்கம். தாய்ப் பசுவுக்காகக் கதறும் கன்றைப் போல் கல்யாணி உமாவுக்காகக் கதறினுள். "அக்கா எங்கேப்பா?...அக்கா எங்கே பாத்தி?" என்ற கேள்விகளுக்கு அவர்கள் பதில் சொல்லிப் பதில் சொல்லி அலுத்துப் போனுர்கள்.

ஆனுல் குழந்தையின் கேள்விக்கு இன்னும் சரியான விடை கிடைக்கவில்லை. கல்யாணி பதிலை எதிர்பார்க்கவில்லை. உமாவை எதிர்பார்த்தாள்.

கல்யாணி அம்மாள் தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஒருநாள்

தணிகாசலத்தை அணுகினாள். "தம்பி!" என்று மெல்ல அழைத்து, "நாங்கள் உமாவைப் போய் அவள் வீட்டில் பார்த்துவிட்டு வருகிறோம். குழந்தையும் ஏங்கிப் போகிறான்; நாங்களும் அவள் காய்ச்சலில் விழுந்த பிறகு பார்க்கவில்லை" என்றாள்.

"வேண்டாம்" என்று மறுத்தான் தணிகாசலம். "அவர்கள் வீட்டுக்கு இனி யாரும் அடி எடுத்து வைக்கக் கூடாது" என்று எச்சரித்தான்.

கேட்டுப் பயனில்லை என்று கண்ட பின்பு, கல்யாணி அம்மாள் கவலையோடு பின்வாங்கினாள். தணிகாசலத்தின் வருத்தம் அவளுக்குத் தெரியாமல் இல்லை. தானாக உமா அங்கு வரக்கூடும் என்று எதிர்பார்த்து இத்தனை நாட்களாக அவர்களும் ஏமாந்தார்கள்.

**தா**யாருக்குத்தான் தணிகாசலம் மறுப்புச் சொன்னானே தவிர, தன் மனத்தின் குறுகுறுப்பை அவனால் தணிக்க முடியவில்லை. கல்யாணி அம்மாள் தன்னை அறியாமலே, தன் மகனிடம் அடங்கிக் கிடந்த ஆவலைத் தூண்டி விட்டுவிட்டாள். 'இன்றைக்குப் பொழுதுக்குள் நான் உமாவை எப்படியாவது பார்த்தாக வேண்டும். கட்டாயம் பார்த்தே தீர வேண்டும். தூரத்தில் இருந்து கொண்டு அவளுக்குத் தெரியாமல் பார்த்தால் போதும்.'

தொழிற்சாலையில் பிற்பகல் வேலை அவனுக்கு நான்கிலிருந்து எட்டு மணி வரையில் உண்டு. அதிபரிடம் சொல்லி விட்டு, உமாவின் கல்லூரியை அடுத்த கடற்கரைச் சாலையில் நடந்தான். முன்பெல்லாம் நடப்பது போல் அவனால் அலட்சியமாகத் தலை நிமிர்ந்து நடக்க முடியவில்லை. வெட்கமும் வேதனையும் அவனைப் பிடுங்கித் தின்றன. 'ஓடி-ஓடி வந்தவளுக்கு என் அறைக் கதவை அடைத்துத் தாழிட்டேன். பார்க்கக் கூடாதென்று மிரட்டி அனுப்பினேன். இப்போது அவள் வீட்டுக் கதவையே எனக்கு அடைத்து விட்டார்கள். திருடனைப் போல் ஒதுங்கி நின்று பார்க்கும் ஒரு நிலை வரப்போகிறதென்று கனவு கூடக் காணவில்லையே!'



அவனுடைய செய்கை அவனுக்கே பிடிக்கவில்லை. 'வேண்டாம்; இப்படித் தலையில் துணியைப் போட்டுக்கொண்டு அவளைப் பார்க்க வருவதை விட, பார்க்காமல் திரும்புவதேமேல்' என்று எண்ணித் திரும்பப் போனான் தணிகாசலம்.

அவனைத் திரும்பவிடாமல் ஒரு காட்சி அவனை வழி மறித்தது. சிறிதும் அவன் அதை எதிர்பார்க்கவில்லை. ஒரு கணம் நின்று அதனைப் பார்த்து விட்டு, மெதுவாகச் சாலையோரமாக நின்ற நறுக்குச் செடிகளின் பின்னால் வந்தான். அங்கே கிடந்த சிமெண்டுப் பெஞ்சு ஒன்றில் உட்கார்ந்தான்.

அவன் திரும்புகிற நேரத்தில், அங்கு நின்ற 'டௌன் பஸ்'ஸிலிருந்து அவனுடைய குடும்பமே இறங்கியது. தணிகாசலத்தை அவர்களில் யாரும் கவனிக்கவில்லை. நேரே உமாவின் கல்லூரிக்குள் நுழைந்தார்கள். 'வீட்டுக்குத் தானே போகவேண்டாமென்று தடுத்தேன்? கல்லூரிக்குத் தடை சொல்லவில்லையே?'' என்று தன்னைத்தானே அவன் தேற்றிக் கொண்டான்.

பத்து நிமிஷங்களில் கல்லூரி கலைந்தது. நறுக்குச் செடிகளுக்கப்பால், தார் ரோட்டிலிருந்து கடற்கரை மணல் வெளிக்குப் பிரிந்து வந்தது ஒரு பாதை. அந்தப் பாதையில், "கல்யாணி! கல்யாணி! என் ராஜாத்தி!" என்று கூவிக்கொண்டே, குழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டு முன்னால் ஓடினாள் உமா. அவளுடைய முகத்தில்தான் அப்போது எத்தனை ஆனந்தம்!

உமாவோடு போட்டி போட்டுக் கொண்டு பையன் பரமசிவமும் அவளை முந்திக் கொண்டு மணலுக்குச் சென்றான். குட்டிக்கரணங்கள் போட்டு அவளுக்கு வித்தைகள் காட்டினான். கௌரியும் கல்யாணி அம்மாளும் அவளுடன் வெகு தூரம் நடந்து சென்று மணலில் உட்கார்ந்தார்கள்.

செடிகளைத் தாண்டி வெளியில் வந்த தணிகாசலம் கண் கொட்டாமல் அவர்களைக் கவனித்தான். சின்னஞ் சிறு கொலுப் பொம்மைகளைப் போல் அவர்களுடைய உருவங்கள் தொலை தூரத்தில் தெரிந்தன.

(தொடரும்)

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 53. பொடுகு

"ஸார்! கோடை காலத்துக்கு உங்கள் வீடு இருக்கிறதே! பிரும்மானந்தம்......"

"அப்படியா?"

"வீட்டின் முன்னால் இவ்வளவு விஸ்தாரமான வெளிப் பரப்பு! கணக்காக இந்தத் தென்னை மரங்கள்! அவற்றின் நிழல்! நிரம்பத் தண்ணீர் தெளித்துத் தண்மையாக்கி......! இந்த சிமெண்டு பெஞ்சுகளும்! பூங்கா கெட்டுது ஸார்! ஒரு ஈஸிசேரைப் போட்டுக் கொண்டு இங்கே உட்கார்ந்துவிட்டால் போதுமே! இதைவிட சுவர்க்கம் எப்படி இருக்கும்?"

"அப்படியா?"

"என்ன ஐயா? கிலிபிடித்தவர் மாதிரி 'அப்படியா' போடுகிறீர்கள்!"

இந்த உலகமே இப்படித்தான். வெளித் தோற்றத்தை மட்டும் கண்டு விருப்பு வெறுப்பு கொள்வது; உள்ளே என்ன? எப்படி? என்று அறியும் ஆற்றலே ஏற்படுவதில்லை. வீட்டின் வெளித் தோற்றத்தை இவ்வளவு மெச்சின நண்பர் பின்கட்டில் 'ஒரு நாள் ஒரு தரமாயினும்' எட்டிப் பார்த்திருப்பாரானால்......! "இந்த வீட்டிலே என்னாலே படப் போகலே. நரகம் நரகம் என்று வேறு ஒன்று இருக்கான்னு?" என்னும் அபிப்பிராயம் காதைத் துளைக்கும் ஸ்தாயியில் ஒலிபரப்பப் படுவதைக் கேட்கத் தவற மாட்டார். இதை மனத்தில் எண்ணிக் கொண்டே ஒரு 'இஹிஹி' போட்டு 'ஒன்றுமில்லை' என்று சொல்லி வைத்தேன்.

அப்போதுதான் நண்பர் நான் ஏதோ ஒன்றைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்பதைக் கவனித்தார்.

"என்னத்தை ஸார் அவ்வளவு உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்றார் நண்பர்.

"அந்தத் தென்னை மரத்தைப் பாருங்கள். இவ்வளவு ஜாக்கிரதையாகக் கவனித்து வந்துங்கூட மரத்தின் மேலே செல்லரிக்கத் தொடங்கி இருக்கிறது."

"ஆமாம், ஸார்! அந்த மண்ணெல்லாம் செல்புற்றுத்தானு? அடடா! மரத்தின் பாதி உயரத்துக்கு ஏறி இருக்கிறதே......!"

"மரம் முழுவதுங்கூட அது வியாபித்து விடும்."

"இது எப்படி வருகிறது?"

"தலையில் ஒரு பொட்டு - பொடுகு - கண்டு வருகிறதே! அது ஏன்?"

நமது சருமத்தை நல்ல நிலையில் வைத்துக் கொள்ள ஓரளவு எண்ணெய்ப் பசை அவசியம். இதைச் சரிக்கட்டவே எண்ணெய்க் குளி செய்து வருவதை நமது தினசரித் திட்டத்தில் ஒரு முக்கிய விஷயமாகச் சேர்த்துள்ளோம்.

சருமத்தை நல்ல நிலையில் வைக்க-ஒருவகை நெய்ப்புத் திரவமான ஸீபம் என்னும் பொருளைச் சுரக்கும் சுரப்பிகள் [கிரந்திகள்] நமது சருமத்தினிடையில் படைக்கப்பட்டுள்ளன.

சருமம் எவ்வளவு மெல்லியது! அதனிடையில் இக்கிரந்திகளும் இருக்கின்றன - வியர்வையைக் கசியச் செய்யும் கிரந்திகளும் இருக்கின்றன. இக்கிரந்திகள் சுரக்கும் ஸீபம் என்னும் எண்ணெயின் குறைவைச் சரிக்கட்ட நாம் அனுஷ்டித்து வரும் எண்ணெய்க்குளி எவ்வளவோ பயன் தருவதாகும்.

'சிலர் எண்ணெய்க் குளியே செய்வதில்லையே! அவருக்கு ஒருவித சுகவீனமும் ஏற்படுவதுமில்லையே!' என்று கேட்கலாம். இவர்கள் கொழுப்புச்சத்து அதிகம் உள்ள, நெய்ப்பு மிகவும் மிகுதமாயுள்ள பொருள்களையே முக்கிய ஆகாரமாக ஏற்கும் சிலமுள்ளவராயிருப்பர். சரீரத்துக்குத் தேவையான இந்த நெய்ப்பு வேறு வகையில் இவர்களுக்குக் கிடைத்து விடுகிறது. அவரவர் ஆகாரக் கிரமங்களையும், அவரவர் வாழுமிடத்தின் சீதோஷ்ண ஸ்திதிகளையும் அனுசரித்து அவரவருக்கும் இதமான வகையில் ஆகாரக்கிரமங்களும் வாழ்க்கைத் திட்டங்களும் வகுக்கப்பட்டு, அனாதிகாலமாகப் பழக்க வழக்கத்திலும் இருந்து வருகின்றன. இவற்றின் மேன்மை அனுபவத்தினாலேயே சிறந்ததென்று தெளியவும் பட்டுள்ளது. இதை மறந்து சிலர் அன்னியர் அனுசரிக்கும் முறைகளில் சிலவற்றைமட்டும் தாமும் அனுசரிக்க ஆரம்பித்தால் - அம்மனப் போக்கை என்னவென்பது?

இப்படியாகப் பிறர் பழக்க வழக்கங்களில் ஒருவித வியாமோகம் நம்மில் சிலருக்கு ஏற்பட நேர்ந்தது வருந்தத் தக்கது. இஃது இம்மட்டோடு நில்லாமல் அனாதிகால அனுஷ்டானத்தால் சிறந்ததெனத் தெளிந்த நமது பழக்க வழக்கங்களில் ஒரு வித வெறுப்பும், ஏளன புத்தியும் ஏற்படவும் நேரிட்டுள்ளது இன்னும் வருந்தத் தக்க நிலைமையாகும்.



ஒருவர் (மற்றவரைப் பார்த்து): ஏம்பா, மழை பெய்து தண்ணீர் சாய்க் கொட்டிக் கிடக்கிறதே. இது என்ன பந்தல், அப்பா?

மற்றவர்: இது தெரியலையா? இது தண்ணீர்ப் பந்தலுங்க!

இப்படிப் பல காரணங்களால் நமக்கு இதமானவை என்று அறுதி காலப் பழக்கத்தால் தெளிந்த பல பழக்கங்களை நாம் விட்டு விடவும், பிறருடைய பழக்க வழக்கங்களை — வெறும் வியாமோகத்தால் ஏற்றுக் கொள்ளவும் நேர்ந்ததால், எத்தனையோ இன்னல்களை 'வா வா' என்று நாம் தாம்பூலம் வைத்து வரவேற்கும் நிலைமை ஏற்பட்டது. அவற்றுள் நமது சரீரத்திலுள்ள—நமது ஆரோக்கியத்துக்கு மிகவும் அவசியமான நெய்ப்புக் குணத்தைக் குறைவுபட விட்டது ஒன்று.

'சந்து விட்டால் வந்து விட்டேன்' என்று ஒரு பழமொழியுண்டல்லவா? ஆரோக்கிய வாழ்க்கைக்கு இதமான தினசரிப் பழக்கங்களை நாம் கை விட்டால் நமக்குப் பல வித இன்னல்கள் வியாதி ரூபமாக வந்து, பழமொழியை உண்மையாக்கி விடும்.

இவ்விதந்தான் நமது சருமத்தின் நல்ல நிலை கெடவும் நேரிடுகிறது. நெய்ப்புத் தன்மை குறைந்திருக்கும் நேரத்தில் இச்சருமத்தில் வறட்சி அதிகமாகும். அந்நிலையில் 'வந்து விட்டேன்' என்று சில நோய்க் கிருமிகளும் இச்சருமத்தை வந்தடையும். இவையோ சருமத்தின் வறட்சியை மேலும் அதிகமாக்கி விடும். இக்கிருமிகள் முன் சொன்ன 'ஸீபம்' என்னும் எண்ணெயைத் தமக்கு ஆதாரமாக ஏற்று வளரும். காலக்கிரமத்தில் இந்த ஸீபத்தைச் சுரக்கும் கிரந்திகளையும் அழித்து நாசத்தை விளைவிக்கும். சருமத்தின் வறட்சியுற்ற அம்சங்கள்—கிருமிகளால் பக்ஷிக்கப்பட்ட ஸீபக் கிரந்திகளின் சடலங்கள்—கிருமிகள்—முதலிய யாவும் வறண்ட நிலையில் தவிடுபோல் தோற்றம் பெறுவது இயல்பாகி விடும். ஸீபத்தைச் சாப்பிடவும் — ஸீபக்கிரந்திகளை அழிக்கவும்முயலும் இக்கிருமிகள்மேலும் மேலும் தோண்டித் தோண்டித் துருவித் துருவி வியாபித்து விடுவதால் அரிப்பும் சொறிப்பும் ஏற்படுகின்றன. அரிப்பு தாளாமல் நாம் சொறியச் சொறிய, இப்பொட்டும் பொடுகும் தவிடுபோல் உதிர்ந்து கொண்டிருப்பது இயல்புதானே? சொறிந்த இடங்களில் இக்கிருமிகள் மேன்மேலும் சருமத்தின் உள்ளே புகுந்து விடுவதற்கான வகைகளைச் செய்து நாமே உதவி புரிகிறோம். மற்றுள்ள இடங்களிலும் இத் தவிடு படிந்து விடவும் அவ்விடமெல்லாம் இந்தப் பொட்டும், பொடுகும் பரவி விடவும் கூட நல்ல 'பாதை' போட்டுக்கொடுத்து விடுகிறோம்.

இதனால் சிலரில், முக்கியமாகக் குழந்தைகளில், தலையைச் சொறிந்த போது விழும் பொடிகளோ அல்லது பின்னோடு நெற்றி, கன்னம் முதலிய இடங்களையும் சொறிவது காதையும் குடைவது என்னும் சுபாவத்தால் அவ்விடமெல்லாம் இந்தக் கிருமிகள் வியாபிக்கவும், அவற்றின் நாசகாரியங்கள் பரவவும் நேரிடுகின்றன. கடைசியில் காதிலும் வலி, குத்தல், ஜலம் அல்லது சீழ் வடிதல் என்ற வகையில் நோயும் வளர்ந்து கொண்டே போக நேரிடுகிறது. காலக்கிரமத்தில் காதிலிருந்து ஒழுகும் கசிவு அதிகமாகி, முடிவில் காது செவிடாகி விடவும் நேரும். மேலும், இக்கசிவுபடும் இடமெல்லாம் புண்ணாகி விடவும் தொடங்கும். இப்படிப் பரவும் இது, கடைசியில் அரிப்பும் சொறிப்பும் குழம்புமாக உடம்பெல்லாம் பரவி விடும்.

இவ்வாறு சருமத்தில் வறட்சி அதிகரித்ததும் மாளாத சொறிச்சலும் அரிப்பும் ஏற்பட்ட மனிதரின் சரீரம் முழுவதும் சாம்பல் பூத்த நிலையில் சருமம் தோற்றம் பெறும். சொறிந்த இடங்களில் கோலம் போட்டது போல் வரிவரியாக வெள்ளைக் கோடுகள் அப்படி அப்படியே நின்று விடும்.

இந்நிலையில் இவ்வறட்சி, சொறிச்சல் அரிப்புகளைப் போக்க எண்ணெய்களை உபயோகிப்போமானால் என்னவாகும்?

இயற்கையன்னை அளிக்கும் ஸீபம் என்னும் எண்ணெய், அதைச் சுரக்கச் செய்யும் கிரந்திகள் இவற்றையே ஆகாரமாக ஏற்று, புத்ர பௌத்ராதிகளுடன் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழும் கிருமிகள்—நாம் பூசும் எண்ணெயை ஒரு வேளை 'டிபன்' என்று ஏற்று, மேலும் புஷ்டியாக வளரவும் புதிய ஊக்கத்துடன் புதிய இடங்களுக்குப் பரவவும் செய்யும். மேலும் ஸ்திரம் பெற்று நிலைத்து நிற்கக் கிடைத்தற்கரிய வாய்ப்பு கிடைத்ததாக எண்ணிப் பயன்படுத்திக் கொள்ளும். இதற்கென்ன செய்வது......?

# வாழ்க மணமக்கள்



திரு பச்சையப்ப முதலியார் புதல்வி செள. பவானியைத் திரு பி. வஜ்ரவேல் முதலியாரின் புதல்வர் திரு கிருஷ்ண மூர்த்தி மணம் புரிந்து கொண்டார்.



ஸ்டேஷன் மாஸ்டர் திரு பிச்சுமணி அய்யர் புதல்வர் திரு சுப்பிரமணியத்துக்கும் செள. ருக்மிணிக்கும் கும்பகோணத்தில் விவாகம் நடந்தேறியது.



திரு பி. ஜி. சீதாராமன் அவர்களின் புதல்வி செள. சீதாலக்ஷ்மிக்கும், திரு வெங்கடராமனுக்கும் பம்பாயில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.



மதுரை சென்ட்ரல் எக்ஸைசைச்சேர்ந்த திரு கெ. ஆர். சீனிவாசன், அகில இந்திய ரேடியோ திரு எஸ். கிருஷ்ணசாமியின் புதல்வி செள. சரோஜாவை மணந்தார்.



திரு டி. கே. எத்திராஜுலு நாயுடு அவர்களின் புதல்வி செள. விநோதமாலா வுக்கும் திரு ஏ. ஏ. வாசுதேவ ராவுக்கும் பங்களூரில் திருமணம் நடைபெற்றது.



ஈரோடு பிரபல டென்னிஸ் ஆட்டக்காரர் திரு கெ. ஏ. மாணிக்கம் அவர்களுக்கும் செள. ஜகதாம்பாளுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



எப்பொழுதும்
புன்னகைக்கு
சோபையளிப்பது
ஆக்டிவ்
க்ளோரோபில்
சேர்ந்த

# க்ரீன் கோலினஸ்

## டூத்பேஸ்ட்

இன்றே பச்சை நிறக் 'கோலினஸ்' டூத்பேஸ்டை உபயோகிக்க ஆரம்பியுங்கள் அது உங்கள் பற்களை எவ்வளவு அதிவெண்மையுடன் பிரகாசிக்கச் செய்கிறது என்பதைக் காண நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். இதற்குக் காரணம், அதில் சேர்ந்துள்ள சக்தி மிகுந்த க்ளோரோபில்லும் பச்சை நிறக் 'கோலினஸின்' நேர்த்தியான நுரையும் பல் வரிசைகளிலுள்ள நுண்ணிய இடுக்குகளில் புகுந்து, சொத்தைப் பல்லுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, உங்கள் பற்களை முன்னைவிட சுத்தமாயும் வெண்மையாகவும் செய்வதாலாகும்.

எப்பொழுதும் க்ரீன் 'கோலினஸ்'
வேண்டுமென்றே கேளுங்கள்




Registered User
Geoffrey Manners &
Company Private Ltd.

# செல்வமும் சுதந்திரமும்

கூ. சந்தானம்

## 2. விவசாய சகாப்தமும் இயந்திர சகாப்தமும்

**வி**வசாய சகாப்தத்தை 'மத்தியகால நாகரிகம்' என்று அறிஞர்கள் கூறுகின்றனர். விவசாயம் ஏற்பட்ட பிறகு சமூகவாழ்வு வேரூன்றி நிலை பெற்றது. நாமறிந்த சரித்திரமும், நாகரிகமும், கலைகளும் இந்த சகாப்தத்தைச் சேர்ந்தவையே. முன்னிருந்த ஆடு மாடு மேய்க்கும் சகாப்தத்தைப் பற்றிச் சில கூட்டங்களின் வாழ்க்கைகளிலிருந்தும், ரிக்வேதம் போன்ற பழைய நூல்களில் ஆங்காங்கு கிடைக்கும் வர்ணனைகளிலிருந்துமே சில அம்சங்களை ஊகிக்க முடியும்.

விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட சமூகம் கிராமங்களில் சிறிய கூட்டங்களாக வாழ்வது சகஜமே. சாகுபடி செய்யும் நிலத்துக்கு அருகாமையில் சமூகத்தினர்கள் இருக்க வேண்டும். அதற்கு அவசியமான ஆடுமாடுகளுக்கு மேய்ச்சல் மைதானம் வேண்டும். ஆதலால் பாரதத்தில் இன்றும் ஐந்நூறிலிருந்து ஆயிரம் ஏக்கராவுக்கு ஒரு கிராமம் அமைந்திருப்பது போல் மத்திய நாகரிகத்தில் உலகெங்கும் கிராம வாழ்க்கையே பிரதானமாக இருந்தது. விவசாயத்துக்கு வேண்டிய கைத்தொழில்களும் வளர்ச்சி பெற்றன. கோவில்கள், குளங்கள், கிணறுகள் அமைக்கப் பெற்றன. மதமும், சங்கீதமும், நாட்டியமும் வளர்ச்சி பெற்றன.

ஆனால் இந்தச் சுகத்துக்காகவும் நாகரிகத்துக்காகவும், முதல் சகாப்தத்தில் மனிதனுக்கிருந்த சுதந்திரம் குன்றிப் போய் விட்டது. ஆடு மாடுகளைக் காடுகளில் மேயும்படி விட்டு, புல்லில் படுத்துப் புல்லாங்குழல் வாசித்து வந்த மனிதன் தன் நெற்றி வியர்வை நிலத்தில் விழுமாறு தேகத்தால் உழைக்கவேண்டியதாயிற்று. அவனோடு சேர்ந்து வேலை செய்ய மாட்டையும் பழக்க வேண்டியதாயிற்று. பல மாதங்கள் பாடுபட்டு முடிவில் மாசூலை அடைய வேண்டியதால், பாதுகாப்பு மிகவும் அவசியமாயிற்று. எல்லோரும் சண்டைக்குப் போய் விட்டால், விவசாயம் நடைபெறாது. ஆதலால், ஒரு பாதுகாப்புக் கூட்டம் யுத்தமே தன் தொழிலாகக் கொண்டது. அதற்குத் தலைவன் ஏற்பட்டுப் படிப்படியாக எதேச்சாதிகாரியானான்.

விவசாய முறைகளைப் பற்றிய அநுபவம் ஒருபுறம் வளர, ஜனத்தொகை மறுபுறம் அதிகரிக்க நல்ல நிலங்களுக்குக் கிராக்கி ஏற்பட்டது. பாதுகாப்புக்காக விவசாயிகளிடம் சிறிது வரி வாங்கி அதன் மூலம் அரசாங்கம் நடத்துவதைவிட, நிலத்தின் பேரில் சொத்துரிமைகளை ஏற்படுத்தி விவசாயியை வெறும் உழைப்பாளியாகச் செய்வதில் லாபமிருப்பதைப் பாதுகாப்புத் தொழிலாளர் கண்டு கொண்டனர். நிலமெல்லாம் அரசனைச் சேர்ந்தது என்று ஒரு தத்துவம் பிறப்பித்து, அவனைக் கொண்டு முக்கிய போர்த் தலைவர்களுக்கும், புரோகிதர்களுக்கும், அரச குடும்பத்தார்களுக்கும் நிலம் பங்கீடு செய்யப்பட்டது. விவசாயிகள் சிலவிடங்களில் அடிமைகளாகவும், சில இடங்களில் மற்றவர்களுக்குத் தொண்டு செய்யும் கீழ் சாதியினராகவும் கருதப்பட்டுத் தம்மோடு சேர்ந்து உழைக்கும் மாடுகளுக்குச் சமமாகவே கருதப்பட்டனர்.

ஏதென்ஸ் நகரிலும், ரோமாபுரியிலும், பாரதத்தில் வைசாலி போன்ற இடங்களிலும் குடியரசு இருந்ததாகப் படிக்கிறோம். ஆனால் அவை உண்மையான குடியரசுகளல்ல. மேற்கூறிய வண்ணம் நிலத்தின் பேரில் உரிமை பெற்றவர்களுக்கே அரசுரிமையும் வழங்கப்பட்டது. மிகவும் உயர்ந்த ஞானிகளான சோக்ரதர், பிளேடோ முதலியோர்கூடப் பிரஜா உரிமை பெற்ற ஒரு கிரேக்கன் உழுது ஜீவிக்கக் கூடும் என்று எண்ணவில்லை. யுத்தம் செய்வதும், அரசு புரிவதும், விஞ்ஞானத்தை வளர்ப்பதும், கலைகளைப் பயிலுவதுமே அவனுடைய கடமைகளாகக் கருதினர்.

விவசாய சகாப்தத்தின் இரண்டாவது முக்கிய அங்கம் தொழில்வாரியான வகுப்புப் பிரிவினை. பாரதத்தில் அதற்கு வர்ணாசிரம தர்மமென்று பெயரிட்டனர். விவாகம், உணவு விஷயங்களில் மிகவும் தீவிரமான வேறுபாடுகளால் இந்திய வகுப்பு வேற்றுமைகள் ஓர் தனி நாகரிகமாகத் தோன்றினாலும், அதன் முக்கிய அம்சங்களை எல்லா நாடுகளிலும் மத்தியகால நாகரிகத்தில் காணலாம். எங்கும் உழவன் மகன் உழவனாகவே இருந்தான். கைத்தொழில்களும் குடும்பப் பரம்பரையாக இருந்தன. இதற்கு மாறாக ஒருவர் இருவர் அறிவாலோ, சாமர்த்தியத்தாலோ வேறு தொழிலுக்குப் போய் விட்டால் அது அதிசய சம்பவமாகக் கருதப்பட்டது.

விவசாயம் அதில் உழைப்பவர்களைத் தவிர பல கூட்டங்களைப் போஷிக்க வேண்டி இருந்ததால், விவசாயிக்குத் தன் குடும்பம் உயிர் பிழைத்திருப்பதற்கு வேண்டிய பங்கு கிடைப்பதே மிகவும் கஷ்டமாகி விட்டது. ஆனால் மனிதன், மாடு இரண்டின் உழைப்பைக் கொண்டு மிதமிஞ்சிய செல்வம் உற்பத்தி செய்வது சாத்தியமல்ல. ஆதலால் பொதுவாக, சமூகம் ஏழையாகவே இருந்தது. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் பாரதத்தில் 100 குடும்பங்களில் 80 குடும்பங்கள் விவசாயத்தாலும், 10 குடும்பங்கள் கைத்தொழில்களாலும், மீதி 10 குடும்பங்களே அரசாங்கம் புரோகிதம், கலைகள் முதலிய துறைகளாலும் ஜீவித்து வந்தனர். இன்னும் வட இந்தியாவில் பல கிராமங்களில் பிராமணர், க்ஷத்திரி

யர், வைசியர் எல்லோரும் ஒரேவித நிலையில் வசிப்பதைக்காணலாம். 1947 வரையில்சுதேச மன்னர்களால் ஆளப்பட்டு வந்த சிறிய சுதேச சமஸ்தானங்களில் இன்றும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், அவர்களுக்குக் கடன் கொடுத்து வந்த சில வியாபாரிகள் இவர்களைத் தவிர வேறு பணக்காரர்களே கிடையாது. ஆங்காங்கு பல கிராமங்களுக்குச் சந்தைகளாகவும், அரசாங்கத்தின் கேந்திர ஸ்தலங்களாகவும் நகரங்கள் தோன்றி, சரித்திரங்களில் செல்வத்துக்கும், கலைகளுக்கும், அறிவுக்கும் புகழ் பெற்றன. கடற்கரை யோரங்களிலுள்ள சில நகரங்கள் வெளி நாட்டு வியாபாரத்தின் மூலம் ஏராளமான செல்வம் பெற்று நாகரிகத்தில் உயர்ந்தன. ஆனால் அந்தப் பட்டணங்களிலும் பெரும் பாலோர் ஏழைகளும், அடிமைகளுமே. அவர்கள் உழைப்பைக் கொண்டு ஜீவித்து வரும் நூற்றுக்கு ஐந்து, பத்து குடும்பங்களே சமூகத்தின் முக்கிய பாகமாகக் கருதப் பட்டு வந்தன.

விவசாய சகாப்தத்தில் மதம் பெரிதும் ஓங்கிற்று. எளிய வாழ்க்கையில் திருப்தி யடைவதற்கு அறவுணர்ச்சி மிகவும் சாதக மாகும். அதோடு, சாவுக்குப் பின் நற்கதி அடையக்கூடும் என்ற நம்பிக்கையும் சேர்ந்ததால் மனித வாழ்க்கையில் மதமே முக்கியம் என்ற கொள்கை எளிதில் பரவியது. பலநாடுகளில் அவ்வப்போது, மத உணர்ச்சியால் பெரும் தீங்குகளும், கொடுமைகளும் இழைக்கப்பட்டன. ஆனால் விவசாய சகாப்தத்தில் மனிதனுக்குக் கிடைத்த சுகத்துக்கும், அவன் அடைந்த பெருமைக்கும் மதமே முக்கிய சாதனமாக இருந்தது. சென்ற நாலாயிரம் வருஷங்களிலே தோன்றிய பெரிய மனிதர்களில் பெரும் பாலோர் மதாசிரியர்களும், மதப் பிரசாரகர்களுமே. பெரிய கோவில்களைக் கட்டி, தெய்வத்துக்கு உயர்ந்த பொருள்களைச் சமர்ப்பணம் செய்து ஏழை மக்கள் தங்கள் குடிசைகளையும், கந்தல் துணிகளையும் மறந்து மகிழ்ந்தனர். மதத்தை ஏழைகளின் அபினி என்று மார்க்ஸ் கூறியதில் ஓரளவு உண்மை உண்டு. ஆனால் மக்களின் துன்பத்தை மட்டும் அது குறைக்கவில்லை. குணங்களைப் பெருக்கிக் கவலையையும் தீர்த்த பெருமை அதற்கு உரியதாகும்.



விவசாய சகாப்தத்தில் பல கைத்தொழில்கள் வளர்ச்சியடைந்தன. அவற்றை இரண்டு வகைகளாக வகுக்கலாம். பொதுமக்களுக்கு வேண்டிய எளிய கைத்தொழில்கள்; முரட்டுத் துணி நெசவு; பானை சட்டி செய்தல்; சாதாரணத் தச்சு, கொத்து, கொல்லு வேலைகள்; இரண்டாவது அரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் பெருமை தரக்கூடிய சிறந்த வேலைப் பாடுடைய சாமான்கள் தயார் செய்யும் தொழில்கள்; ரத்தினக் கம்பளங்கள்; தங்க வெள்ளி நகைகள்; பாத்திரங்கள்; தந்தத்திலும், சந்தன மரத்திலும் சித்திர வேலை செய்த பலவித சாமான்கள்; மெல்லிய வர்ணக் கறைகளும், பூக்களும் போட்ட துணிகள்; கோவில்களுக்கு வேண்டிய விக்கிரகங்கள் இவை செய்யும் தொழில்கள். கவிதையும், கலைகளும் அவ்வாறே இரு வகைப்பட்டன. அரசர்களும், பிரபுக்களும், அவர்களைச் சூழ்ந்த வித்வான்களும் ரசிக்கக் கூடிய நீண்டகாலப் பயிற்சியினால் தேர்ச்சி பெறக்கூடியவை ஓர் வகை; பொதுமக்கள், சாதாரணமாகக் கோவில்களிலும் உற்சவ காலங்களிலும் இன்புறக் கூடியவை மற்றொரு வகை. பொதுவில் மதமே இரு கூட்டங்களையும் ஒன்றுகூட்டிப் பொது வாழ்வை வளர்க்கும் சாதனமாக இருந்து வந்தது.

விவசாய சகாப்தத்திலேதான் சுதந்திரம் ஒரு சிக்கலான பிரச்னையாயிற்று. அரசர்களும், பிரபுக்களும் தம் இஷ்டப்படி மக்களிடம் வரி வாங்குவதும், தம் ஆதிக்கத்தைச் செலுத்துவதுமே சமூகத்தின் முக்கிய சுதந்திரமாகக் கருதினர். பொது மக்களோ அதிகமாக வரி கொடுக்காமல், தங்கள் தங்கள் சாதிப் பிரிவுகளின் சம்பிரதாயங்களை அனுஷ்டித்து, தமது மதக் கொள்கைகளையும், ஆசாரங்களையும் பின் பற்றி வருவதில் எவரும் தடை செய்யாமலிருப்பதே முக்கிய சுதந்திரங்களாகக் கருதினர். பெரும்பாலும் பாரதத்தில் மகம்மதியர் வருவதற்கு முன் மத சுதந்திரம் நிலவி வந்தது. சிற்றரசர்கள் ஓயாமல் சண்டை செய்து வந்ததால் பொது மக்களின் வாழ்வுநிலையற்று இருந்த போதிலும், போரில் ஈடுபட்ட இரு தரத்தாரும் விவசாயிகளையும், கைத்தொழிலாளிகளையும் துன்புறுத்தவில்லை. அதன் காரணமாகவே, 'ராமன் ஆண்டால் என்ன, ராவணன் ஆண்டால் என்ன?' என்ற பழமொழி வழங்கி வரலாயிற்று.

மூன்றாவதான இயந்திர சகாப்தம் சுமார் 150 வருஷங்களுக்கு முன் ஐரோப்பாவில் ஆரம்பமாயிற்று. முதல் சஞ்சார சகாப்தம் மத்திய ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் தோன்றி ஆசியாவின் இதர பாகங்களுக்கும், ஐரோப்பாவுக்கும் பரவியது. விவசாய சகாப்தம் பாரதம், சைனா முதலிய ஆசிய நாடுகளில் வேரூன்றி, பின்னர் சில ஐரோப்பிய நாடுகளுக்குப் பரவியது.

இயந்திர சகாப்தம் 19-ம் நூற்றாண்டில் ஆரம்பமான போதிலும் அதற்கு அடிப்படையான விஞ்ஞான வளர்ச்சி 17ம் நூற்றாண்டின் கடைசிப் பாகத்தில் ஆரம்பமாயிற்று. கணிதம், வானசாஸ்திரம், பௌதிகம், ரசாயனம் முதலிய துறைகளில் பெரும் ஞானிகள் தோன்றிப் பழம் சம்பிரதாய சாஸ்திரங்களுக்குப் பதிலாக, புதிய ஆராய்ச்சி சாஸ்திரங்களை அமைத்தனர். தத்துவங்களுக்கும், அவற்றின்



வடலூர் ராமலிங்க வள்ளலாரின் நினைவாக மாயூரத்துக்கு அருகில் உள்ள மங்கைநல்லூரில் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் என்று ஒரு ஸ்தாபனம் நிறுவியிருக்கிறார்கள். அது சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக நடந்து வருகிறது. இந்தச் சங்கத்தார் பக்தி மார்க்கத்துக்குத் தொண்டு செய்வதுடன் வள்ளலார் ஆரம்ப உயர்நிலைப் பள்ளி ஒன்றையும் ஆரம்பித்துக் கல்விப் பணியும் செய்து வருகிறார்கள். ஏப்ரல் நாலாம் தேதி மேற்படி சங்கத்தின் வெள்ளி விழா மந்திரி பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. மூன்று தினங்கள் சத்பிரசங்கமும் சங்கீதக் கச்சேரியுமாக விழாவைக் கோலாகலமாக நடத்தி வைத்த சங்கச் செயலாளர் திரு பாவாடை அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். முதல் நாள் மந்திரி விழாவைத் துவக்கி வைத்த பின், திரு நாராயணசாமி நாயுடு பேசுவதைப் படத்தில் காணலாம்.

---

பிரயோகங்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. 19ம் நூற்றாண்டில் நீராவியைக் கொண்டு இயந்திரம் அமைக்கப் பெற்றதே புதிய இயந்திர சகாப்தத்தின் பிறப்பெனக் கூறலாம்.

அதன் பிறகு படிப்படியாக மண்ணெண்ணெயின் ஆவியைக் கொண்டும், மின்சார சக்தியைக் கொண்டும் பலவித இயந்திரங்கள் நிர்மாணிக்கப்பட்டன. இந்த இயந்திரங்களைக் கொண்டு பூமியில் வெகு தூரம் தோண்டிச் சுரங்கப் பொருள்கள் எடுக்கப்பட்டன. ரசாயன சாஸ்திரம் அவைகளைக் கொண்டு பலவித சாமான்கள் செய்யும் முறைகளைக் கண்டுபிடித்தது. ரயில், இயந்திர சக்தியால் செல்லும் கப்பல், துணி ஆலைகள், எஃகு மில்கள் ஐரோப்பாவிலும், ஐரோப்பியர் குடியேறிய அமெரிக்க நாடுகளிலும் வளர்ந்தன. வளர்ச்சியின் வேகம் படிப்படியாகத் துரிதமாகி இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் பெரும் நீர்வீழ்ச்சி போலாயிற்று. இக்காலத்தில் நடைபெற்ற உலக மகா யுத்தங்கள், விசேஷமாக 1914லிலும், 1939லும் ஆரம்பமான கொடிய யுத்தங்கள் இயந்திரத் தொழிலுக்குப் பெரும் ஊக்கமளித்தன. ஆகாய விமானங்கள், ரோடில்லாத தரைகளில் செல்லும் டிராக்டர்கள், இயற்கை மண்ணெண்ணெய், பட்டு முதலிய பொருள்களுக்குப் பதிலாகச் செயற்கைப் பொருள்கள் ஓயாமல் தோன்றி வந்தன. இரண்டாவது உலக மகா யுத்தத்தின் முடிவில் அளவற்ற அணுசக்தி மனித அதிகாரத்துக்குட்பட்டு, புராணங்களில் காமதேனுவின் மகள் சபலை விசுவாமித்திரரின் சதுரங்க சேனைக்கு எதிராகப் படைத்த போர் வீரர்களையும், அரேபியக் கதைகளின் அலாவுதீன் விளக்கிலிருந்து உதித்த பூதத்தையும் அற்ப விஷயங்களாகச் செய்து, உலகத்தையே அழிக்கும் சக்தி இப்பொழுது சோவியத் ருஷ்யாவிலும் அமெரிக்க ஐக்கிய நாட்டிலும் சேகரித்து வைக்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் செயற்கைச் சந்திரன்கள் 1000 மைல் உயரத்தில் பூமியைச் சுற்றி வரும்படி இவர்கள் செலுத்தியிருக்கின்றனர். சந்திரனுக்கும், இதர கிரகங்களுக்கும் சமீப காலத்தில் மனிதன் சென்று வரச் சாத்தியப்படும் என்று விஞ்ஞானிகள் பறைசாற்றி வருகின்றனர்.

இயந்திர சகாப்தத்தின் வளர்ச்சி சில ஐரோப்பிய நாடுகளிலும், வட அமெரிக்காவிலுமே ஏற்பட்டிருக்கிறது. ஆசியா, ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா முதலிய கண்டங்கள் இன்னும் பெரும்பாலும் விவசாய சகாப்தத்தில்தான் இருக்கின்றன. ஆனால், அவற்றில்கூடச் சில பாகங்களில் இயந்திர சகாப்தம் நிலைபெற்றுக்கொண்டு வருகிறது. இந்தத் தேசங்களின் அறிஞர்கள் மேல்நாட்டு விஞ்ஞானத்திலும், இயந்திர சக்தியிலும் தேர்ச்சியடைந்து தங்கள் நாட்டிலும் இயந்திர சகாப்தத்தின் ஆதிக்கத்தைப் பூர்த்தி செய்ய விரும்புவதால் அவர்களின் சிந்தனைகளும், வாதங்களும், கட்சிகளும் இயந்திர சகாப்தத்தை அனுசரித்தே இருக்கின்றன. பொதுமக்களில் பெரும்பாலோர் விவசாய சகாப்தத்திலும், அறிஞர்களும் அரசியல் தலைவர்களும் இயந்திர சகாப்தத்திலும் இருப்பதால் இந்த நாடுகள் உடல் வளராமல் மண்டை பெருத்த மனிதரைப்போல் காட்சியளிக்கின்றன.

இயந்திர சகாப்தத்தின் முக்கிய அறிகுறிகளாவன: (1) நகர வாழ்க்கை, (2) உடல் உழைப்பாலும், உயிர்ப் பிராணிகள் உழைப்பாலும் செய்யும் காரியங்கள் குறைந்து அவற்றை இயந்திர சக்தியால் செய்தல்;

(3) காகித நாணயம்; (4) பிரசாரமும், விளம்பரமும்; (5) அரசியல் கட்சிகள். இவற்றைப் பற்றிச் சுருக்கமாக ஆராய்வது அவசியமாகும்.

எல்லாப் பெரிய தேசங்களிலும் விவசாய சகாப்தத்தில் 100-க்கு 80-க்குக் குறையாத குடும்பங்கள் கிராமங்களில் விவசாயத்திலும், குடிசைத் தொழில்களிலும் ஈடுபட்டிருந்தன. இப்பொழுது பிரிட்டனில் ஐந்தில் ஒரு பாகம் ஜனங்களே கிராமங்களில் வசிக்கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடு இப்பொழுதும் விவசாயத்தில் பெருத்த நாடாக இருக்கிறது. ஆயினும் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் நகரவாசிகளாகி விட்டனர். பாரதத்தில் இன்றும் முக்கால்வாசி ஜனங்கள் கிராமங்களில் வசித்தபோதிலும், நகரங்களின் ஜனத்தொகை கிராமங்களைவிடத் தீவிரமாக வளர்ந்து வருகிறது. அதாவது, கிராமங்களிலிருந்து மக்கள் நகரங்களுக்குக் குடியேறி வருகின்றனர். இயந்திர சகாப்தத்தில் இது இன்றியமையாதது. இயந்திர சாலைகளில் நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் தொழிலாளிகள் ஓரிடத்தில் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு வேண்டிய கடைகள், பள்ளிக்கூடங்கள், சினிமா விடுதிகள் முதலியவை சேர்ந்து நகரமாகி விடுகின்றன. டாடா எஃகுச்சாலை முதலில் ஜனமில்லாத இடத்தில்தான் அமைக்கப்பட்டது. இப்பொழுது ஜாம்ஷெட்பூர் ஓர் பெரிய நகரமாகி விட்டது. சித்தரஞ்ஜன் என்ஜின் உற்பத்திசாலை வெறும் திடலில்தான் கட்டப்பட்டது. இப்பொழுது அழகிய பட்டணமாகி விட்டது.

எல்லோரும் உடலைக் கொண்டும், மாடு குதிரைகளைக் கொண்டும் உழைக்கும்போது அவ்வுழைப்பு சகஜமாகவும், நியாயமாகவும் தோன்றியது. பிரபுக்களும், பணக்காரர்களும் பல்லக்கில் போவதும், அவர்கள் வீட்டில் பல பணியாளர்கள் இருப்பதும் நேர்மையாகக் காணப்பட்டது. ஆனால் இயந்திரங்கள் பரவும்பொழுது சிலர் இயற்கை சக்தியைக் கொண்டு வேலை செய்வதும், மற்றவர்கள் தேக உழைப்பால் பிழைப்பதும் முரண்பாடான ஏற்பாடாகத் தோன்றுகிறது. இயந்திரம் பெருகிய நாடுகளில் ரிக்ஷாக்களும், குதிரை, மாட்டு வண்டிகளும் மறைந்து விட்டன.

இருபது வருஷங்களுக்கு முன் பம்பாய், கல்கத்தா, டில்லி நகரங்களில் குதிரை வண்டிகளும், ரிக்ஷாக்களுமே முக்கிய போக்குவரத்து சாதனங்களாக இருந்தன. இப்பொழுது அவை மறைந்து பஸ்களும், வாடகை மோட்டார்களும், மோட்டார் ரிக்ஷாக்களும் மக்களை ஏற்றிச் செல்லுகின்றன.

1950ம் வருஷத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் 600 லக்ஷம் உழைப்பாளிகள் இருந்தனர். அவர்களில் 73 லக்ஷம் பேர்களே விவசாயத்தில் ஈடுபட்டிருந்தனர். இவர்களும் பெரும்பாலும் டிராக்டர், முதலிய இயந்திரங்களைக்கொண்டே பயிர்த்தொழில் செய்தனர். பிரிட்டனிலோ 225 லக்ஷம் தொழிலாளிகளில் 10 லக்ஷம் பேர்களே விவசாய வேலை செய்வோர்கள். பாரதத்தில் 10 கோடி உழைப்பாளிகளில் 7 கோடி விவசாயிகள்.

பாரதத்தைக் காட்டிலும் பிரிட்டனில் ஜனநெருக்கம் அதிகம். சாமர்த்தியத்திலோ, உழைப்பிலோ இந்தியத் தொழிலாளி அவர்களுக்குக் குறைந்தவன் என்று கூற முடியாது. ஆயினும் பாரத மக்களின் சராசரி வருமானத்தைக் காட்டிலும் பிரிட்டிஷ் ஜனங்களின் வருமானம் 15 மடங்கு அதிகமாக இருக்கிறது. இதற்குக் காரணம் இயந்திர சக்தியே. பிரிட்டிஷ் மக்களைவிட அமெரிக்கர்கள் இரு மடங்கு அதிக வருமானம் அடைவதற்குக் காரணமும் மிகுந்த இயற்கைப் பொருள்களும், இயந்திர சக்தியை அவர்கள் அதிகமாக உபயோகிப்பதுமே.

தேக உழைப்பாலும், மாடு குதிரைகளைக் கொண்டும் செய்யும் வேலைகளுக்கு அதிக முதல் வேண்டியதில்லை. ஒரு உழைப்பாளிக்கு ரூ. 100, ரூ. 200 இருந்தால் போதும். அதே உழைப்பாளிக்கு இயந்திர சக்தி கொடுக்க வேண்டுமானால் ரூ. 1000த்திலிருந்து ரூ. 10,000 வரையில் முதல் வேண்டும். உழைப்பின் பலனும் 10லிருந்து 100 மடங்கு கிடைக்கும். அதிக பலன் கிடைப்பதால் அதில் ஒரு பங்கு சேமித்து முதல் திரட்டுவதும் சுலபமாகும்.

விவசாய சகாப்தத்தில் சொந்த நிலத்தைப் பயிர் செய்வோரும், குடிசைத் தொழில்களில் தேர்ச்சியடைந்தோரும் தமது தொழிலையோ, வருமானத்தையோ பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. இயந்திர சகாப்தத்தில் இயந்திரங்களை வைத்து நடத்தும் தொழிற்சாலைகளிலோ, சர்க்கார் உத்தியோகங்களிலோ அதைப் போன்ற வேறு பொது ஸ்தாபனங்களிலோ ஊழியனாக இருப்பதைத் தவிர பிழைப்புக்கு வேறு வழியில்லை. இதற்கு விதிவிலக்கானவர் முதலாளிகளே. ஆதலால் இயந்திரத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட சமுதாயம் முதலாளி, தொழிலாளி என்று இரு கூட்டமாகப் பிளவுபட்டு, இப்பிளவு நாளடைவில் வளர்ந்து, முடிவில் தொழிலாளிகள் புரட்சி செய்து முதலாளிகளைத் துரத்தியபின் இயந்திரங்களைப் பொது உடைமையாக்கி விடுவார்கள் என்பதே மார்க்ஸின் பொதுஉடைமைக் கொள்கை. ஜனநாயக அரசியலும், தொழிலாளர் சங்கங்களும் சேர்ந்தால் இந்த வாதத்தின்படி சமூகப் போக்கு இருக்க வேண்டியதில்லை. இயந்திரத்தினால் உண்டாகும் லாபத்தில் பெரும்பகுதியைத் தொழிலாளிக்கும், பொது சேவைக்கும் பயன்படுத்தலாம் என்று பல நாடுகளில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இயந்திரத் தொழில் வளர்ந்த சமூகத்தில் சாமான்களின் உற்பத்தியும், வியாபாரமும் மிகவும் பெருகுவதால் தங்க, வெள்ளி நாணயங்கள் மூலம் பொருளாதாரம் நடைபெற முடியாது. அதற்காகக் காகித நாணயம் ஏற்படுத்தி, அதன் மதிப்பை நிலைநிறுத்துவது ஒரு சூக்ஷ்ம கலையாகி விட்டது. தவிர, பாங்கிகள் மூலம் ஏராளமான லேவாதேவி செய்யப்படுகிறது. இயந்திரம் முக்கியமா, பணம் முக்கியமா என்ற பிரச்னைகூட அடிக்கடி வாதிக்கப்படுகிறது. பண நிர்வாகத்தில் சிக்கல்கள் ஏற்பட்டால் தொழிற்சாலைகள் நின்று விடும்; தொழிலாளிகள் வேலையின்றித் தவிப்பார்கள்.

# பொன்னி எங்கே!




மலர்விழி நன் உணர்வு பெற்றபோது தன்னை யாரோ இன்னும் பிடித்துக் கொண்டிருப்பதை அறிந்தாள். உடனே பயங்கரமாக அலறினாள். மீண்டும் மூர்ச்சையானாள். சற்று நேரத்துக்கெல்லாம் மூர்ச்சை தெளிந்தாள். இரு பக்கத்திலும் இருவர் சோகமே வடிவமாக உட்கார்ந்திருந்ததையும் கண்டாள். சிறிது சிறிதாக அவளுக்கு நல்ல நினைவு வந்தது. முதல் நாள் நடந்த சம்பவங்களும் நினைவுக்கு வந்தன. தன்னுடைய அருமைக் கணவர் இளங்கோவன் இப்பொழுது இல்லை என்பதை உணர்ந்தபோது, அவளுடைய வாழ்நாளில் இதுவரை அனுபவித்தறியாத இதய வேதனை உண்டாயிற்று. பிரமை பிடித்த நிலையில் சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். ஏதோ ஆவேசம் வந்தவளைப் போல ''யார் என்னை இங்கே கொண்டு வந்தது? என்னுடைய உயிர் இன்னும் போகவில்லையா?'' என்று அருகில் இருந்தவரின் காலடியில் விழுந்து கதறினாள்.

''மலர்விழி! உண்மையாகவே நீதான் பேசுகிறாயா? அல்லது என்னுடைய காதுகள் என்னை ஏமாற்றுகின்றனவா?'' என்று கேட்டார் வானவில் பத்திரிகையின் அதிபர்.

''ஐயா! நான்தான் பேசுகிறேன். அனாதை மலர்விழிதான் பேசுகிறேன். இளங்கோவனைக் கரம் பிடிக்கும் பாக்கியம் பெற்ற பேதைதான் பேசுகிறேன். இந்த ஏழையைக் காப்பாற்ற வேண்டாம். எப்படியாவது என்னையும் இளங்கோவன் இருக்குமிடத்துக்கே அனுப்பி விடுங்கள். கணவனையும் இழந்து, கல்நெஞ்சம் கொண்ட சோல்ஜரின் மிருக வெறிக்கு, என் உயிரினும் மேலான... ஐயோ சொல்லவும் நாக்கூசுகிறதே'' என்று முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு கதறினாள்.

''மலர்விழி! வீணாக மனத்தை அலட்டிக்கொள்ளாதே! எப்படியோ உன்னை உன் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்து விட்டோம். யுத்தத்தின் கொடுமை எத்தனையோ குடும்பங்களைக் குலைத்து விட்டதுபோல உன் வாழ்வையும் குலைத்து விட்டது. நேற்று வரை கோடீசுவரராக இருந்தவர்களெல்லாம் இன்று நடுத் தெருவில் நிற்கிறார்கள். இன்னும் என்னென்ன பயங்கரங்கள் நடக்குமோ கடவுளுக்குத்தான் தெரியும். என்னால் ஆன உதவிகளையெல்லாம் நான் உனக்குச் செய்கிறேன். கடவுளை நம்பித் தைரியமாக இரு'' என்று சொல்லிச் சென்றார்.

'வானவில்' பத்திரிகையின் அதிபர் அங்கிருந்து சென்ற பிறகு அருகில் இருந்தவர்களிடம் ''தயவு செய்து என்னைக் கொஞ்சம் தனியே இருக்க விடுங்கள்'' என்று சொல்லித் தன் அறைக்குள் சென்று விட்டாள் மலர்விழி.

மலர்விழிக்குத் துணையாக இருந்தவர்கள் கவலையுடன் ஏதேதோ பேசிக் கொண்டார்கள். அதை விடக் கவலை தரும்படியான காரியங்கள் வெளியில் நடைபெற்றுக் கொண்டிருந்தன. எதிரியின் குண்டுகள் நகரில் விழுந்து கொண்டிருந்தன.



பகீரதன்

நிம்மதியாக வாழ்ந்து வந்த மக்கள் செய்வதறியாது திகைத்துக் கொண்டிருந்தனர்.

***　　***　　***

பயங்கர யுத்தமேகங்களுக்கு இடையிலும் மலர்விழிக்கு வேண்டிய சௌகர்யங்களைச் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தார் 'வானவில்' பத்திரிகையின் அதிபர். ஆனால் மலர்விழி மட்டும் பிரமை பிடித்தவள் போலவே இருந்தாள். அவள் இதயத்தில் அன்று ஏற்பட்ட பயங்கர நிகழ்ச்சிகளைப் பற்றிய மங்கலான நினைவுகளே தோன்றிக் கொண்டிருந்ததால் அவளுக்கு மிகவும் சோர்வாகவே இருந்தது. அந்தச் சோர்வு அவள் உடலையும் ஆன்மாவையும் பற்றிக் கொண்டிருந்தது என்று சொல்லலாம். இளங்கோவனின் இன்முகம் அவள் மனக்கண்ணின் முன்பு தோன்றியது. யுத்த விமானங்கள் பறந்த வண்ணமே காட்சி யளித்தன. குண்டுகளின் இடி முழக்கங்கள் செவிகளில் வந்து மோதிக் கொண்டிருந்தன. அந்தக் கொடிய இதயம் படைத்த சோல்ஜர் சுற்றித் திரிந்து கொண்டிருந்தான். கண்களின் முன்பு சாம்பல்நிறக் கரை ஏதோ பரவியது போலிருந்தது. அந்தக் கொடியவனின் இழிச் செயல்களுக்கு இடையில் இளங்கோவனின் இனிய முகமும், நகை புரியும் கருநீலக் கண்களும் பிரகாசித்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

அவள் அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்தாள். ஜன்னலில் போய் உட்கார்ந்தாள். தெருவைப் பார்த்தாள். பிறகு கண்களால் கீழே பார்த்துக் கொண்டு, மறுபடியும் நடந்து சென்றாள். அடிக்கடி திடுக்கிட்டு, ஒரு குறிப்பும் இல்லாமல் எதையோ தேடிக் கொண்டிருந்தாள். அவள் தண்ணீர் குடித்தாள். ஆனால் தாகம் தணியவில்லை. நெஞ்சிலே மூண்டிருந்த துயரமும் வேதனையுமான தீ இன்னும் அணையவில்லை. அன்று ஏற்பட்ட நிகழ்ச்சி அவள் வாழ்வைத் துண்டித்தே விட்டது. எவ்வளவு குதூகலத்துடனும் திருப்தியுடனும் அவள் வாழ்க்கை ஆரம்பமாயிற்று! ஆனால் அந்த வாழ்க்கை இப்பொழுது ஒரே பாழ்வெளியாகத் தோன்றியது! துயரத்தால் குமுறிப் பாழ்பட்டுப் போன அவள் உள்ளத்திலே, திரும்பத் திரும்ப ஒரே கேள்விதான் எழுந்து கொண்டிருந்தது.

''இனிமேல் என்ன செய்வேன்! நான் எதற்காக உயிர் வாழவேண்டும்?''

வானவில் பத்திரிகையின் அதிபர் உள்ளே வந்தார். கைகளை ஆட்டிக் கொண்டு மிகுந்த ஆர்வத்துடனும், துயரத்துடனும் பலவிதமாகத் தம் உணர்ச்சிகளைக் கொட்டினார். மலர்விழிக்கு என்னென்னவோ வாக்குறுதிகள் அளித்தார். சோல்ஜர்களை யெல்லாம் கடுமையாகத் திட்டினார். காலத்தையும் விதியையும் நொந்து கொண்டார். ஆனால் இவைகளில் எதுவும் மலர்விழியின் நொந்துபோன இதயத்துக்கு ஆறுதல் அளிக்கவில்லை.

சம்பந்தமில்லாமல் ''ஆமாம்! ஆமாம்!'' என்று தலையை ஆட்டிக் கொண்டிருந்தாள். அவள் கண்கள் ஏதோ ஒரு பொருளை உற்று நோக்கிக் கொண்டிருந்தன. ஆனால் அந்தப் பொருள் அவளிடமிருந்து பிரிந்து இளங்கோவனுடன் போய்விட்டது. அவளுக்கு மனம் விட்டு அழுவதற்குக் கூட இப்பொழுது சக்தியில்லை. உள்ளம் வறண்டிருந்தது. உதடுகள் உலர்ந்து போயிருந்தன. வாய் காய்ந்திருந்தது. அவளுடைய கைகள் நடுங்கின. முதுகு ஜில்லிட்டுப் போயிருந்தது. உடலெல்லாம் துடித்து ஆடிக் கொண்டிருந்தது.



'வானவில்' பத்திரிகையின் அதிபர் போய் விட்டார். பிறகு யார் யாரோ வந்தனர். அவர்கள் கூறும் தேறுதல் வார்த்தைகளால் மலர்விழிக்கு ஆறுதலோ, அமைதியோ, நம்பிக்கையோ ஏற்படவில்லை. மிகுந்த அனுதாபத்துடனும் துயரத்துடனும் அவர்கள் மலர்விழியைப் பார்த்துவிட்டுச் சென்றார்கள். உன்னதமான ஏதோ ஒரு பொருள் உலகத்தை விட்டுப்போய் விட்டதற்குத் தங்கள் துயரத்தையும் அனுதாபத்தையும் தெரிவிக்கும் பாவம் அவர்கள் முகங்களில் தென்பட்டது.

நாட்கள், வாரங்கள், மாதங்கள் என்று காலம் ஓடிக் கொண்டிருந்தது. மலர்விழி யாரிடமும் வாயைத் திறப்பதில்லை. தன் உலர்ந்த நாக்கால் அடிக்கடி உதடுகளைத் துடைத்துக் கொள்வாள். வருபவர்கள் ஏதோ தாங்கள் மலர்விழியின் மனத்துக்குள் இருந்த துயரத்தைத் துடைத்து விட்டதைப் போல் மனத் திருப்தி அடைந்தார்கள். அவளுக்கு இதோபதேசம் செய்தார்கள்.

மேலும் மேலும் மலேயாவில் துயரம் தரும் நிகழ்ச்சிகளே நடந்து கொண்டிருந்தன. மக்கள் உயிர் பிழைத்தால் போதும் என்று எண்ணிக் கால் நடையாகவே பாரதத்தை நோக்கி நடந்து செல்லத் தலைப்பட்டனர். நடந்து செல்வது கப்பல், கார் முதலிய பிரயாண வசதிகளுடன் செல்வதை விட அபாயம் குறைந்ததாக இருந்தது.

மலர்விழி சதா இளங்கோவன் இருந்து வந்த அறைக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தாள். அன்றைய தினமும் அந்த அறையின் ஜன்னலடியில் மலர்விழி நின்று கொண்டிருந்தாள். கைகளைக் கட்டிக் கொண்டு, புருவங்களை உயர்த்தி வெளியே பாழ்வெளியில் பார்வையைச் செலுத்தி நின்றாள். அவள் பவள நிற உதடுகள் மூடியிருந்தன. நீண்ட நாட்களாக வாய் திறந்து பேசாமல் தாடைகளை இறுகச் சேர்த்து வைத்துக் கொண்டே இருந்ததால் அவளுக்குப் பற்களில் வேதனைகூட உண்டாயிற்று. இப்பொழுதெல்லாம் யாரும் வந்து அவளுக்கு ஆறுதல் சொல்வதுகூட இல்லை. அதனால் அவளுக்கு யார் பேரிலும் வெறுப்போ கோபதாபமோ இல்லை. அவள் நெஞ்சில் சோக மயமான இருண்ட மேகம் கவிந்திருந்ததால், அது இருதயத் துடிப்பைத் தடை செய்திருந்தது. அவள் மனம் யாதொன்றும் இல்லாத பாழாக இருந்தது. நெடுநேரம் ஜன்னலின்



அருகில் நின்று நின்று கால்கள் கடுத்தன. கண்கள் சளைத்தன. வெளியே இருந்து அவளைப் பார்த்த அடுத்த வீட்டு அம்மாள், "மலர்விழி! ஏன் இப்படி ஜன்னலின் ஓரமாக நின்று கொண்டிருக்கிறாய்? துன்பப்படுவதற்கு என்றே பிறந்தவளே! போ, துன்பத்தைத் துடைத்துவிட்டுத் தூங்கு! தூக்கம் ஒன்று தான் துயரத்தைத் துடைக்கும், தூங்கு!" என்று சொல்லிவிட்டுச் சென்றாள்.

மலர்விழி அப்படியே படுக்கையில் விழுந்தாள். விழுந்ததுதான் தாமதம், நித்திரையில் ஆழ்ந்து விட்டாள். ஆழம் காணாத பாதாளக் குகை ஒன்றில் விழுந்து விட்டது போல் மயங்கிக் கிடந்தாள்.

இரண்டு மழைகளுக்கு மத்தியில் செல்வதாகக் கனவு கண்டாள். ஊரையே நாசம் செய்யும் குண்டுகள் தன்னைமட்டும் உயிருடன் விட்டு வைப்பதைப் பார்த்து வியந்தாள். ஒரு உயரமான மேட்டின்மீது விடுவிடு என்று ஏறி நின்றாள். அந்த மேட்டிலிருந்து ஓடைக்கு இறங்கக் கூடிய பாதையில் இளங்கோவன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். "என் இளங்கோவன் உயிர் பெற்று வந்து விட்டார்!" "என் இளங்கோவன் உயிர் பெற்று விட்டார்!" என்று உரக்கக் கத்தினாள். "இளங்கோவே! இளங்கோவே!" என்று அழைத்துக்கொண்டு அவனிடம் சென்றாள்.

இளங்கோவன் கைகளை முதுகுப்புறமாகக் கட்டிக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. அவன் இரண்டு கைகளையும் நீட்டி மலர்விழியைத் தன் அருகில் அழைத்தான். ஓடிவந்த மலர்விழியை அப்படியே இறுகத் தழுவிக் கொண்டான். உடம்பு குலுங்கச் சிரித்துக் கொண்டே, "என்னைத் தேடிக் கொண்டு நீ இங்கே ஓடி வந்து விடுவாய் என்று தெரியும்" என்றான்.



இரண்டு பேரும் ஒருவர் கையை ஒருவர் இறுகப் பிடித்துக்கொண்டுஓடைக்கு அருகில் உல்லாசமாக நடந்து சென்றனர். திடீரென்று அவன் கால் தடுக்கி ஓடைக்குள் விழுந்து விட்டான். ஓடைக்குள் விழுந்து தண்ணீரில் மூழ்கும்போது, "மலர்விழி! நீ என்னிடமே இரு. எங்கேயும் போய் விடாதே!" என்று இளங்கோவன் சொன்ன வார்த்தைகள் அவள் காதில் விழுந்து கொண்டிருந்தன.

மலர்விழி கண் விழித்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். "நான் கண்டதெல்லாம் கனவு தானா?" என்று ஏமாற்றம் நிறைந்த குரலில் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள். அவள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது! அதே சமயத்தில் வியர்த்துக் கொண்டுமிருந்தது. தன் இதயத்துக்கு அருகில் தலையைச் சாய்த்துக் காது கொடுத்துக் கேட்டாள். இதயம் காலியாகி யிருப்பதை உணர்ந்தாள்.

அறை முழுதும் அலங்கோலமாக இருந்தது. இளங்கோவனின் புத்தகங்களும் துணிகளும் அங்கு சிதறிக் கிடந்தன. இளங்கோவனின் புகைப்படம் ஒன்று தலைகுப்புற உருட்டப் பட்டுப் பரிதாபமாகக் கிடந்தது!

சட்டென்று எழுந்தாள். இளங்கோவன் படத்தை எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டு குலுங்கக் குலுங்க அழுதாள். ஜன்னலில் போய் உட்கார்ந்தாள். மறுபடியும் பழைய சோர்வு அவள் உள்ளத்தில் எழுந்தது.

"இனிமேல் என்ன செய்வேன்? நான் யாருக்காக உயிர் வாழ வேண்டும்?"

திடீரென்று ஏதோ ஒரு முடிவுக்கு வந்தாள். மன உறுதியுடன் அங்கிருந்து கிளம்பினாள். ஆமாம்! துப்பாக்கிக் குண்டுகளும், விமானத்திலிருந்து விழும் குண்டுகளும் கொண்டு போகாத தன் உயிரைத் தானே போக்கிக் கொள்ளத் தீர்மானித்து விட்டாள்.

*** *** ***

"பேதைப் பெண்ணே! தற்கொலையா செய்து கொள்ளப் போகிறாய்? கழுத்தில் இருக்கும் சுருக்குக் கயிற்றை முதலில் தளர்த்திவிடு. உம், தளர்த்துகிறாயா? இல்லை நானே கயிற்றை அறுத்து விடட்டுமா?" என்று அதிகாரமாக யாரோ சொல்லும் குரல் கேட்டது. மலர்விழி தன் கழுத்தில் இருந்த சுருக்குக் கயிற்றைத் தளர்த்திவிட்டுச் சுற்று முற்றும் பார்த்தாள். தன் எதிரில் இருக்கும் மரத்தைத் தவிர யாரையும் காணவில்லை.

"என்ன, யார் பேசுகிறது என்று விழிக்கிறாயா?" என்று மீண்டும் குரல் கேட்டது.

மலர்விழி குரல் வந்த திசையை அண்ணாந்துபார்த்தாள். யாரையுமே காணவில்லை. கண்களை அகல விரித்து மறுபடியும் பார்த்தாள். யாரையும் காணோம்.

"நான் சாவதை யாரும் தடுக்க முடியாது! எனக்குச் சாவில்தான் அமைதி ஏற்படும்" என்று சொல்லிக் கொண்டே தூக்குக் கயிற்றில் தன்னுடைய தலையை நுழைத்தாள் மலர்விழி.

"அம்மா, மலர்விழி! தயவு செய்து நான் சொல்வதைக் கேள். கயிற்றை அப்படியே விட்டு விட்டு இங்கு வா!" என்று அந்தக் குரல் அவளை அழைத்தது.

மலர்விழிக்குக் காலில் இருந்து தலை வரையில் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. இதுவரை தன்னிடம் பேசியதெல்லாம் அந்த மரம்தான் என்பதை உணர்ந்தாள். "என்ன, மரம் மனிதனைப் போல் பேசுமா என்று நினைக்கிறாயா?" என்று கேட்டது மரம்.

மலர்விழி பதில் சொல்லாமல் தூக்குக் கயிற்றை அப்படியே விட்டுவிட்டு மரத்துக்கு அருகில் மிகுந்த வியப்புடன் சென்றாள்.

"என்னுடைய வேரில் உட்காரு" என்றது மரம். மலர்விழி வேரின் மீது அமர்ந்தாள்.

''நீ ஏன் அம்மா உயிரைவிடத் துணிந்தாய்?'' என்று கேட்டது மரம்.

மலர்விழி தன் சோகக் கதையைச் சொன்னாள். தன் வாழ்வில் வெறுப்பு ஏற்பட்டு விட்ட கொடுமைகளை விவரித்தாள். ''கணவனை இழந்தேன். தமிழ் மகளின் சிறப்புக்கும் பாரத நாட்டின் பண்புக்கும் இலக்கமாக இருக்கும் என்னுடைய விலைமதிக்க முடியாத பெண்மையும் இழந்தேன். இதற்குப் பிறகும் மன அமைதியுடன் என்னால் உயிர்வாழ முடியும் என்று நான் நினைக்கவில்லை. உன் மனத்தில் கையை வைத்துக் கொண்டு நான் சொன்ன என் கதையையெல்லாம் ஒருமுறை எண்ணிப் பார். பார்த்து விட்டு நீயே சொல்லு. நான் உயிரை விடுவது நியாயமா இல்லையாஎன்று!'' என்று மரத்தைப் பார்த்துக் கேட்டாள்.



மரம் கலகல வென்று சிரித்தது! என்னுடைய சோகக் கதையையும் நீ கொஞ்சம் கேள் என்று சொல்லித் தன்னுடைய கதையைச் சொல்லிற்று:

''இந்தப் பாழ் வெளியில் பாவி நான் மரமாக நிற்கிறேன். என்னால் யாருக்கும் எந்தப் பலனும், இருப்பதாகத் தெரியவில்லை. துளிர் விடும் காலங்களில் துளிர்க்கிறேன். இலை யுதிரும் காலங்களில் இலைகளை உதிர்க்கிறேன். பூ பூக்கும் காலங்களில் பூக்கிறேன். ஆனால் என் பூவின் மணம் பொல்லாத மணம். அந்த மணத்தை யாரும் அனுபவிக்க முடியாது. மூக்கைப் பிடித்துக் கொண்டு என்னைத் திட்டுவார்கள். என்னுடைய காயோ பழமோ யாருக்கும் உதவாது. ஏன் பறவைகள் கூட என் காயையும் பழத்தையும் தின்னாது. இப்படி எல்லாராலும் ஒதுக்கப் பட்ட அநாதை நான். இதைவிட நான் உயிரை விடுவதற்கு வேறு காரணம் வேண்டியதில்லை. ஆனாலும் நான் உயிருடன் இருக்கிறேன். எனக்கு என் வாழ்வில் வெறுப்பேற்படுவதற்கு இன்னும் எத்தனையோ சம்பவங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு சமயம் அடித்த புயலில் என்னுடைய கிளைகளில் பாதி ஒடிந்து விட்டன. இன்னொரு சமயம் தண்ணீரே இல்லாமல் பட்டுப்போகும் நிலைக்குக் கூட வந்துவிட்டேன். அப்பொழுதுகூட நான் உயிரை விடவேண்டும் என்று நினைக்கவில்லை. மனிதர்களும், பறவைகளும் என்னைத் தூற்றி ஒதுக்கி விட்டபோதுகூட நான் உயிரைவிட வேண்டும் என்று எண்ணியதில்லை. ஓர் அறிவு படைத்த எனக்கு இருக்கும் துணிவும் தன்நம்பிக்கையும்கூட ஆறறிவு படைத்த இந்த மனிதர்களுக்கு இருப்பதில்லை. எனக்கு இருக்கும் அவப்பெயர் போதாது என்று உன்னைப் போன்று வாழ்க்கையில் வெறுப்படைந்தவர்கள், கோழைகள், வாழ வழி தெரியாதவர்கள், வாழ்க்கையில் வழுக்கி விழுந்தவர்கள் எல்லாரும் வேறு என் கிளைகளில் கயிற்றைக் கட்டித் தற்கொலை செய்துகொண்டு விடுகிறார்கள். அந்த வீண் பழியை வேறு எனக்கு ஏற்படுத்தி விடுகிறார்கள். சாகத்தான் சாகிறார்களே வேறு எங்காவது போய்ச் செத்துத் தொலையக்கூடாதா? இந்தப் பழிச்சொல்லையெல்லாம் தாங்கிக் கொண்டு நான் இன்னும் உயிருடன் இல்லையா? உனக்கு என்ன அப்படி ஊரில் எல்லாருக்கும் ஏற்படாத கஷ்டம் வந்து விட்டது! நீ எப்படி அநாதையாகி விடுவாய்? மனித இனமே அழிந்தா போய் விட்டது! ஒரு மனித உயிர் இந்த உலகில் இருக்கும் வரையில் நீ அநாதை யில்லையே! உனக்காக நீ உன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளா விட்டாலும் உன் வயிற்றில் இருக்கும் சிசுவுக்காகவாவது நீஉன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளத்தான் வேண்டும்'' என்றது மரம்.

அப்பொழுதுதான்தன் வயிற்றில் வளரும் சிசுவின் நினைவு அவளுக்கு வந்தது. ''எனக்கு இது வேறு வேண்டுமா? என் பாவம் என்னோடு தொலைய வேண்டாமா? எனக்குப் பின்னால் என் களங்கத்தின் சின்னமாக என் குழந்தையை இந்த உலகில் வாழ விடவேண்டுமா?'' என்று அலறினாள் மலர்விழி.

ஓரறிவு படைத்த மரம் சொன்ன கதையைக் கேட்டதும் மலர்விழியின் மனத்திலே ஒரு மாற்றம் ஏற்பட ஆரம்பித்தது. அவளுடைய பகுத்தறிவு செயல்பட ஆரம்பித்தது. 'துக்கத்தையும் துயரத்தையும் தூரத் தள்ளிவிட்டு வாழ்வதுதான் வாழ்க்கை. அந்த மாதிரி வாழக் கற்றுக் கொண்டவர்கள்தான் மனிதர்கள். ஆம் நான் மனிதனாகவே வாழப் போகிறேன்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டாள். எல்லாம் ஒருகண நேரம் தான். அதற்குள் அவள் மனம் மாறிவிட்டது. அன்று அவள் கணவன் உயிரை விட்டபோது நிகழ்ந்த சம்பவங்களெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக உள்ளத்தில் தோன்றத் தொடங்கி விட்டன. அவள் இதயம் வேதனையால் துடிதுடிக்க ஆரம்பித்து விட்டது.

வெறி பிடித்தவன்போல மரத்தைப் பார்த்தாள். உறுதி நிறைந்த குரலில் ''முடியாது! முடியாது! நீ என்ன சொன்னாலும் சரி நான் உயிரை விடத்தான் போகிறேன்'' என்று எழுந்தாள். அவளால் எழுந்திருக்க முடியவில்லை. தன்னை இரண்டு பேர்கள் பிடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தாள். ஒரு ஆணும் பெண்ணும் அவளை அணைத்துப் பிடித்து அவள் கழுத்தில் இருந்த சுருக்குக் கயிற்றை அவிழ்த்து விட்டுக் கொண்டிருந்தனர்.

"யார் நீங்கள்? இத்தனை நேரம் என்னுடன் பேசியது மரம் அல்லவா? நீங்கள்தான் இந்த வேதாந்தங்களை யெல்லாம் என்னுடன் பேசிக் கொண்டிருந்தீர்களா?" என்று கண்ணீருக் கிடையே கேட்டாள் மலர்விழி.

"அம்மா! பதட்டப்படாதே. எழுந்திரு. இந்தத் தண்ணீரைக் குடி" என்று மலர்விழியிடம் ஒரு டம்ளர் தண்ணீரை நீட்டினாள் அந்தப் பெண்மணி. அவளுக்கு அருகிலிருந்த வியப்புடன் நின்று கொண்டிருந்தார் அவள் அருமைக் கணவன்.

மலர்விழி தண்ணீரைக் குடித்து விட்டு மிரள மிரள விழித்தாள். அந்த அம்மாளையும் அவள் கணவரையும் பார்த்தாள்.

கணவனும் மனைவியும் சேர்ந்து நிற்பதைப் பார்த்ததும் அவளுக்குச் சோகம் பொங்கிக் கொண்டு வந்தது. கணவனை இழந்து அநாதையாக நிற்கும் தன்னுடைய அவல நிலையை நினைத்துப் பார்த்தாள். அவள் சிந்தனை சிறகடித்துப் பறந்தது. இந்தச் சமயத்தில் தன் கணவன் இருந்தால் எப்படியிருக்கும் என்று எண்ணினாள். முதன் முதலில் தான் இளங்கோவனைச் சந்திக்க வயல் வெளிக்குச் சென்றதும் அவள் நினைவுக்கு வந்தது. அடி வயிற்றிலிருந்து ஏதோ ஒன்று கிளம்பித் தொண்டையை அடைத்துக் கொண்டது. மிகுந்த துயரத்துடன் அந்த அம்மாளின் கணவரைப் பார்த்தாள்.

"பயப்படாதே! இதோ நிற்கிறாரே இவர் தான் என் கணவர். பெயர் நல்லசிவம். என் பெயர் மங்கையர்க்கரசி. நீ ஏதோ அநாதையாகப் போய்விட்டதாக எண்ணி உயிரை விடுவதற்குத் துணிந்து விட்டாய். நாங்கள் கோடிக்கணக்கான ரூபாய்களையும் ரத்தினம் போன்ற குழந்தைகளையும் பறி கொடுத்து விட்ட பிறகும் 'உயிரை விட வில்லை. எங்கள் சொந்த நாடாகிய பாரதத்துக்கு, பொன்னி நதி பாயும் தமிழ் நாட்டுக்கு நடந்து செல்கிறோம். நீயும் எங்களுடன் வா! வயிற்றுப் பிள்ளைக் காரி தற்கொலை செய்து கொள்வது பாவமல்லவா?" என்று மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனாள் மங்கையர்க்கரசி.

"ஆமாம். அம்மா! எங்களுடன் வா. நீ எங்களுடனேயே இருந்து விடலாம். உனக்கு ஒரு குறையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறோம்" என்றார் நல்லசிவம்.



அவர்களுடைய சொற்களில் என்னதான் சக்தி யிருந்ததோ! மலர்விழி அவர்கள் வாக்கைத் தெய்வவாக்காக எண்ணினாள். அவர்களையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். மனம் மாறிவிட்டது. பொங்கி வந்த கண்ணீரைத் துடைத்துவிட்டுக் கொண்டாள்.

மலர்விழி வாயைத் திறக்காமல் அவர்களுடனே பாரதத்தை நோக்கி, தான் பிறந்த செந்தமிழ் நாட்டை நினைத்துப் பாத யாத்திரை செய்யத் தொடங்கி விட்டாள்.

பழுப்பேறிய இலைச் சருகுகள் உதிர்ந்து காற்றிலே பறந்து கொண்டிருந்தன; கரைமீது அமர்ந்து நதியைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார் நல்லசிவம். நீரிலே மிதந்து வந்த காய்ந்த இலைகளைப் பார்த்து மனத்துக்குள் இலேசாகச் சிரித்துக் கொண்டார்.

அவர் காலடியில் ஏராளமான இலைகள் விழுந்து கிடந்தன. எதிர்க் கரையிலிருந்த மரத்தின் இலைகள் எல்லாமே உதிர்ந்து மொட்டையாகக் காட்சியளித்தது. அவருக்கு இடது கைப்புறத்தில் குன்றுபோல கருத்து அடர்ந்த மேகங்கள் கவிழ்ந்திருந்தன. மழை வரும் என்பதை அறிவிப்பது போலிருந்தது அந்தக் கருமேகக் கூட்டம்.

உயிருக்கு ஆசைப்பட்டு, பயங்கரக் குண் வீச்சுக்குப் பயந்து பாரதத்தை நோக்கி நடந்து வரும்போது ஓய்வுக்காக அங்கு அவர்கள் அமர்ந்தனர். நல்லசிவம் நல்ல தமிழர். தமிழ் இதயம் படைத்தவர். தம் வாழ்க்கையில் ஏற்பட்ட பயங்கரங்களை எல்லாம் ஏதோ கனவு போல ஒதுக்கி மறந்து விட்டார். ஒரு கவியின் இதயத்துடன் தன்னைச் சுற்றியுள்ள இயற்கையின் அழகை அநுபவிக்கத் தொடங்கி விட்டார்.

மனிதப் பிறவி எடுப்பது எவ்வளவு நல்லது! எவ்வளவு அற்புதங்களை யெல்லாம் காண முடிகிறது! அழகை அநுபவிக்கும்போது உள்ளம் எவ்வளவு பூரிக்கிறது!

நல்ல விஷயங்கள் உலகில் எவ்வளவோ உள்ளன. அதைப் பார்த்து அநுபவிக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

இந்தப் பழக்கத்தைப் பகுத்தறிவுபடைத்த மனிதர்கள் ஏற்படுத்திக் கொள்ளவில்லையானால் இந்த உலகில் வாழவே முடியாது. மனநிறைவோடு வாழவே முடியாது. அற்பக் கவலைகள் கூட அவர்கள் இதயத்தைப் பிழிந்து அமைதியைக் குலைத்து விடும். இரத்தக் கொதிப்பே ஏற்பட்டு விடும்.

நல்லசிவம் அமர்ந்திருந்த இடத்துக்குப் பின்னால் அடர்ந்திருந்த புதர்களுக்கு மேலே பலருடைய தலைகள் தெரிந்தன. மனிதக் குரல்களும் காதில் விழுந்தன. உயிரைக் காப்பாற்றிக் கொள்ள மலேயாவிலிருந்து பாரதத்தை நோக்கி நடந்து செல்பவர்கள் அவர்கள்.

வழியில் நடந்து நடந்து களைப்படைந்து அப்படியே உயிரை விட்டவர்களின் உடல்கள் சிதறிக் கிடந்தன.

பணம் பணம் என்று பறக்கும் மனிதக் கூட்டம் பொன்னையும் பொருளையும் சுமக்க முடியாமல் வழியில் போட்டு விட்டு மன நிம்மதியுடன் நடந்து வந்து கொண்டிருந்தனர். ஊரைவிட்டு, உற்றாரைவிட்டு, கடல் கடந்து எதைத் தேடுவதற்காக அவர்கள் மலேயாத் தீவுக்கு வந்தார்களோ, அந்தப் பொருள்கள், விலைமதிக்க முடியாத ரத்தினங்கள், தங்க நகைகள் இன்னும் என்னென்னவோ பொருள்கள் எல்லாம் காட்டு

# கிருஷ்ணுவின் குமாரி

## கல்லூரிக்குச் செல்லுகிருள்

கிருஷ்ணுவுக்கு இப்பொழுதெல்லாம் சந்தோஷத்திற்குக் குறைவே கிடையாது. அவனுடைய குடும்பத்திலேயே முதன் முதலாக காலேஜுக்குப் போவது அவன் பெண் சரோஜாதான். அவளால் காலேஜில் தன் பணக்கார சிநேகிதிகளுடன் சரி சமமாகப் பழக முடிகிறது. ஏன்? அந்த அளவிற்கு அவளுடைய ரேயான் புடவைகள் விலை சரஸமாக இருந்தாலும் பகட்டோடு மின்னுகின்றன. கிருஷ்ணுவுக்கு அவற்றை வாங்கிக் கொடுக்கக்கூடிய அளவுக்கு வசதியும் இருக்கிறது.

முதன் முதலில் 1950ல் நாங்கள் ரேயான் நூல்கள் உற்பத்தி செய்ய ஆரம்பித்தோம். எங்கள் தயாரிப்பு இன்னும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. இந்தியாவிலுள்ள அநேக கிராமங்களிலும், டவுன்களிலும் உள்ள ஆயிரக் கணக்கான நெசவுத் தொழிலாளர்களுக்கு எங்கள் ரேயான் நூல்களைக் கொடுத்துச் சேவை செய்கிறோம்.

நாங்கள் தற்பொழுது சன்னமான நூல்கள், வெளுக்கப் பட்ட நூல்களோடு தேசத்திலேயே முதன் முதலாக கலர் நூல்களையும் தயார் செய்ய முன் வந்திருக்கிறோம். இந்தியாவில் ரேயான் தொழிலை முன்னுக்குக் கொண்டு வந்து, பல புது அபிவிருத்திகள் செய்து, நம் தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பாடுபடுகிறோம் என்று நாங்கள் மிகவும் சந்தோஷப் படுகிறோம்.



TRAYONS

**திருவாங்கூர் ரேயான்ஸ் லிட்.,**

**இந்தியாவில் ரேயான் நூல் முதன் முதலாகத் தயாரித்தோர்**

தொழிற்சாலை:
ரேயான்புரம் போஸ்ட்
கேரளம்

விற்பனை ஆபீஸ்:
2/6, செகண்ட் லைன் பீச்
சென்னை-1

ஸ்டாக்கிஸ்டுகள்: **ரேயான் ட்ரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

சென்னை: 27, பவழக்காரத் தெரு ● சேலம்: 63/416, மெயின் ரோடு, செவ்வாய்ப்பேட்டை ● மதுரை: 114-A, தெற்கு மாசி வீதி ● கோயமுத்தூர்: யுனைடெட் இந்தியா பில்டிங்ஸ், அவிநாசி ரோடு

ஆரோக்கியத்தை விரும்புவோர்
எப்பொழுதும் லைப்பாய்
உபயோகித்தே நீராடுவார்

விளையாடும்போதும் சரி, வேலை செய்யும்போதும் சரி, அழுக்கிலிருந்து நாம் தப்ப முடியாது. நம் ஆரோக்கியத்திற்கு நிரந்தரமாக ஆபத்து விளைவிக்கும் நோய்க் கிருமிகள் அழுக்கில் இருக்கின்றன. அக் கிருமிகளைக் கழுவிக் களைந்து உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பது லைப்பாய் சோப்.

அன்றாடம் லைப்பாய் சோப் தேய்த்துக் குளித்து உங்கள் ஆரோக்கியத்தைக் காத்துக்கொள்ளுங்கள். லைப்பாய் ஸ்நானம் புது மலர்ச்சியூட்டுவது.




ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

L 278 30 TM

வழியில் சிதறிக் கிடந்தன. வாழ்க்கை என்பது வெறும் பணத்தில் மட்டும் இல்லை என்பதை அந்தக் காட்சி மனித குலத்துக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தது.

இந்தமாதிரி சூழ்நிலையில், காட்டுக்கு மத்தியில் நல்லசிவம் அமர்ந்திருந்தார். அவருக்குச் சற்றுத் தூரத்தில் நல்லசிவத்தின் மனைவி மங்கையர்க்கரசியும், மலர்விழியும் அமர்ந்திருந்தனர். மலர்விழிக்கு இப்பொழுது நிறை மாதம். வயிறு பருத்திருந்ததால் அவளால் நடக்க முடியவில்லை. நெடுந்தூரம் நடந்து வந்ததால் அவள் உடல் நலிந்து விட்டது. மனவேதனையும் உடல் வேதனையும் சேர்ந்து அவளை வாட்டின. இப்பொழுது அவளுக்குப் பிரசவ வேதனை வேறு உண்டாகி விட்டது.

அவள் கண்கள் பயத்தினால் சற்று வெளிறியிருந்தன. அவள் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் தன்னுடைய சோகக் கதையை யெல்லாம் நல்லசிவத்திடமும் மங்கையர்க்கரசியிடமும் சொல்லி விட்டாள். மலர்விழியின் கதையைக் கேட்டதும் அவர்களுக்கு அவள் மீது மிகுந்த கனிவும் பரிவும் ஏற்பட்டு விட்டன.

நடந்து நடந்து அவர்கள் களுகளுப்பு போய்விட்டது. கவலைதான் அவர்களைப் பிடித்திருந்தது. மலர்விழி அதைவிட மோசமாக இருந்தாள். தன்னைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் வெறித்துப் பார்த்தாள். குழப்பத்தில் அவள் கண்கள் மிரள மிரள விழித்தன. மங்கையர்க்கரசியும் மலர்விழியும் ஒருவரை யொருவர் பார்த்து இளநகை செய்தபோது அதிலே சோகம் மிளிர்ந்தது.

அவர்கள் அமர்ந்திருந்த ஒற்றையடிப் பாதையின் இருமருங்கிலும் அடர்ந்திருந்த புதர்களைப் பார்த்தால் அவைகளும் தங்கள் தலையை ஆட்டிக் கொண்டு எதையோ மிகுந்த ஆவலுடன் எட்டி எட்டிப் பார்ப்பது போலிருந்தன. அவற்றைப் போலவே, தூரத்தில் அமர்ந்திருந்த நல்லசிவமும் எதையோ எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அப்போது சுழன்று சுழன்று அடித்த பெருங்காற்று ஏதோ பெரும் மழை வரும் அறிகுறியை உணர்த்துவது போலிருந்தது!

மலர்விழியும் மங்கையர்க்கரசியும் அமர்ந்திருந்த புதர்களுக்கிடையில் இருந்து 'வீல்' என்று ஒரு ஓசை கேட்டது. அந்த ஓசை இதயத்தையே தாக்குவது போலிருந்தது!

நல்லசிவம் சட்டென்று எழுந்திருந்து பார்த்தார். மங்கையர்க்கரசியின் மீது மலர்விழி சாய்ந்து கொண்டிருந்தாள். அடிக்கடி பலத்த குரலில் அவள் வீரிட்டுக் கத்தினாள். அவள் கண்கள் தெறித்து விழுந்துவிடும் போலிருந்தன. கன்னங்களின் மேலே கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. நெருப்பில் அகப்பட்ட வளைப்போல் அவள் துடிதுடித்தாள். தன்னைச் சுற்றியிருந்த தரையை ஓங்கி ஓங்கி அறைந்தாள். 'கடவுளே! கடவுளே!' என்று கல்லும் கரையும்படி கதறிக் கொண்டிருந்தாள்.



மங்கையர்க்கரசி மலர்விழிக்கு அவளால் செய்ய முடிந்த உதவிகளை யெல்லாம் செய்து கொண்டிருந்தாள். இரக்கத்தினால் அவள் இதயம் உருகி விடும் போலிருந்தது! ஒன்றுமே புரியாமல் அவளும் கத்தினாள்.

ஒரு சின்னஞ்சிறு ஜீவன் மங்கையர்க்கரசியின் கைகளிலே தவழ்ந்தது! செக்கச்செவே லென்று தங்க விக்கிரகம்போல் இருந்தது அது! அது இன்னமும் அதன் தாயுடன் பிணைக்கப்பட்டிருந்தது. கன்னங் கரேல் என்று மின்னிக் கொண்டிருந்த அதன் கண்கள் ஒளிவீசி மின்னிக் கொண்டிருந்தன. சித்திரத்தில் மலர்ந்த செந்தாமரைக் கண்போல இமைகளை மூடாமல் கால்களையும் கைகளையும் ஆட்டிக்கொண்டு அது ஒரேயடியாக அழுதது.

''குவா!...குவா!...குவா!...''

மங்கையர்க்கரசியின் கையிலிருந்து வழுக்கி விழுந்து விடும்போல அதன் உடல் அவ்வளவு வழவழப்பாக இருந்தது. அதன் முகத்தைப் பார்த்துச் சிரிப்பு காட்டிக் கொண்டே தாயுடன் இன்னமும் இணைக்கப்பட்டிருந்த குழந்தையின் தொப்புள் கொடியை அறுத்து விட்டாள் மங்கையர்க்கரசி.

மலர்விழியின் கண்கள் மூடியிருந்தன. அவள் முகம் வெண்தாமரை மலர்போல வெளுத்துப் போய் விட்டது. வறண்ட அவள் உதடுகள் மெதுவாக ஏதோ முணுமுணுத்தன.

குழந்தை கீழ் ஸ்தாயியில் அழுது கொண்டிருந்தது. மலர்விழி இப்பொழுது புன்முறுவல் பூத்தாள். அவள் கண்களில் புது ஒளி வீசியது. அந்தப் புன்னகையினால் நல்லசிவத்தின் மனம் பூரித்தது.

குழந்தை ''குவா! குவா!'' என்று மீண்டும் கத்த ஆரம்பித்து விட்டது. ''ஆ! ஆ! அழாதே! பெண் என்றால் பிறக்கும்போதே இப்படித்தான் 'வீல், வீல்' என்று அழும் போலிருக்கிறது!'' என்றாள் மங்கையர்க்கரசி.

குழந்தை ''குவா! குவா!'' என்று தொடர்ந்து கத்தினாள். ''அழு! அழு! நன்றாக அழு! தொண்டை கிழிய அழு! பயங்கர யுத்த பூமியில் இருந்து, பலகொடுமைகளுக்கு உள்ளான துர்ப்பாக்கிய இடத்திலிருந்து வந்திருக்கிறாய் என்பதைக் காட்ட வேண்டாமா? அதற்காகவாவது அழு!'' என்றாள் மங்கையர்க்கரசி.

பிறகு குழந்தையை எடுத்து மலர்விழியிடம் கொடுத்தாள். ''சுவர்ண விக்கிரகம் போன்ற பெண் குழந்தை அம்மா!'' என்று சொன்னாள் மங்கையர்க்கரசி. இதழ்களில் புன்னகை நெளிய நடுங்குகின்ற கைகளால் குழந்தையைவாங்கிக்கொண்டாள் மலர்விழி.

''கடவுளே!'' என்று பெருமூச்சு விட்டாள். தலையை மெதுவாக அசைத்தாள். குழந்தையைத் தன் முகத்தோடு முகமாகச் சேர்த்து வைத்துக் கொண்டு கொஞ்சினாள்.

திடீரென்று அவள் இலேசான குரலில் முனகிக் கதறினாள். மீண்டும் சோர்ந்து மௌனமானாள். தாய்மை ததும்பும் தன்

கண்களை மெள்ளத் திறந்தாள். அவை ஆகாயத்தை நோக்கிக் கொண்டிருந்தன. நன்றியும் மகிழ்வும் ததும்பும் இளநகை அவள் முகத்திலே மலர்ந்தது. தன் கைகளைத் தூக்கி நல்லசிவத்துக்கும் மங்கையர்க்கரசிக்கும் நன்றியும் வணக்கமும் செலுத்தினாள்.

அவள் கண்களில் மின்னிய ஒளி மீண்டும் மங்கியது. முகத்தில் திடீரென்று சோகம் குடி கொண்டது. சற்று நேரம் மௌனமாக இருந்தாள். திடீரென்று பேசினாள்:

“என் கணவருக்கு, இளங்கோவருக்குக் காவேரி நதியின்மீது எல்லையற்ற ஆசை. ‘பொன்னி! பொன்னி!’ என்று ஓயாது சொல்லிக் கொண்டிருப்பார். நமக்குப் பெண் பிறந்தால் ‘பொன்னி!’ என்று பெயரிட வேண்டும் என்று சொல்லுவார். பொன்னி பிறந்து விட்டாள்! அதைப் பார்க்க அவர் இல்லை. பொன்னி நதியைப் போல் என் பொன்னியும் காட்டின் மத்தியிலே பிறந்திருக்கிறாள்” என்றாள் மலர்விழி. சற்று நேரம் பேசாமல் இருந்துவிட்டு மீண்டும் பேச்சை ஆரம்பித்தாள்:

“மங்கையர்க்கரசி! நீ தான் இனிமேல் இந்தத் திக்கற்ற குழந்தைக்குத் தாய். பொன்னிக்கு இனி நான் தாயில்லை!” என்று சொல்லி விட்டுக் கண்ணீர் விட்டாள்.

“கடவுள் இருக்கிறார். அவர்தான் நம் எல்லாருக்கும் தாய்” என்றாள் மங்கையர்க்கரசி.

மலர்விழி அன்புடன் தன் குழந்தையைப் பார்த்தாள். தன் உதடுகளை நாக்கினால் தடவி விட்டுக் கொண்டாள். அன்பு மிகுதியால் தாய்மைப் பாசத்தால் குழந்தையைத் தலையிலிருந்து கால் வரையில் முத்தமிட்டாள். உணர்ச்சி நிறைந்த இதயத்துடன் குழந்தையைத் திரும்பத் திரும்பப் பார்த்தாள். மகிழ்ச்சியும் சோகமும் உடல் நலிவும் ஒரே சமயத்தில் அவளைத் தாக்கத் தொடங்கி விட்டன. அவள் அப்படியே சற்றுநேரம் சோர்ந்து கிடந்தாள். திடீரென்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசத் தொடங்கினாள்:

“மங்கையர்க்கரசி! இந்தக் குழந்தை எப்படி வாழப் போகிறாளோ?” என்றாள் பெருமூச்சு விட்டுக்கொண்டே. “நீயும் உன் கணவரும் எனக்குச் செய்த உதவிகளுக்கு நன்றி. ஆனால் அது என் குழந்தைக்கு நன்மையாக இருக்குமா என்பது எனக்குத்தெரியாது” என்றாள். அவளுடைய கண்கள் கலங்கி விட்டன.

குழந்தையை எடுத்து மங்கையர்க்கரசியின் கையிலே கொடுத்தாள் மலர்விழி. அதன் நெற்றியிலே குனிந்து முத்தமிட்டாள். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். தன் தலையைப் பின்னே சாய்த்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தாள். மலைகளை, மரங்களை, மங்கையர்க்கரசியிடம் ஒப்படைக்கப்பட்ட தன் அருமைக் குழந்தையைப் பார்த்தாள். அவள் கண்களில் மீண்டும் பிரகாசமாக ஒளிவிட்டது. வற்றாத அன்பு அதிலே மிதந்தது.

சட்டென்று அடிவயிற்றைத் தன்னுடைய கைகளால் அமுக்கிப் பிடித்துக் கொண்டு, “ஐயோ, கடவுளே!” என்று அலறினாள். துடியாய்த் துடித்தாள் மலர்விழி.

“கடவுளே! என் குழந்தையைக் காப்பாற்று. என் அருமைக் குழந்தை! என் அருமைக் குழந்தை……” என்று சொல்லிக் கொண்டே இருந்தாள். திடீரென்று வானத்தில் ஒரு மின்னல் மின்னியது. இடி இடித்தது. “அதோ! அந்த மின்னலில் என் கணவரைப் பார்த்தேன்! அவர் என்னை அழைக்கிறார். நான் போகிறேன்! போகிறேன்” என்றாள். “என் குழந்தை எங்கே? என் பொன்னி எங்கே? பொன்னி எங்கே?” என்றாள்.

அவள் குரல் நின்று விட்டது.

மங்கையர்க்கரசி குழந்தையைத் தரையில் விட்டு விட்டு வானத்தை நோக்கிப் பார்த்தாள். குமுறிக் குமுறி அழுதாள். கண்ணீர் விட்டாள். நல்லசிவம் மரம்போல் ஆடாமல் அசையாமல் நின்று விட்டார்.

குழந்தை பொன்னி நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். எல்லாவிதமான சுக சௌகர்யங்கள் உள்ள இடத்தில் மகிழ்ச்சிகரமான சூழ்நிலையில் தூங்கும் குழந்தைகளுக்கும் பொன்னிக்கும் எந்த வித்தியாசமும் இல்லாமல் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தாள். கந்தல் துணியில் புற்களின்மீது பொன்னி படுத்திருந்தாள்.

மாலைச் சூரியனின் செங்கதிர்கள் குழந்தை பொன்னியின் தங்க முகத்தில் பட்டுப் பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தன.

காட்டுக்குள்ளிருந்து பேய்க் காற்று சுழன்று சுழன்று அடித்தது. காட்டு மரங்கள் சோகத்துடன் எதையோ முணுமுணுத்துக் கொண்டிருந்தன. அது ‘மலர்விழி எங்கே? எங்கே மலர்விழி?’ என்று கேட்டுக்கொண்டிருப்பது போலிருந்தது. (அடுத்த இதழில் முடியும்)

## மூன்றும் அத்தியாயம்

# இன்ப உலகம்

'சா'வைக் கண்டு எதற்காகப் பயப்பட வேண்டும்? நான் பயப்பட மாட்டேன்' என்று மார்தட்டி வீரம் பேசுபவர்கள் உண்டு. "இருப்பதும் இறப்பதும் நம்மிடமா இருக்கிறது? எல்லாம் ஈசன் செயல் அல்லவா?" என்று




வேதாந்தம் பேசுபவர்களும் உண்டு. ஆனால் வீரமும் வேதாந்தமும் சாவை நேருக்கு நேராகப் பார்க்கும்போது எங்கேயோ ஓடி ஒளிந்து கொள்ளுகின்றன. பீதி ஒன்றே நிலைத்து நிற்கிறது! இந்த ஒரு நிலைதான் அன்றைய தினம் அந்த விமானத்தில் பிரயாணம் செய்த அனைவருக்கும் ஏற்பட்டது. நமது கதாநாயகன் நடராஜன் உள்படத்தான். அவனும் மனிதன்தானே?

விமானத்தில் ஏறி அமர்ந்த நடராஜ வின் உள்ளத்தை விமலா முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டாள். அந்த உள்ளமாகிய ராஜ்யத்தின் அரசியாகி, அரியாசனத்தில் வீற்றிருந்து ஆட்சி செலுத்தத் தொடங்கினாள். அது கொடுங்கோல் ஆட்சியாகத் தோன்றியது நடராஜனுக்கு. இல்லையானால் அவன் ஏன் இப்படிக் கிடந்து தவித்து உருக வேண்டும்?

விமானத்தில் உபசரணைக்காக அமர்த்தப்பட்டிருந்த பெண்மணி தன் தொழிலுக்கே உரித்தான பண்புடனும் அடக்கத்துடனும் அவனிடம் பஞ்சையும், மிட்டாய்களையும், கிராம்பு ஏலக்காய் முதலியவைகளையும் நீட்டினாள். ஆனால் அவளுடைய பண்பும் அடக்கமும் நடராஜனிடத்தில் பிரயோஜனப்படவில்லை. அதிகாரக் குரலை உபயோகித்த பின்னர்தான் நடராஜன் திடுக்கிட்டுத் தன் சிந்தனைகளிலிருந்து விடுபட்டு அவற்றை எடுத்துக் கொண்டான்.

தரையில் வேகமாக ஓடிய அந்த விமானம் ஏதோ ஒரு மாய மந்திர சக்தியால் கட்டுண்டதைப் போல் 'ஜிவ்'வென்று

# பெருநிலவு

கி. ராஜேந்திரன்

எழும்பி மேலே சென்றுகொண்டிருந்தது. அதுவரையில் மிகுந்த உற்சாகத்துடன் இருந்த நடராஜனுக்குத் துக்கம் தொண்டையை வந்து அடைத்துக் கொண்டது.

சுமார் பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு திடீரென்று செவிகளைச் செவிடாக்கக்கூடிய ஒரு பயங்கரச் சத்தம் கேட்டது. பிரயாணிகள் அனைவரும் திக்பிரமை பிடித்தவர்களைப்போல் ஆடாது அசையாது உட்கார்ந்திருந்தார்கள். ஏதோ ஆபத்து வந்து விட்டது என்று அவர்களுக்குத் தெரியாமல் இல்லை! இருந்தாலும் ''ஒன்றுமில்லை; எல்லாம் சரியாகிவிடும். இந்த விமானம் நல்ல விமானம். விமான ஓட்டிகள் கெட்டிக்காரர்கள். நம்மைக் கைவிட மாட்டார்கள்'' என்றெல்லாம் அவர்கள் மனத்தில் எண்ணி எண்ணித் தங்களைத் தாங்களே சமாதானப்படுத்திக்கொள்ள முயன்றார்கள். தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்வதில்தான் மனத்துக்கு எவ்வளவு ஆசை?

விமான ஓட்டிகளின் அறைக் கதவைத் திறந்து கொண்டு பிரதம விமான ஓட்டி வெளியே வந்தார். ''இடது புறத்திலிருக்கும் இரண்டு என்ஜின்களில் ஒன்று வீணாகி விட்டது. நல்ல வேளையாக விமான நிலையத்திலிருந்து நாம் அதிக தூரம் வரவில்லை. திரும்பி விமான நிலையத்துக்கே போய் விடலாம். எல்லோரும் தைரியமாக இருங்கள்'' என்று கூறினார்.

ஆனால் பிரயாணிகள் மட்டும் தைரியமாக இல்லை. முன்பு கொஞ்ச நஞ்சம் இருந்த தைரியமும் இப்போது அடியோடு போய் விட்டது. அவர்கள்

உள்ளத்தில் பீதி அதிகமாயிற்று. பயத்தினால் உடல் நடுங்குவதற்குக் கூடச் சக்தியற்று அமர்ந்திருந்தார்கள்.

பிரயாணிகள் பயப்படாமல் இருக்க அப்படிச் சொன்னாரே ஒழிய, உண்மையில் அந்த விமானத்தை எவ்வளவு பெரிய அபாயம் சூழ்ந்திருக்கிறது என்பதை விமான ஓட்டி உணராமலில்லை.

தீப்பிடித்துக் கொள்வது ஒன்றினைத் தவிர விமானத்துக்கு மிகப் பெரிய ஆபத்து என்று சொல்லக்கூடியது விசிறிகள் கட்டுக்கடங்காமல் போவதுதான். விமானம் பறக்கும்போது முன்னால் இருக்கும் விசிறிகள் ஒரு குறிப்பிட்ட வேகத்தில் சுற்றிக் கொண்டே இருக்கின்றன. அந்த இயந்திரம் சரியாக வேலை செய்யாமல் விசிறிகள் சுழலும் வேகம் கட்டுக் கடங்காமல் அதிகமாகிக் கொண்டே போய் விட்டது. அதனை உடனே சரியான வேகத்துக்குக் குறைக்காவிட்டால் விசிறி பிய்த்துக் கொண்டு பறந்து போய் பெட்ரோல் நிரப்பியிருக்கும் விமானத்தின் பகுதியைத் தாக்கி அதை இரண்டாகப் பிளந்து விடலாம். அல்லது அந்த வேகத்தில் இயந்திரமே பிய்த்துக் கொண்டு போய்விடலாம்.

இவற்றையெல்லாம் அந்த விமான ஓட்டி அறிந்துதான் இருந்தார். இதே மாதிரியான அபாய நிலை பஸிபிக் மகா சமுத்திரத்தின் மீது சென்று கொண்டிருந்த அமெரிக்க விமானம் ஒன்றுக்கும் ஏற்பட்டது. அதனை ஓட்டிய டைஸன் என்ற அமெரிக்கர் பாழடைந்து போன அந்த விமான இயந்திரத்தோடேயே ஆயிரம் மைல்கள் பறந்து சென்று ஹிலோ என்ற இடத்தில் பத்திரமாக இறக்கினார். உலகமே கண்டு வியக்கும் படியான அற்புத சாதனை அது.

நல்ல வேளையாக இந்த விமானம் நடுக்கடலில் பறக்கவில்லை. வெகு சீக்கிரத்தில் விமான நிலையத்துக்குத்திரும்பி விடலாம். இப்படி அவர் எண்ணிக் கொண்டே இருக்கையில் அருகே இருந்த துணை விமான ஓட்டி பழுதடைந்திருந்த இயந்திரம் சிவந்து நெருப்புப் பொறிகள் வருகின்றன என்று தெரிவித்தார். இன்னும் ஐந்தே நிமிஷங்களில் விமான நிலையம் வந்து விடும். அது வரைக்கும்......இல்லை! இல்லை! அதற்குள்ளாக விசிறியின் ஒரு அலகு பிய்த்துக் கொண்டு பறந்தது. விமான ஓட்டியின் திறமை திடீரென்று செயல்பட ஆரம்பித்தது. அதே கணத்தில் விமானத்தின் இடப்புறத்து இறக்கையை மேலே உயர்த்தி, வலப்புறத்து இறக்கையைக் கீழே தாழ்த்தினார். பிய்த்துக் கொண்டு பறந்த அலகு விமானத்தின் மீது படாமல் சென்று விட்டது! ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே விமானத்தை மிகவும் ஜாக்கிரதையாகக் கீழே இறக்கினார்.

ஒரு பக்கத்து இயந்திரம் பழுதடைந்திருந்ததால் இறங்குவது நேராக இல்லை. பிரதம விமான ஓட்டியின் அசாத்தியத் திறமை காரணமாக அன்றைய தினம் இருபத்திரண்டு மனித உயிர்கள் மரணத்தின் வாயிலிருந்து காப்பாற்றப்பட்டன!

* * *

நடராஜன் விமானத்திலிருந்து கீழே இறங்குவதைப் பார்த்ததும் எல்லோரும் ஓடி வந்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அப்பாவும், மாமாவும் அவனைக் கட்டிக் கொண்டு மகிழ்ந்தார்கள். தாய் உச்சி முகந்து ஆனந்தக் கண்ணீர் விட்டாள். நடராஜன் புன் சிரிப்புடன் அவர்களைத் தட்டிக் கொடுத்துத் தேற்றினான். அளவு கடந்த மகிழ்ச்சிக்கும்கூட ஆறுதலும் தேற்றுதலும் தேவைப்படுகின்றன! அதே சமயத்தில் அவன் கண்கள் சுற்றிச் சுற்றி விமலாவைத் தேடின. 'அவள் எங்கே? ஏன் என்னைக் காண இவர்களுடன் வரவில்லை?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். அதற்குப் பதில் கிடைக்கவில்லை.

"மாமா! விமலாவை எங்கே காணோம்?" என்று கேட்டான்.

அவனைச் சூழ்ந்திருந்தவர்களும் அவனைப் போலவே திடுக்கிட்டார்கள். அவன் பத்திரமாக இறங்க வேண்டுமே என்ற அளவுகடந்த கவலையால் விமலா தங்களுடன் இல்லை என்பதையே அவர்கள் கவனிக்கவில்லை! இப்போது அவர்களும் "விமலா எங்கே காணோம்?" என்று கேட்டார்கள்.

"லட்சணம்தான்! நான் உங்களைக் கேட்டால் நீங்கள் என்னையே திருப்பிக் கேட்கிறீர்களே?" என்று சொல்லிக் கொண்டே அவர்களைத் தாண்டிச் சென்றான் நடராஜன். "விமலா! விமலா!" என்று அழைத்துக் கொண்டே சென்ற அவன் சற்றுத் தூரத்தில் விமலா கேட்பாரற்றுவிழுந்துகிடப்பதைக் கண்டதும் ஓடினான். அருகே நெருங்கியதும் நிதானமாகப் பரிவோடு அவள் தலையைத்தூக்கித் தன் மடியில் வைத்துக் கொண்டான். "விமலா! இதோ பார்! நான் வந்து விட்டேன், விமலா!" என்று திரும்பத் திரும்பச் சொன்னான். டாக்டராகிய அவனுக்கு மயங்கி விழுந்திருக்கும் அவள் முகத்தில் தண்ணீர் தெளிக்க வேண்டும் என்று கூடத் தோன்றவில்லை!

அந்தக் காரியத்தைச் சிவசாமி செய்தார். விமானக் கூடத்திலே இருந்த உணவுச் சாலையிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து தெளித்தார். விமலாவின் இமைகள் மெல்ல மெல்லத் திறந்து கொண்டன. அவளுடைய கண்கள் முதன் முதலாக நடராஜனின் முகத்தைப் பார்த்தன. பார்த்த கண்கள் பார்த்தபடியே இருந்தன. அந்தக் காட்சியை விட்டுச் சற்றும் அகலவே யில்லை. 'இந்த உலகில்தான் இருக்கிறோமா? இது சொர்க்க லோகம் இல்லையே?' அதனை நிச்சயப்படுத்திக் கொள்ளத்தானோ என்னவோ சிறிதளவு நகர்ந்த பார்வை மேலே சுழன்று கொண்டிருந்த மின்சார விசிறியைப் பார்த்த பிறகு மீண்டும் நடராஜனின் முகத்தில் பதிந்து விட்டது. 'சொர்க்க லோகத்தில் மின்சார விசிறி ஏது? இது பூலோகமாகத்தான் இருக்க வேண்டும். அப்படியானால் இதோ அத்தானும் இருக்கிறாரே! அவருக்கு ஆபத்து ஒன்றும் இல்லை!'' இதைப் புரிந்து கொண்டதும் விமலாவுக்கு உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கியது. சின்னஞ் சிறிய புன்னகையாக அவளுடைய இதழ்க் கோடியில் அது வெளிப்பட்டது.

அடுத்த கணம் அவள் தன் அத்தானுடைய மடியில் தலையை வைத்துப் படுத்திருப்பதையும், தன்னை ஆனைவரும் கவனிப்பதையும் உணர்ந்தாள். பெண்மைக்கு உரித்தான நாணம் அவளைச் சூழ்ந்து கொண்டது.

ஆனால்...ஆனால் எழுந்திருக்க மனம் இல்லையே? விமலா ஒரு தந்திரம் செய்தாள். மீண்டும் மயங்கி விட்டது போல் கண்களை மூடிக் கொண்டு நிம்மதியாகப் படுத்திருந்தாள்! அதனை உணர்ந்ததால்தானோ என்னவோ அவள் முகத்தில் மீண்டும் தண்ணீர் தெளிக்க ஆரம்பித்த சிவசாமியைத் தடுத்து நிறுத்தி விட்டான் நடராஜன்.

'என் எதிரில் அத்தானை உதைத்துக் கொண்டு என் உள்ளத்தில் பொறுமையை உண்டாக்கினார் அல்லவா மாமா ராமலிங்கம்? இருக்கட்டும் இருக்கட்டும். இப்போது என்ன செய்வார்?'' என்று எண்ணிய விமலாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டு அவள் தன் நாயகனுடன் காதல் ரதத்தில் ஏறி இன்ப லோகத்துக்குப் பறந்து சென்றாள்.

அந்த இன்ப லோகத்திலே பூரண சந்திரன் தன் அமுதக் கிரணங்களால் ஒளி பரப்பிக் கொண்டிருந்தான். அந்தப் பொங்கி வரும் பெருநிலவு அந்த இளம் காதலர்கள் மீது பட்டு உடல் சிலிர்க்கச் செய்தது. சுற்றிலும் ஆயிரமாயிரம் நட்சத்திரங்கள் தோன்றி, தங்கள் கண்களைச் சிமிட்டி அந்தக் காதலர்களைக் கேலி செய்தன. அந்தக் கேலியைப் பொருட்படுத்தாமல் அவர்கள் கைகளைக் கோத்துக் கொண்டு பஞ்சு போன்ற மென்மையான மேகக் கூட்டங்கள் மீது நடந்து சென்றார்கள். பூரண சந்திரனை அவர்கள் அணுகியதும், அது அவர்களுடைய உள்ளக் கருத்தை அறிந்து கொண்டது போல் தன்னைத்தானே சுருக்கிக் கொண்டு பிறைச் சந்திரனாக மாறினான். காதலர்கள் அந்தப் பிறைச் சந்திரனில் அமர்ந்தார்கள். குளிர்ந்த தென்றல் காற்று வீசிப் பிறைச்சந்திரனை



ஆட்டியது. காதலர்கள் உல்லாசமாக அதில் ஊசலாடினார்கள்.

சிறிது நேரத்தில் தென்றல் காற்றோடு இனியமணம்கலந்துவந்தது. அந்தமணத்தினால் கவரப்பட்டவர்களைப் போல் அந்தக் காதலர்கள் இறங்கி நடக்கத் தொடங்கினார்கள். சிறிது தூரம் சென்றதும் ஒரு வண்ண மலர்ச் சோலை எதிர்ப்பட்டது. இரவென்றும் பகலென்றும் பாராமல் அந்தச் சோலையில் எல்லா மலர்களும் ஒரே சமயத்தில் பூத்துக் குலுங்கின. அவற்றிலிருந்து எழுந்த நறுமணம் தலையைக் கிறுகிறுக்கச் செய்தது. ஆயிரமாயிரம் பட்டுப் பூச்சிகள் தங்கள் வண்ணச் சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டு இங்கும் அங்குமாகப் பறந்து சென்று தேன் அருந்தின. குயில்கள் தங்கள் இனிய குரலால் காதல் கீதங்கள் பாடின. மரங்கொத்திகள் தங்கள் அலகுகளால் தாளம் போட்டன. மூங்கில் புதர்களுக்கிடையில் வீசிய தென்றல் குழலூதி

யது. இவற்றுக்கு ஏற்ப மயில்கள் தோகை விரித்து ஆடின.

மரக் கிளைகளில் அமர்ந்திருந்த ஜோடிப் புறாக்கள் இவற்றையெல்லாம் அனுபவித்துக் கொண்டே ஒன்றை ஒன்று கொஞ்சி மகிழ்ந்தன. அந்த இளம் காதலர்களும் கொஞ்சி மகிழ்ந்தார்கள். தூரத்தில் இருந்த மலைச்சாரலில் அருவி சுருதியைப் போல் 'ஹோ' என்ற சத்தத்துடன் விழுந்தது. அதிலிருந்து கிளம்பிய நீர்த்துளிகள் அக்காதலர்களின் முகத்தில் பன்னீர் தெளிப்பது போல் விழுந்தன.

விமலா திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். சிவசாமி தன் முகத்தின் மீது மீண்டும் தண்ணீர் தெளித்திருப்பதை உணர்ந்து கொண்டாள்.

பிரயாணத்தை மீண்டும் மறுநாள் தான் தொடங்க முடியும் என்பதை



அறிந்து கொண்ட அவர்கள் குதூகலத்துடன் வீடு திரும்பினார்கள்.

* *

வீட்டுக்கு வந்த பின்னர் "சகுனம் சரியாக இல்லையே, நடராஜா; உன்னுடைய லண்டன் பிரயாணத்தைக் கொஞ்ச நாட்கள் ஒத்திப் போடேன்" என்றாள் அத்தை மரகதம்மாள்.

"சோம்பேறிகளின் பேச்சு!" என்றான் நடராஜன். அவன் தற்காலத்தில் இருந்தான். அத்தை இன்னும் பண்டைக் காலத்திலேயே இருந்தாள். தற்காலத்து யுவன் என்பதோடு நடராஜன் விஞ்ஞானியும் கூட. விஞ்ஞான முன்னேற்றங்களை நேருக்கு நேராகக் கண்ட அவனுக்குச் சகுனமும் காலமும் வேளையும் கேலிக்கு இடமளிப்பவையாகத் தோன்றியதில் ஆச்சரியமென்ன? மீண்டும் புறப்படத் தயாராக இருந்தான் நடராஜன் போவதற்கு முன்னால் விமலாவிடம் தனித்துப் பேசும் சந்தர்ப்பம் மறுபடியும் கிடைத்தது அவனுக்கு.

"அடி கள்ளி! விமானக் கூடத்தில் பாசாங்குதானே செய்தாய்?" என்று கேட்டான் அவன்.

"இல்லவே இல்லை, அத்தான்! கண்களை விழித்து உங்களைப் பார்த்தேன். பின்னர் மயங்கி விட்டேன். நான் இந்த உலகத்திலேயே இல்லை, அத்தான்!"

"பச்சைப் புளுகு! நான் டாக்டர். என் மடியில் இருந்த நீ மயங்கவில்லை என்று எனக்கு நன்றாகத் தெரியும். உன் மன நிலையைப் புரிந்து கொண்டு பேசாமல் இருந்தேன் அவ்வளவுதான்."

விமலாவுக்கு சந்தோஷத்தாலும் பெருமிதத்தாலும் உடல் பூரித்தது. "இல்லை, அத்தான்! உங்களைக் கண்டு நான் மயங்கியது உண்மை! இந்த உலகிலிருந்து இன்ப உலகுக்குச் சென்றதும் உண்மை" என்றாள் விமலா.

"பொல்லாதவள் நீ; போய் வருகிறேன். உன் நினைவையும் எடுத்துக் கொண்டுதான் போகிறேன்."

விமலா பதில் பேசவில்லை. தலையைக் குனிந்து கொண்டாள். நடராஜன் ஒரு விரலால் அவள் முகவாயைத் தாங்கி முகத்தை நிமிர்த்தினான். அளவற்ற சோகத்தோடு அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டே, "அத்தான்! நிஜமாகவே அம்மா சொல்வது போல் என்னைக் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருந்து விடுவீர்களா அத்தான்?" என்று கேட்டாள் அவள்.

"சீ அசடு! அனாவசியமாக எதையாவது நினைத்துக் கொண்டு மனத்தை அலட்டிக் கொள்ளாதே!" என்றான் நடராஜன்.

இரண்டாவது முறையாக எவ்வித இடையூறுமின்றித் தன் லண்டன் பயணத்தைத் துவக்கினான் நடராஜன்.

* *

ராமலிங்கம் படித்து டாக்டர் பட்டம் பெற்ற பிறகு தம் தகப்பனார் கோவிந்தராஜனிடம் ஊரில் இருக்கும் நிலத்தை யெல்லாம் விற்று விட்டு அந்தப் பணத்தைக் கொண்டு ஒரு நர்ஸிங்ஹோம் ஆரம்பிக்க விரும்புவதாகத் தெரியப்படுத்தினார். தகப்பனார் கோவிந்தராஜனுக்குத் தம் நிலங்களையெல்லாம் விற்பதில் மிகுந்த மன வருத்தம்தான். உயிருக்குயிரான ஒரு நீண்ட நாள் நண்பனை விட்டுப் பிரிவது போல் மனம் வருந்தினார்.

இருந்த போதிலும் எதிர்காலம் தம்முடையது அல்ல, தம் மகன் ராம

லிங்கத்தினுடையது என்பதனையும் அவர் உணர்ந்திருந்தார். ஆகவே ஆட்சேபிக்கவில்லை. டாக்டர் ராமலிங்கம் கிராமத்தில் இருந்த நிலங்களை விற்றுச் சென்னையில் பெரியதொரு நர்ஸிங் ஹோமையும் அதன் அருகிலேயே ஒரு வீட்டையும் கட்டி முடித்தார். தம் தகப்பனாரின் நினைவுக்காக எழுப்பப் பட்டதாகவே கருதி நர்ஸிங்ஹோமுக்கு 'ராஜன் நர்ஸிங்ஹோம்' என்று நாமகரணமும் செய்தார்.

தம் மகன் நடராஜனும் தம்முடைய டாக்டர் தொழிலையே மேற்கொள்ள விரும்புவதை அறிந்ததும் டாக்டர் ராமலிங்கத்துக்கு அளவு கடந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனாலும் மகனை முதலிலேயே எச்சரிக்க வேண்டியது தமது கடமை என்று எண்ணி அப்படியே செய்தார். "டாக்டருக்குப் படிப்பது என்பது சுலபமான காரியம் அல்ல. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் போது அதில் ஒருவிதக் கவர்ச்சி தென்படலாம். ஆனால் கலாசாலையில் புகுந்த பின்னர் தவம் இருப்பது போல் படிப்பைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தால் ஒழியச் சுலபத்தில் வெளியே வர முடியாது. ஐந்து வருடங்கள் அப்படித் தவம் இருக்க வேண்டும். அதன் பிறகு ஆஸ்பத்திரியில் ஒரு வருஷம் டாக்டராகச் சேவை செய்து பயிற்சி பெற வேண்டும். இதற்கெல்லாம் நீ தயாராக இருக்கிறாயா?" என்று கேட்டார்.

மகன் நடராஜன் சிறிதும் தயங்கவில்லை. "அப்படியே இருக்கிறேன், அப்பா!" என்றான் தைரியமாக. ராமலிங்கம் தம் மகனை இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. நடராஜன் அவர் நினைத்தது போல் டாக்டராக மட்டும் விரும்பவில்லை. அவன் ஒரு லட்சியவாதியும் கூட. மருத்துவக் கலாசாலையில் புகுந்தது முதற்கொண்டே அவன் சஸ்திர சிகிச்சையில் மிகுந்த ஆர்வம் காட்டி வந்தான். சஸ்திர சிகிச்சையில் ஈடு இணையற்றவன் என்று பெயர் வாங்க விரும்பினான். தகப்பனார் நடத்திவந்த நர்ஸிங்ஹோமை அவருக்குப் பின்னால் தானே ஏற்றுச் சிறப்பாக நடத்த விரும்பினான். பாரத நாட்டிலேயே தலைசிறந்த நர்ஸிங்ஹோமாக அது அமைய வேண்டும் என்று கனவு கண்டான். வெறும் பகற் கனவு அல்ல. அவன் கண்டவை லட்சியக் கனவுகள். அவனுடைய லட்சியங்களெல்லாம் தவிடு பொடியாகும் நிலை அன்றைய தினம் விமானத்தில் ஏற்பட்டது. அவனே தவிடுபொடியாக இருந்தபோது அவன் லட்சியங்கள் எம்மாத்திரம்? இப்போது அவன் தப்பி விட்டான். அவன் லட்சியங்களும் உருக் குலையாமல் இருந்தன. தன் லட்சியங்களை எட்டிப் பிடிப்பதில் முன்னைவிட அதிக உறுதியுடன் இருந்தான் நடராஜன்.

அவனுடைய இந்த இரண்டாவது பயணம் எல்லா விதத்திலும் நிம்மதியாகக் கழிந்தது. ஆனால் விமலாவின் மன நிலை இதற்கு நேர் விரோதமாக இருந்தது. அவளுடைய மனம் அத்தானைப் பிரிந்திருக்க நேர்ந்ததால் துக்கத்தில் ஆழ்ந்திருந்து.

'பேதைப் பெண்ணே! நீ இப்போது முதற் கொண்டே ஏன் மனம் கலங்குகிறாய்? நீ உடல் சோர உள்ளம் நோக, துக்கக் கடலில் ஆழ்ந்து மௌனமாகக் கண்ணீர் விட்டு அழவேண்டிய காலம் வரும். அப்போது அழு. நன்றாக அழு. ஆனால் இப்போது உன் காதலன் உன்னிடம் அன்பைச் சொரிகிறான். உன் உள்ளத்தைக் கவர்ந்த அத்தான் உன் மீது உயிரையே வைத்திருக்கிறான். அப்படியிருக்க நீ ஏன் துக்கப்பட வேண்டும்? சந்தோஷமாக இருக்க வேண்டிய காலம் இது. இப்போதாவது சிரித்துக் கொண்டிரு. பின்னால் சிரிக்கவே முடியாது!'

## அத்தியாயம் 4
## கண்கள் சந்தித்தன!

நமது கதாநாயகன் நடராஜன் தன் இரண்டாவது பிரயாணத்தை எத்தவிதமான தடங்கலும் இன்றி முடிக்கும்படி விட்டு விட்டு, திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணி ஆற்றங் கரையில் உள்ள செண்பகபுரம் என்ற கிராமத்துக்குப் போவோம்.

கிராமத்தினுள் நுழைந்ததும் முதன் முதலாகக் காட்சி தருவது அம்மன் கோயில். வீதியைப் பார்த்து நின்று கொண்டு அதில் குடியிருந்த அனைவருக்கும் அருள் புரிந்து கொண்டிருக்கிறாள் அம்மன். நடு நாயகமான அந்த வீதிக்கு இரண்டு புறங்களிலும் மேலும் இரண்டு வீதிகள். கிராமத்தைத் தாண்டிச் சென்றால் தாமிரபரணி ஆறு துள்ளித் துள்ளித் திரியும் மான் போல் குதூகல நடை போட்டுச் சென்று கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆற்றின் இருபுறங்களிலும் தாழ்ந்த கிளைகளுடன் மரங்கள்.

அதன் தழைகள் ஆற்றுநீரைத் தொட்டுக் கொண்டு கொஞ்சி விளையாடுகின்றன.

ஆற்றங்கரையிலே செண்பக மரங்கள் ஏராளமாக வளர்ந்திருக்கின்றன. அவற்றில் பூத்திருக்கும் செண்பக மலர்கள் அந்தக் கிராமம் முழுவதுமே இனிய மணம் பரப்புகின்றன. பூத்துக் குலுங்கும் அந்த மலர்களைப் பார்க்கும்போது அந்தக் கிராமத்துக்குச் செண்பகபுரம் என்ற பெயர் எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது என்ற எண்ணம் எழுகிறது.

செண்பக மரங்களுக்கு இடையே சரசரவென்ற ஓசையுடன் ஒரு நாகம் நெளிந்து செல்கிறது. அது போல் இன்னும் எத்தனை எத்தனையோ. செண்பக வாசனைக்கு நாகங்கள் அடிமையாகி விடும் அல்லவா?

ஆற்றின் அக்கரையிலே ஒரு கப்பிச் சாலை. இரட்டை மாட்டு வண்டிகள் அடிக்கடி செல்வதால் இரு பக்கங்களிலும் பள்ளமாகவும் நடுவே மேடாகவும் அமைந்திருக்கிறது. அதன் வழியே ஒரு கிராமவாசி ஒரு கட்டை வண்டியை ஓட்டிக் கொண்டு வருகிறான். ஓட்டும்போதே தெம்மாங்கு பாடுகிறான்:

"மஞ்சள் அரைக்கையிலே
மதிலேறிப் பார்த்த மச்சான்
என்ன பொடி தூவுனீங்க
இழுத்தரைக்கக் கூடலையே!"





னுக்கு உதவி செய்ய எழுந்திருக்கிறான். கயிறுகளைப் பிடித்து 'ஆவ் ஆவ்' என்று மாடுகளை அழைக்கிறான். அவை அடங்கி விடுகின்றன.

''தப்பித்தேன் பிழைத்தேன்'' என்று சொல்லிக் கொண்டே கதாநாயகன் கீழே குதிக்கிறான். ''என்ன டைரக்டர் ஸார்! இந்தக் கூத்தெல்லாம் எப்போது முடியும்? என் உயிருக்கே ஆபத்து வரும் போல இருக்கே!'' என்கிறான்.

அந்த வண்டியையே கவனித்துக் கொண்டிருந்த நாம் அதற்கு முன்னால் சென்ற திறந்த காரைக் கவனிக்காமல் போய் விட்டோம். அந்தக் காரில் நாலைந்து பேர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நடுவே திரைப்படக் காமிராவுடன் ஒருவன் நிற்கிறான். அதற்குப் பக்கத்தில் இருந்த டைரக்டர் 'கட்' என்று சத்தம் போடுகிறார். கார் நிற்கிறது. பின்னால் வரும் கட்டை வண்டியை வண்டிக்காரன் நிறுத்த முயற்சி செய்கிறான். முடியவில்லை. மாடுகள் கன ஜோராக ஓடி வருகின்றன. ''ஐயோ, ஐயோ! இதை நிறுத்துங்கள்!'' என்று வண்டிக்காரன் கூச்சல் போடுகிறான். அப்போதுதான் அவன் நடிகன் என்று நாம் புரிந்து கொள்கிறோம். காரில் இருந்தவர்கள் சிரிக்கிறார்கள். வண்டிக்குப் பின்னால் காமிராவில் விழாமல் ஒளிந்து கொண்டிருந்த அசல் பட்டிக்காட்டான் ஒருவன் இப்போது நடிக

''ரொம்ப நல்லதாகப் போச்சு! தத்ரூபமாக இருக்கும். 'வெரி நாட்சுரல்' '' என்கிறார் டைரக்டர் காரிலிருந்து இறங்கியபடியே. ''திரைப்படக் கதையை வேண்டுமென்றால் 'டிராஜிடியா' மாற்றிக் கொள்கிறது!''

''ரொம்ப நன்றாக இருக்கிறது. நான் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கிறேன் என்றால் 'வெரி நாட்சுரல்' என்கிறீர்களே! 'நாட்சுரல்' தலையில் இடி விழ!'' என்று முணுமுணுக்கிறார் அந்த நடிகர்.

அதைக் கவனியாதது போல் டைரக்டர் படாதிபதியின் பக்கம் திரும்புகிறார். ''ஸார், 'ஹீரோ' பாடிய பாட்டு பொருத்தமில்லை ஸார்!'' என்கிறார்.

படாதிபதி சிறிது யோசித்து விட்டு, ''அப்படியானால் ஜாகைக்குப் போய் இன்னும் இரண்டு இந்தி ரிக்கார்டுகளைப் போட்டுப் பார்க்கலாமா?'' என்கிறார்.

''சேச்சே, நான் அதைப் பற்றிச் சொல்லவில்லை...''

''சரி, அப்படியானால் நேரடியாக மெக்ஸிகன் மியூஸிக்கையே போட்டுப் பார்த்துவிடலாம். நம்ப மியூஸிக் டைரக்டர் எங்கே? கொஞ்சம் கூப்பிடுங்கள்.''

''அடாடா! நான் சொல்வதையே புரிந்து கொள்ள வில்லையே? இவர் பாடும் மெட்டைப் பற்றி நான் சொல்ல வில்லை. அது ரொம்ப நன்றாக இருக்கிறது. அவர் பாடும் பாட்டின் பொருளைப் பற்றிச் சொல்கிறேன். பெண் பிள்ளை பாடுவது போல் அமைந்திருக்கிறதே!'' என்கிறார் டைரக்டர்.

''ஓ ஹோ ஹோ! அதைச் சொல்கிறீர்களா?'' என்கிறார் படாதிபதி.

டைரக்டருக்கு இவ்வளவு மூளை எப்படி வந்தது என்று வியப்பு அவருக்கு!

''அது வேண்டாம் ஸார்! வேறு ஒரு நாட்டுப் பாடல் தருகிறேன்!'' என்கிறார் மியூஸிக் டைரக்டர். சொல்லிவிட்டு,

''ஆலம் விழுது போலே
அந்தப் புள்ளே தலைமயிரு
தூக்கி முடிஞ்சிட்டாலோ
தூக்கணாங் கூடுபோலே....''

என்று பிரமாதமாகப் பாடுகிறார்.

''ஓ. கே! வெரிகுட்!'' என்கிறார் டைரக்டர். ''இந்த ஸீனுக்கு இந்தப் பாட்டையே ரிக்கார்டிங் பண்ணி விடலாம்'' என்கிறார்.

ஷூட்டிங் மறுபடியும் மும்முரமாக ஆரம்பமாகிறது.

• • •

**ப**ட்டணத்து வாலிபன் ஒருவன் கிராமத்துக்கு வருகிறான், அதிக உணவு உற்பத்தி செய்ய வேண்டும் என்ற பொதுநலஎண்ணத்தோடு. அவனுடைய மாமா அவனுக்கு விட்டுச் சென்ற நிலங்கள் அதற்குத் தூண்டுகோலாக அமைகின்றன. பட்டணத்து வாலிபனான தால் கிராமத்துக்கு வந்து ஏர் பிடிக்கவும், வண்டி ஓட்டவும், மாடு கறக்கவும் தெரியாமல் விழிக்கிறான். அவனுக்குக் கிராமியப் பெண் ஒருத்தி உதவி செய்கிறாள். காதல் வளருகிறது. இடையூறுகளும் வளருகின்றன. இறுதியில் வழக்கம்போல் காதலுக்கு வெற்றி!

இது திரைப்படக் கதை.

கதாநாயகனாக நடித்தவன் உண்மையிலேயே பட்டணத்து வாலிபன். ஆகவே அவன் நடிப்பு, டைரக்டர் சொன்னது போல் இயற்கையாகவே அமைந்தது. ஆனால் கதாநாயகியோ பட்டணத்து நவநாகரிக மங்கை. அவள் கிராமியப் பெண்ணாக நடிப்பது எப்படி?



வண்டி மாடுகள் முரண்டு செய்து இரண்டு பக்கங்களிலும் தலைக்கொன்றாக இழுத்துக் கொண்டு போகும். அப்போது மரத்தின் மீது மாங்காய் தின்று கொண்டிருந்த கதாநாயகி கீழே குதித்து மாடுகளை அடக்கிக் கதாநாயகனைக் காப்பாற்ற வேண்டும். கூடவே கண்களும் சந்திக்க வேண்டும். இது படத்தின் பிரதான கட்டம். பிரமாதமாக அமையவேண்டிய,அமையப் போகிற கட்டம் என்று டைரக்டர் தீர்மானித்திருந்தார்.

''மரத்தின் மேலிருந்து குதிப்பதா? நான் என்ன சினிமா ஸ்டாரா? அல்லது உங்க வீட்டுக் குரங்குக் குட்டியா?'' என்று கேட்டாள் அந்த நட்சத்திரம்.

கோபத்தில், ''இருக்கலாம்'' என்று சொல்லி விட்டார் டைரக்டர். பின்னர் அழுத்தி நாக்கைக் கடித்துக் கொண்டார். 'என்ன அசட்டுத்தனம் செய்து விட்டோம்! அவள் காதில் விழுந்திருக்கக் கூடாதே!' என்று எண்ணினார்.

ஆனால் அதுவா காதில் விழாமல் இருக்கும்? நல்லது எவ்வளவு சொன்னாலும் காதில் விழாவிட்டாலும் தவறாக ஏதாவது ஒரு வார்த்தை சொன்னால் காதில் விழுந்து விடுமே!

''என்ன சொன்னீர்கள்?''

''ஒன்றுமில்லை'' என்று மழுப்பினார் டைரக்டர். நட்சத்திரம் படாதிபதி பக்கம் திரும்பினாள். அவர் வேறு எங்கேயோ பார்ப்பது போல் முகத்தைத் திருப்பிக் கொண்டார். சண்டையில் புகுந்து கொண்டால் யாராவது ஒருவர் பக்கம் பேச வேண்டி வரும். மற்றவ

ரிடம் மனஸ்தாபம் ஏற்படும். அதற்கு இடம் கொடுக்க அவர் தயாராக இல்லை. கெட்டிக்காரர் அவர்!

அருகில் இருந்த தனது புத்தம் புதிய காரில் ஏறிக் கொண்டாள் நடிகை. கார் ஜாகைக்குப் பறந்தது. "சனியன்கள்! பட்டிக்காட்டுக்கு அழைத்து வந்து பிராணனை வாங்குகிறார்கள்" என்று முணுமுணுத்தாள் அந்த நட்சத்திரம்!

அனைவரும் கடையைக் கட்டிக் கொண்டு நடிகையைப் பின்தொடர்ந்தார்கள். அவளைச் சமாதானப்படுத்த எல்லோரும் முயன்றார்கள். உச்சாணிக் கிளையில் ஏறிக் கொண்ட வேதாளம் மெள்ள மெள்ள இறங்கி வந்தது!

* * *

"அக்கா! அக்கா! சினிமா எடுக்கப் போகிறார்களாம் அக்கா! நாம் போய்ப் பார்த்து விட்டு வருவோமா?" என்று கேட்டாள் சிறுமி சரஸ்வதி வீட்டுக்குள் நுழைந்தபடியே.

"ஆமாம்! அந்த ஜானகிராம் டாக்கீஸ்காரன் மறுபடியும் கொட்டகை போட்டு விட்டானாக்கும்!" என்று அலுத்துக் கொண்டாள் அவள் தாயார்.

"இல்லேம்மா! சினிமாப் போட்டுக் காட்டலே. சினிமாவே எடுக்கிறார்களாம்!" என்றாள் சரஸ்வதி அளவற்ற ஆச்சரியத்துடன்.

அவள் தமக்கை மல்லிகாவினால் தன் ஆவலைக் கட்டுப்படுத்த முடியவில்லை. "எங்கே? எங்கே எடுக்கிறார்கள்?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டாள்.



"ஆற்றங்கரைச் சாலையிலே அக்கா!" என்றாள் சரஸ்வதி.

இரண்டு பேரும் கிளம்பிவிட்டார்கள். பின்னாலிருந்து அவர்கள் தாயார் கமலம் கூப்பிட்டது அவர்கள் காதில் விழுந்தாகவே தெரியவில்லை. பட்டணங்களில் எடுக்கப்பட்ட திரைப்படங்கள் கிராமங்களிலே ஏராளமாகக் காட்டப்பட்டுப் பணம் திரட்டும் காலம். கல்வி அறிவு அதிகமில்லாத கிராமிய மக்கள் அதனைத் திறந்த வாய்மூடாது பார்த்துக் கொண்டிருப்பார்கள். அவை அனைத்தும் நடிப்பு; உண்மையல்ல என்று அவர்கள் நன்றாக உணர்வதில்லை. திரைப்படத்தில் சுகபோகங்களை அனுபவித்து இன்புற்று இருப்பவர்களைப் பார்க்கும்போது 'ஏன் நமக்கும் அந்த மாதிரியான நிலை ஏற்படக் கூடாது? நாம் மட்டும் ஏன் நாள் முழுவதும் உழைக்க வேண்டும்? அப்படி உழைத்த பின் ஏன் அரை வயிற்றுக்கு உண்ண வேண்டும்?' என்ற எண்ணங்கள் எழுவது இயற்கை. இப்படியெல்லாம் ஆகாசக் கோட்டைகள் கட்டியவர்களுக்குத் திரைப்படத்தைத் தங்கள் கிராமத்திலேயே தயாரிக்கிறார்கள் என்று தெரிந்ததும் ஆவல் கட்டுக்கடங்காமல் போய் விட்டது. கிராமவாசிகள் அனைவரும் தங்கள் தங்கள் காரியங்களை விட்டுவிட்டுச் சாலையின் இருமருங்கிலும் கூடி வேடிக்கை பார்த்தார்கள். அந்தக் கூட்டத்தின் முன்னணியில் மல்லிகா தன் தங்கை சரஸ்வதியுடன் நின்றாள்.

* * *

"ஷூட்!" என்றார் டைரக்டர். காமிரா 'விர்ர்ர்' என்று சுழன்றது. கதாநாயகன் ஓட்டிய வண்டியின் மாடுகள் மூலைக்கொன்றாக இழுத்தன. மரக் கிளையிலிருந்து கதாநாயகி குதித்துக் காலில் அடிபட்டுக் கொண்டாள்! ஷூட்டிங் ஒத்திப் போடப்பட்டது. அனைவரும் மறுபடியும் ஜாகைக்குத் திரும்பினார்கள்! இதையெல்லாம் பார்த்துக் கொண்டே இருந்த மல்லிகாவுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்தது. இந்த நாடகத்தைப்பார்த்துக்கொண்டிருந்த அவள் கண்கள் அடிக்கடி திரைப் படக் காமிராவுக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த சேகரை நோக்கின. 'களுக்' என்ற சிரிப்புச் சத்தம் கேட்டதும் சேகர் கோபமாகத் திரும்பிப் பார்த்தான். அழகே உருவாய் மல்லிகா நின்று கொண்டிருந்தாள். சிரித்தது அவள்தான் என்று தெரிந்ததும் கோபம் பறந்து போய் அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அவர் தன்னைக் கவனிக்கிறார், புன்னகை புரிகிறார் என்று தெரிந்ததும் மல்லிகாவுக்கு ஏனோ வெட்கம் வந்து விட்டது. தலையைக் கவிழ்ந்து கொண்டாள். அதுவரையில் அவளை நன்றாக ஏறிட்டுப் பார்த்து அந்த உருவத்தை மனத்திலே பதிய வைத்துக் கொண்ட அவனுக்கு நாணம் வந்து விட்டது. கார் புறப்பட்டுப் போகும்

சத்தம் கேட்கவே, அவள் சட்டென்று தலைநிமிர்ந்து பார்த்தாள்.

அதற்குள் கார் வெகு தூரம் போய் விட்டது. "இரண்டு வார்த்தைகள் பேசியிருக்கக் கூடாதா?" என்று எண்ணியது மல்லிகாவின் மனம். கூடவே 'இது என்ன பிரமை? அவர் யாரோ நான் யாரோ? முன்பின் ஒருவரை யொருவர் தெரியாது. என்னிடம் அவர் ஏன் பேச வேண்டும்?' என்றும் தோன்றியது. ஒரு நீண்ட பெருமூச்சுடன் சரஸ்வதியின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வீடு திரும்பினாள் மல்லிகா.

வீட்டுக்கு வந்ததும் தாயார் கமலத்தினிடம் தாங்கள் பார்த்த அதிசயங்களை யெல்லாம் இரண்டு புதல்விகளும் சொன்னார்கள். "ஆமாம், இங்கே வேலை வெட்டி ஒன்றும் இல்லை என்று அங்கு போய்ப் பல்லை இளித்துக் கொண்டு நின்றீர்களாக்கும்" என்றாள் கமலம்.

"தினந்தோறும் சதா வேலை செய்து கொண்டேதான் இருக்கிறேன். சிறிது நேரம் வேடிக்கை பார்த்து விட்டு வந்ததில் என்ன தவறு?" என்று கேட்டாள் மல்லிகா.

"அது என்னவோ. நல்லதுக்குத் தானே நான் சொல்கிறேன்! இந்தச் சினிமா இழவெல்லாம் நமக்கு எதற்கு?"

"நீ இப்படி சினிமாவை இழவு இழவு என்று சொல்லிக் கொண்டே இரு! நான் ஒரு நாளைக்கு அந்த சினிமாவிலேயே சேர்ந்து விடுகிறேன் பார்!"

"ஐயோ! போதுமே உன் பிதற்றல். நீ பெரிய ரதி! உன்னை சினிமாவில் சேர்த்துக் கொள்ளக் காத்துக் கொண்டு இருக்காளுக்கும்!"

"ஏன் சேர்த்துக் கொள்ளக்கூடாது? என் அழகுக்கு என்ன குறைச்சல்? இன்று ஒருத்தி நடித்தாளே, அவளைவிட நான் ஒன்றும் குறைந்து விடவில்லை!"

"ஆமாம், அம்மா! அக்காவின் அழகுக்கு எல்லா சினிமாவிலும் நடிக்கலாம். அப்புறம் நமக்கெல்லாம் கஷ்டமே இல்லை!" என்றாள் சரஸ்வதி.

"அசடு! நீ வேறு அக்காவோடு சேர்ந்து விட்டாயா? அப்படி ஒரேயடியாக வருகிற பணமெல்லாம் நமக்கு வேண்டாம். நாலு வீட்டில் உழைப்போம். கிடைக்கிற கூலியில் சந்தோஷமாக இருப்போம்!"

"சினிமாவில் நடித்தால் உழைக்காமலே பணம் வந்து விடுகிறதாக்கும்!" என்றாள் மல்லிகா.

"எனக்கு உங்களோடு வாதாட முடியாது! அசட்டுத்தனமாக உளறிக் கொண்டே இருக்காதே! ஆற்றங்கரைக்குப் போய்த் தண்ணீர் எடுத்து வா!" என்று கமலம் கோபமாக அதட்டினாள்.

தன் மகளுடைய பேச்சுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை கமலம். ஏதோ அசட்டுத்தனமாக உளறுகிறாள் என்று எண்ணிக் காரியங்களைக் கவனிக்கலானாள். ஆனால் மல்லிகா அப்படி எண்ணவில்லை. அவள் பேசியது அனைத்தும் உள்ளத்தின் ஆழத்திலிருந்து வெளி வந்தவை. இரவு பகலாக அவள் கண்டு வந்த கனவு அது. அது நினைவாக மாறும் காலமும் சீக்கிரமே வரும் என்ற அசட்டு நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது. இப்போது குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு ஆற்றங்கரைக்கு நடந்து சென்ற போதும் அந்தக் கனவுகள் மீண்டும் தோன்றின. மனம் வேறு எதையோ நினைத்துக் கொண்டிருக்க, கால்கள் மட்டும் அவளை ஆற்றங்கரைக்கு இழுத்துச் சென்றன.

அதே சமயத்தில் சேகர் புகைப்படக் காமிராவைத் தோளில் மாட்டிக் கொண்டு கிளம்பினான். கிராமியக் காட்சிகள் சிலவற்றைப் படம் எடுக்க விரும்பினான். சிறிது தூரம் நடந்து சென்றதும் தூரத்தில் ஒரு பெண் நடந்து செல்வதைக் கவனித்தான். ஷூட்டிங் நடந்தபோது 'களுக்'கென்று சிரித்துத் தன் கவனத்தைக் கவர்ந்த அதே பெண் தான் இவளும் என்று தோன்றவே தன் நடையைத் துரிதப்படுத்தினான்.

தன்னைப் பின் தொடர்ந்து வந்த சேகரை மல்லிகா கவனிக்கவில்லை. தூக்கத்திலேயே நடந்து செல்பவளைப் போல் காணப்பட்டாள். அவளுடைய உள்ளம் தன் எதிர்கால வாழ்வைப் பற்றிய மனக்கோட்டைகளைக் கட்டுவதில் ஈடுபட்டிருந்தது. அவளைப் படம் எடுக்கத் தன் காமிராவைச் சரி செய்து கொண்டான் சேகர்.

இடுப்பிலிருந்த குடத்தை மல்லிகாவின் கைகள் இறக்கித் தண்ணீரை மொண்டன. மறுபடியும் குடத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு திரும்பினாள் மல்லிகா.

அங்கு சேகர் கையில் புகைப்படக் காமிராவுடன் நின்றான். 'கிளிக்' என்ற சத்தம் காமிராவிலிருந்து எழுந்தது. மல்லிகா தன் கரிய விழிகளால் அவனை நிமிர்ந்து நோக்கினாள். அவர்களுடைய கண்கள் அன்றைய தினம் இரண்டாவது முறையாகச் சந்தித்தன.

இருவரது பார்வையிலும் ஒரே ஒரு வித்தியாசம். மல்லிகாவின் பார்வையில் களங்கம் இல்லை. சேகருடைய பார்வையில் களங்கம் இருந்தது! (தொடரும்)



கலியாண விசேஷ
வெகுமதிகளுக்கு வேண்டிய
உயர்ந்த பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான இடம்

# ராம விலாஸ்

பூந்தமல்லி ஹைரோட் :: மதராஸ் - 8
(கெங்குரெட்டி ரோடு சந்திப்பு, தாஜ்பிரகாஷ் அருகில்)





★

உயர்ந்த பட்டுப் புடவைகள்
தயாரிப்பாளர்கள் & விற்பனையாளர்கள்

**RAMA VILAS**
**SPECIALISTS IN ORIENT AND MODERN DESIGNS**
**IN KOLLEGAL SILK SAREES**




# ரெமி அளிக்கும்
# புதிய சிறந்த சோப்!

குளிக்கும்பொழுதும், குளித்த பின்னரும் ரம்மியமான ஒரு புத்துணர்ச்சியை நீடித்தநேரம் அனுபவிக்க, இன்றே 'ரெமி' ஹெல்த் ஜாய் சோப்பை கேட்டு வாங்குங்கள்.

**ஹெல்த் ஜாய்**
**டாய்லெட் சோப்**

மற்ற 'ரெமி' தயாரிப்புகள் : ஹேர் ஆயில், ஸ்னோ, பவுடர் & ஊதுபத்திகள்

AVRA-463

ரேடியோ ஸிலோன் :—41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை




# குமரி முத்து

சேந்தூர் கூத்தன்

## 2. வீராங்கன் எங்கே ?

"வீராங்கா! எத்தனை நல்லவர்களானுலும் அவர்களுக்கு எதிரிகள் இருக்கத்தான் செய்கிருர்கள். பார்க்கப் போனுல் நல்லவர்களுக்குத்தான் அதிகமாக எதிரிகள் இருக்கிருர்கள். நம் அரசருக்கு மட்டும் எப்படி விலக்காக இருக்க முடியும்? ஆனுல் நம் அரசருக்கு அன்னிய நாட்டிலிருந்து எதிரிகள் வந்து விட வில்லை. இங்கு உள்ளவர்களாலேயே, அதுவும் அரசரின் தாயாதிகளாலேயேதான் இன்று இந்த ஆபத்து நேர்ந்தது...."

"அது யார் தாத்தா தாயாதிகள் என்பது ?" என்ருன் வீராங்கன்.

"நமது அரசரின் ஒன்றுவிட்ட பாட்டனுர் வம்சத்தைச் சேர்ந்தவர்கள்தான். தங்களைத் தாயாதிகள் என்று கூறிக் கொண்டு அரசைக் கைப்பற்றச் சூழ்ச்சி செய்கிருர்கள். அதனுல்தான் குழந்தை குட்டி ஒன்றும் இல்லாத அரசரைச் சீக்கிரம் தீர்த்துக் கட்ட முயற்சி செய்கிருர்கள்."

"இது ;என்ன அநியாயம் ? அரசருக்குத் தான் குழந்தை குட்டி ஒன்றும் இல்லையே. அவர் இறந்த பிறகு தாயாதிகளுக்குத் தானே பட்டம் கிடைக்கும் ?"

"அப்படித்தான் சில நாட்களுக்கு முன்பு வரையில் எல்லோரும் எண்ணி இருந்தார்கள். ஆனுல் அரசருக்கு மட்டும் அதுபோன்ற எண்ணமே இருக்கவில்லை. அதற்கும் தகுந்த காரணம் உண்டு. தாயாதிகள் என்று சொல்லிக் கொள்பவர்களில் ஒருவர் கூடப்பட்டத்துக்கு லாயக்கு இல்லாதவர்கள். ஒருவருக்காவது சிறந்த அறிவும் நிறைந்த வீரமும் கிடையாது. இப்படிப்பட்டவர்களிடம் ஆட்சியை ஒப்புவித்தால் அவ்வளவுதான்; நாட்டை அன்னியர் கைப்பற்றி விடுவர். எத்தனையோ ஆண்டுகளாக நீதி தவருது நிலை பெற்று வந்த கபாடபுரத்தின் ஆட்சி நாலு நாட்களில் நாசமாகிப் போய்விடும். அதற்காகத்தான் நம் அரசர், அவர்களிடம்

ஆட்சியை ஒப்படைக்க விரும்பவில்லை.'' அதோடு தாத்தாவும் பேரனும் பேச்சை முடித்துக் கொண்டார்கள். அதன் பிறகு வீராங்கனின் விருப்பத்தின் பேரில் சில நாட்கள் கபாடபுரத்திலேயே தங்கி ஊரைச் சுற்றிப் பார்ப்பது என்று தீர்மானமாயிற்று.

ஏழெட்டு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் காலை வீராங்கனும் தாத்தாவும் ஊரைச் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள். ஊர் களை இழந்து காணப்பட்டது. அவர்கள் வந்த அன்று இருந்த கலகலப்பில் கால் வாசிகூட இன்று இல்லை. எல்லோருடைய முகத்திலும் சோகமும் ஒருவித பீதியும் கலந்து காணப்பட்டன. அவர்களுடைய முகத்தைப் பார்க்கும்பொழுது, 'எங்கள் அரசர் பிழைத்துக் கொள்வாரா ?' என்று கேட்பது போல் இருந்தது.

இவற்றைப் பார்த்துக் கொண்டே தாத்தாவும் பேரனும் வந்து கொண்டிருக்கும் பொழுது தூரத்தில் 'தம தம' வென்று பறை அறையும் ஓசை கேட்டது. அந்த ஓசை வீராங்கனின் பிஞ்சு உள்ளத்தில் ஒரு விதக் கிளர்ச்சியை உண்டாக்கியது.

சிறிது நேரத்தில் 'தம தம' வென்ற பறை அறையும் ஓசை நின்றது. பிறகு செய்தி அறிவிக்கும் வள்ளுவனின் கம்பீரமான குரல் எழுந்தது. தாத்தாவும் பேரனும் காது கொடுத்துக் கேட்டார்கள்.

"இதனால் கபாடபுரத்தின் நல்லாட்சியில் இருக்கும் குடி மக்கள் யாவருக்கும் தெரிவிப்பது யாதெனில், பத்தாயிரம் ஆண்டுகளாகப் புகழ் பெற்று வரும் பாண்டிய குலத்தில் உதித்தவரும், வீராதி வீரரும், மன்னர்களுக் கெல்லாம் மன்னருமான நம் அன்புக்குரிய அரசர் மரணப் படுக்கையில் கிடக்கிறார். எதிரிகளால் அவர்மேல் எறியப்பட்ட அம்பு சாதாரண அம்பு அல்ல; நஞ்சு தோய்ந்த அம்பு. நாளுக்கு நாள் அரசரின் நிலை கவலைக்கிடமாக இருக்கிறது. அவர் குணமாகி உயிர்பெற வேண்டுமானால் இனி ஒரே ஒரு வழிதான் இருக்கிறது என்று வைத்தியர்கள் எல்லோரும் ஏகமனதாகக் கூறி விட்டார்கள். அதாவது இங்கிருந்து நூறு காதத்துக்குத் தெற்கே 'குமரிக் கடல்' என்று ஒரு கடல் இருப்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். அந்த ஆழ்கடலில் கொடிய மீன்களும் பயங்கரமான பிராணிகளும் வசித்து வருகின்றன. அங்கே நீருக்குள் ஒரு மலை இருக்கிறதாம். அந்த மலையில் இருக்கும் பெரிய குகையில் வெறும் முத்துச் சிப்பிகளே வாழ்ந்து வருகின்றனவாம். அந்தச் சிப்பிகள் வெகு காலமாக ஒரு பெரிய முத்தைப் பாதுகாத்து வருகின்றனவாம். அந்த முத்து ஒன்றுக்குத்தான் நம் அரசரின் உடலில் பாய்ந்த நஞ்சை முறிக்கும் சக்தி உண்டாம். ஆதலின் குமரிக் கடலில் இருக்கும் அந்தக் குமரி முத்தை உண்மையான அரச விசுவாசியாகிய நீங்கள் எடுத்து வரப் புறப்படுங்கள். எப்படியும் வெற்றியோடு வெகு சீக்கிரம் திரும்பி வாருங்கள். அப்படி முத்தோடு திரும்புபவர்களுக்கு அற்புதப் பரிசு ஒன்று காத்திருக்கிறது.'' 'தம...தம... தம...' என்று முழங்கினன்.

வீராங்கனின் உடலில் ஒரு புதிய உற்சாகம் உண்டாகியது. 'தம தம' வென்ற பறை ஓசை அவனுக்கு வீர வெறியை ஊட்டி அவன் நரம்புகளுக்கு முறுக்கேற்றியது. தாத்தாவிடம் ஏதோ சொல்ல முயன்றான். ஆனால் வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வெளிவரவில்லை.

தம் பேரனின் திடீர் மாற்றத்தைக் கண்டு அதிசயித்த தாத்தா, "ஏன் வீராங்கா! என்ன வேண்டும்? தாராளமாகக் கேளேன்'' என்றார்.

அதற்கு, "ஒன்றுமில்லை, தாத்தா! நான் போய் அந்தக் குமரி முத்தைக் கொண்டு வரலாமா என்று நினைக்கிறேன்'' என்றான். அவன் பேச்சில் உறுதி தொனித்தது.

தம் பேரனின் பேச்சைக் கேட்ட தாத்தா அவன் வீரத்தை மனத்துக்குள்ளேயே மெச்சிக் கொண்டார். என்றாலும், உயி



ருக்கே உலை வைக்கும் பயங்கரக் காரியத்தில் அவனை ஈடுபடுத்த அவர் துளியும் விரும்பவில்லை. எனவே, கடகட வென்று வாய் விட்டுச் சிரித்துவிட்டு, "வீராங்கா! நீ பெயருக்கேற்ப வீரனாகத்தான் இருக்கிறாய்! ஆனால் உன்னுடைய வயதுக்கு இதெல்லாம் மிக மிகக் கடினமான காரியம். விரலுக்கேற்ற மோதிரம்தான் அணிய வேண்டும். பெரியதாக அணிந்தால் அதனால், நமக்குச் சேதம்தான் ஏற்படும். அந்த முத்தை எடுத்து வருவதில் இருக்கும் அபாயங்களையெல்லாம் அறிந்தால் இவ்வாறு நீ சொல்லமாட்டாய்" என்று அன்போடு கூறினார்.

"அப்படி என்னதான் அபாயம் இருக்கிறது? சொல்லுங்களேன்" என்று சட்டென்று கேட்டான் வீராங்கன்.

"ஆபத்துத்தானே! அதைக் கேட்டவுடன் நீயே போகவில்லை என்று சொல்லிவிடுவாய். அவ்வளவு அபாயங்கள் வழியில் இருக்கின்றன. இதற்கு முன்பு எத்தனையோ பேர்கள் இந்த முத்தை எடுத்துவர முயன்றதாகக் கேள்வி. ஆனால் அவர்களில் ஒருவர் கூட உயிரோடு திரும்ப வில்லை. குமரிக் கடல் என்றாலே எல்லோருக்கும் குலை நடுக்கம் எடுத்துவிடும். அங்கே அவ்வளவு புயலும் சுழலும் உண்டு. அதைத் தவிர பெரிய திமிங்கிலங்களும், சுறா மீன்களும், கொடிய கடற் சிலந்திகளும், எரி பூச்சிகளும் மிகுந்த அளவில் வசிக்கின்றன. இவற்றையெல்லாம் கடந்து நீருக்குள் இருக்கும் மலைக் குகைக்குச் சென்று முத்தை எடுத்துக் கொண்டு திரும்புவதென்பது முடிகிற காரியமா? சொல்லு, நீயே சொல்லு!"

வீராங்கன் ஏதும் பதில் சொல்லவில்லை. அவன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி இருந்தான். தாத்தாவும் ஒன்றும் பேசவில்லை.

அன்று இரவு படுக்கப் போகும் பொழுது தாத்தா கூறினார்: "வீராங்கா! சீக்கிரம் தூங்கு. காலையில் பொழுது புலர்வதற்கு முன்பே எழுந்து நாம் கோட்டையைத் தாண்டி நம் ஊரை நோக்கிப் போய்க் கொண்டிருக்க வேண்டும்."

வீராங்கன் 'சரி' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்து விட்டுப் படுக்கையில் சாய்ந்தான்.

முன்னேரத்திலேயே தூங்கிப் போன தாத்தா பொழுது விடிய ஒரு நாழிகைப் பொழுது இருக்கும்பொழுது கண்விழித்து எழுந்தார். கண்ணைக் கசக்கிக் கொண்டு,



தம் பக்கத்தில் படுத்திருந்த வீராங்கனைத் தட்டி எழுப்பக் கையைக் கொண்டு போனார். என்ன ஆச்சரியம்! வீராங்கன் படுத்திருந்த இடம் காலியாக இருந்தது.

தாத்தா பதைபதைத்துப் போய் விட்டார். பக்கத்தில் படுத்த வீராங்கன் எங்கே போயிருப்பான் என்று அவருக்குத் தெரியவில்லை. விடுதி முழுவதும் தேடினார். அங்கே அவர் நினைத்தது போலத்தான் இருந்தது. வீராங்கன் ஏறி வந்த குதிரை காணப்படவில்லை.

தாத்தாவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அருமைப் பேரனை இப்படி எதிர்பாராத நிலையில் இழக்க நேர்ந்தால் யாருக்குத்தான் துக்கம் ஏற்படாது? 'பயல் எங்கு போயிருப்பான்?' என்று அவர் தமக்குத்தாமே கேட்டுக் கொண்டார்.

சட்டென்று அவருக்கு ஒரு யோசனை உதயமாயிற்று. உடனே தம் குதிரையின் மீதுதாவி உட்கார்ந்தார். குதிரை கோட்டை வாசலை நோக்கிப் பறந்தது. (தொடரும்)

# உங்கள் வருங்கால நக்ஷத்திர பலன்கள்

## உங்கள் ஜோதிட புத்தகக் குறிப்பை
# இலவசமாகப் பெறுங்கள்!

பிரபல ஜோதிட பண்டிதர் ஸோடியக் அவர்களின் 1958-ம் வருஷத்திற்குரிய ராசி பலன்கள் இதில் உள்ளன. உங்கள் வருங்கால ஜன்ம நட்சத்திர பலன்கள், எச்சரிக்கைகள், அதிர்ஷ்ட எண்கள் மற்றும் அதிர்ஷ்ட வர்ணங்களைப்பற்றி படித்து அறியுங்கள்.

follow your lucky star

free
ASTROLOGICAL
FORECASTS
FOR
BY "ZODIAC".

This folder contains a reading of YOUR future against the signs of the ZODIAC by the well-known Indian Astrologer.

உங்கள்
இலவச பிரதிக்கு
உங்கள் நண்பரான




**கால்டெக்ஸ்** வியாபாரியிடம் கேளுங்கள்

# அதிசய வரன்

“வரதட்சிணைக் கொடுமையிலிருந்து விடுபட, பிஜ்லிகோஷ் என்ற இளம் பெண் ஹௌரா பாலத்திலிருந்து ஆற்றில் குதித்தாள்” என்ற பத்திரிகைச் செய்தி ஸ்ரீ வித்யா உயர்தரப் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியர் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி அய்யரைத் திடுக்கிடச் செய்யவில்லை. எதையும் தர்க்கரீதியில் ஆராயும் அவருக்கு, பாரத புண்ணிய பூமியில் ஆயிரம் ஆயிரம் பெண்கள் தற்கொலை செய்து கொள்ளாமல் இருப்பதுதான் ஆச்சரியமாக இருந்தது.

வரதட்சிணையை முதன் முதலாகக் கண்டு பிடித்து அமுலுக்குக் கொண்டு வந்த மகா பாவி ஏழேழு தலைமுறையாக ரௌரவாதி நரகங்களில் கிடந்து உழன்று கொண்டிருப்பான் என்பது அவருடைய தெளிவான அபிப்பிராயம். அவனுடைய தலையின்மேல் பெரிய ரம்பம் ஒன்றை வைத்துப் பலகை அறுப்பது போல அறுக்க வேண்டும். சாத்தியப்படுமானால் தாம் ஒரு பக்கம் பிடித்துக் கொண்டு கை கொடுத்து உதவவும் தயார் என்று மானசீகமாக யமபடர்களுக்கு ஆலோசனை கூறிக் கொண்டிருந்தார். அவ்வளவு தூரம் அவர் மனம் சலித்துப் போயிருந்தது.

குளித்தலை வக்கீல் கோபாலசாமி அய்யர் பிள்ளைக்கு முதல் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்தபோதே வரதட்சிணைக் கொடுமையைப் பிரத்தியட்சமாக உணர ஆரம்பித்து விட்டார் தட்சிணாமூர்த்தி அய்யர். மேஜையின்மேல் ஓங்கி ஓங்கிக் குத்திப் பேசுவதற்கு இவ்வளவு, நீதிபதியைப் பார்த்துப் புன்சிரிப்பு சிரித்து அவருடைய தாட்சிண்யத்தைத் தம் கட்சிக்குச் சாதகமாகத் திருப்புவதற்கு இத்தனை, எதிர்க் கட்சிக்காரனைக் குறுக்கு விசாரணை செய்து மூர்ச்சை போட்டு விழும்படி செய்வதற்கு இவ்வளவு—என்று தம் கட்சிக்காரர்களிடம் பணம் வாங்கிப் பழக்கப்பட்ட கோபாலசாமி அய்யருக்குச் சம்பந்தியைச் சின்ன விஷயங்களுக்குக் கூட நச்சரித்து, பேசிய பணத்துக்கு மேல் அதிகமாகக் கேட்டு வாங்குவதில் சங்கோசம் ஏற்படவில்லை.

இரண்டாவது சம்பந்தி இன்ஜினியர் வாஞ்சிநாத அய்யர் ஒன்றிலும் பட்டுக் கொள்ளாதவர்போலப் பரமசாதுவாக இருந்தார் என்றால் அவருடைய தர்ம பத்தினி கல்யாணப் பெண்ணுக்கு வைர முகப்பு இழைத்த ஒட்டியாணமும், வைர மாட்டல்களும் போட்டுத்தான் ஆக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்துக் காரியத்தைச் சாதித்துக் கொண்டு விட்டாள்.

இந்த இரண்டு கல்யாணங்களிலும் தட்சிணாமூர்த்தி அய்யருக்கு இருந்த கொஞ்சநஞ்சம் பூஞ்சிதியும் கரைந்துவிட்டது. இரண்டு இடங்களும் அவருடைய அந்தஸ்துக்கு மேம்பட்ட அந்தஸ்துள்ள குடும்பங்கள். மூன்றாவது பெண்ணை ஏழைக் குடும்பத்திலே பிறந்த சூடிகையான பையனைத் தேடிக் குறைந்த செலவில் கல்யாணம் செய்து கொடுத்தார். ஆனால் பிறகுதான் ஒரே தடவையில் பணம் வாங்கிய முதல் இரண்டு சம்பந்திகள் எவ்வளவோ நல்லவர்கள் என்று தோன்றும்படியான காரியம் நடந்தது. வைத்தியக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த மூன்றாவது மாப்பிள்ளை மாமனாரிடமிருந்து பணம் வாங்கும் பொறுப்பைத் தன் பெற்றோரிடம் விட்டுவிடாமல் தானே மேற் கொண்டான். அவனுடைய செலவுக்குப் பணம் கொடுத்துக் கொடுத்துக் கணக்குப் போட்டதில் குறுக்கு வழியின் தவறை அவர் உணர்ந்தார். அவர் பணம் கொடுக்காவிட்டால் படிப்பு நின்று போகும். நிறுத்தவும் முடியாமல், தொடர்ந்து கொடுக்கவும் மனம் இல்லாமல் தட்சிணாமூர்த்தி அய்யர் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தார். இப்போது அவனும் டாக்டராகி நல்ல நிலைக்கு வந்துவிட்டான்.

மூன்று பெண்களுக்குப் பிறகு நான்காவது சந்ததி பையன். ‘போகிறது. மூச்சுவிடச் சிறிது அவகாசம் கொடுத்தானே, புண்ணியவதி’ என்று தம் மனைவியிடம் சாலப் பரிந்து நன்றி பாராட்டினார் தட்சிணாமூர்த்தி அய்யர். பையன் ஜயராமன் பெங்களூர் விஞ்ஞானக் கூடத்தில் பயிற்சியடைந்து கொண்டிருந்தான். காலம்தான் எவ்வளவு வேகமாக ஓடுகிறது? அடுத்த பெண் காந்திமதி இப்பொழுது விவாக வயதைத் தாண்டி விட்டாள். வயது பத்தொன்பது.

*

“ஆல்பர்ட்! இந்தக் காரியம் உன்னால் முடியாதா? நீ செய், இந்தக் கடன் பத்திரத்தைக் கிழித்து உன்னிடம் இனாமாய்க் கொடுத்து விடுகிறேன்” என்று சொன்னார் ஸ்ரீ வித்யா ஹைஸ்கூல் உதவித் தலைமை ஆசிரியர் ஹரிகிருஷ்ண சர்மா. பள்ளிக்கூடக் குமாஸ்தா ஆல்பர்ட் நுனி உதட்டைக் கடித்துக் கொண்டு ஜன்னல் வழியே மாடியின் வெளிப்புறத் தாழ்வாரத்தைப் பார்த்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்திருந்தான். ஒரு வேலைக்காரி அரிசி புடைத்துக் கொண்டிருந்தாள். நாற்பது வயதுக்கு ஒன்றிரண்டு கூட மதிக்கத் தகுந்த வயதுடைய ஒரு விதவை அம்மாள் கொடியில் காய்ந்திருந்த துணிகளை எடுத்து மடித்து வைத்துக் கொண்டிருந்தாள். மாடியின் கைப்பிடிச் சுவரின் மேல் எங்கிருந்தோ கொண்டு வந்த ஒரு கறி வடகத்

தைக் கால்களில் பற்றிக் கொத்திக் கொத்தி ஒரு காக்கை தின்று கொண்டிருந்தது. குருட்டு வெய்யில் வேறு மழை வரப் போவதை அறிவித்துக் கொண்டிருந்தது.

ஹரிகிருஷ்ண சர்மா அவனுடைய கவனத்தை விஷயத்துக்குத் திருப்பினார். "என்ன ஆல்பர்ட், சாத்தியமா?" என்று கேட்டார் மூக்குக் கண்ணாடியைக் கழற்றித் துடைத்துக் கொண்டே.

"எப்படி ஸார் ஒட்டியிருக்கிற கவரி லிருந்து......"

"உஸ்! நீ லாபரடரிக்குக் கவரை எடுத்து வா. பிரித்த கவடு தெரியாமல் பதினைந்தே நிமிஷத்திலே ஒட்டி உன் கையில் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்."

"தலைமை ஆசிரியருக்குத் தெரிந்து விட்டால்?" என்று பயந்தான் ஆல்பர்ட்.

"உம்! அவர் கிடக்கிறாரடா, வேலையைப் பார். அவராலே உன்னை என்ன செய்துவிட முடியும்? பள்ளி நிர்வாகக் கமிட்டி சேர்மன் பின்னேக்காகத்தானேடா கேட்கிறேன்."

"ஆகட்டும், ஸார்!"

"ஆகட்டும் என்று தலையை யாட்டிவிட்டுப் போவதிலே பிரயோசனம் இல்லை. நாளைக்கு இரண்டு மணிக்கு இடை வேளைக்குப் பிறகு உன்னை எதிர் பார்த்துக்கொண்டு லாபரடரியில் இருப்பேன். அப்போது தலைமை ஆசிரியருக்கு வகுப்பு உண்டு. என்ன, தெரிந்ததா?"

ஆல்பர்ட் போய்விட்டான். 'பணத்தை வீசி யெறிந்தால் நடக்காதது உண்டா?' என்று இறுமாந்திருந்தார் ஹரிகிருஷ்ண சர்மா. ஆல்பர்ட் போனது தெரிந்ததும் அவருடைய மனைவி ஒரு தட்டில் இரண்டு அடைகளையும் டபரா தம்ளரில் காப்பியையும் கொண்டு வந்து அவர் உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு எதிரிலிருந்த மேஜையின் மேல் வைத்தாள். "நான்சென்ஸ்! இதெல்லாம் என்ன டிபன்? வேண்டாம். எடுத்துக் கொண்டு போ!" என்று கத்தி விட்டுக் காப்பியை மட்டும் சாப்பிட்டார்.

"இன்று ஏகாதசி! பாகீரதிக்குப் பலகாரம் மத்தியானம்" என்று அவள் பதில் சொன்னதும் 'ப்ஸு' என்று அவர் சூள் கொட்டியதைக் கேட்டு விட்டு அவள் தட்டையும் காலி டபரா தம்ளர்களையும் எடுத்துக் கொண்டு போனாள்.

வரதட்சிணையின் கொடுமைக்குப் பிரத்யட்சப் பிரமாணமாக விளங்குபவள் ஹரிகிருஷ்ண சர்மாவின் சகோதரி பாகீரதி. அனிபக்த குடும்பம் ஒன்றில் ஒரு கிழவருக்கு வாழ்க்கைப்பட்டு ஒரு வயதுக் குழந்தையுடனும், ஒரு குடும்பமே காலட்சேபம் செய்யும்படியான அளவுக்கு ஜீவனாம்சத் துடனும் அல்பாயுளிலேயே விதவையாகிப் பிறந்த வீடு வந்து சேர்ந்திருந்தாள். ஏழைக் குடும்பம் வரதட்சிணை கொடுக்க வழியில்லாமல் ஒரு பெண்ணைப் பலி கொடுத்து இப்பொழுது நிமிர்ந்து விட்டது. ஹரிகிருஷ்ண சர்மா தம்முடைய ஒரே புதல்வன் ஸ்ரீதரனுக்குப் பாகீரதியின் பெண் விசாலாட்சியைக் கல்யாணம் செய்து வைத்து விடலாமென்று நினைத்துக் கொண்டிருந்தார். ஆனால் இப்போது அவருடைய மனம் மாறி விட்டது!

ஸ்ரீதரன் ஐ. ஏ. எஸ். பாஸ் செய்துவிட்டு சப்-கலெக்டர் ஆகிவிட்டான். விசாலாட்சியும் லட்சணமான பெண். குடும்ப நிர்வாகத்தில் சமர்த்து என்று பெயர் வாங்கிவிட்டாள். அதற்காக? ஸ்ரீதரனுக்குப் பெண் கொடுக்க எத்தனையோ பெரிய அரசாங்க அதிகாரிகளும், வியாபாரத் துறையில் பிரமுகர்களும் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள். விசாலாட்சிக்கு என்ன, ஒரு மாப்பிள்ளை கிடைக்காமலா இருந்துவிடும்? ஹரிகிருஷ்ண சர்மாவின் மனத்தில் பல எண்ணங்கள் வட்டமிட்டன.

பையன் பதவியிலிருக்கும்போது அவர் ஓர் உபாத்தியாயராக மட்டுமா இருப்பது? குறைந்த பட்சம் தலைமையாசிரியராகவாவது ஆகிவிட வேண்டாமா? ஸ்ரீவித்யா பள்ளிக் கூடத்தின் தலைமை ஆசிரியர் பதவியும்தான் என்ன சாமான்யமானதா? சென்ற வருஷம் வைர விழாவுக்குத் தலைமை வகித்த உயர்நீதி மன்ற நீதிபதி ஜனார்த்தனராவ் ஸ்ரீவித்யா ஹைஸ்கூலை எவ்வளவு புகழ்ந்து பேசினார்? இங்கிலாந்தின் புகழ்பெற்ற ரக்பி பள்ளியின் தலைமை ஆசிரியர் அர்னால்ட் மாதிரி புகழ் அடைந்திருக்கிறார் தக்ஷிணாமூர்த்தி அய்யர் என்றல்லவா சொன்னார்?

யார் பரிசுத்தமான உள்ளத்தோடு இருக்க வேண்டுமோ, யாரிடம் இளம் மாணவர்களின் குணத்தைப் புனிதமாகப் பக்குவப் படுத்தி அவர்களை எதிர்காலத்தின் சிறந்த பிரஜைகளாகச் செய்யும் பொறுப்பு ஒப் படைக்கப்பட்டிருக்கிறதோ, அப்படிப்பட்ட உபாத்தியாயரின் மனத்தில் அசூயை குடி கொண்டு விட்டது. எப்படியாவது தட்சிணாமூர்த்தி அய்யரைப் பதவியிலிருந்து விலக்கித் தாம் தலைமையாசிரியராகி விடவேண்டும் என்று திட்டமிட்டார் சர்மா அவர்கள்.

அவர் பலவிதங்களிலும் பணம் திரட்டியிருந்தார். அதிக வட்டிக்குக் கடன் கொடுத்து



லேவாதேவி செய்து கொண்டிருந்தார். கச்சேரிகளில் ஏலம் என்றால் ஸ்தாவரமோ ஜங்கமமோ துணிந்து கேட்டு வாங்குவார். மளமளவென்று அவர் கை ஏறிவிட்டது.

பள்ளிக்கூட நிர்வாகக் கமிட்டித் தலைவர் வெகுருநாத பிள்ளையின் மகன் சூரியமூர்த்தி கணக்கிலே மந்தமாயிருந்தான். தாமாக வலுவிலே அந்தப் பையனுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்க ஒப்புக் கொண்டார் சர்மா. பள்ளி இறுதி வகுப்புக்குத் தலைமை ஆசிரியரே கணிதம் போதித்துக் கொண்டிருந்தார். தேர்வுப் பரீட்சைக்கு அவரே வினாத்தாள் குறித்தார். தேர்வுப் பரீட்சை வினாத்தாள்கள் வெளியூரிலேயே அச்சிட்டு வந்தன. எந்த அச்சக்கூடத்தில் அவை அச்சிடப்பட்டன என்பது தலைமை ஆசிரியர் ஒருவருக்கு மட்டுமே தெரியும். அவ்வளவு ரகசியம். தேர்வில் தலைமையாசிரியர் கொஞ்சம் கூடத் தாட்சிண்யம் காட்டமாட்டார். அவரிடம் இது விஷயமான சிபாரிசு எதுவும் செல்லாது என்பது அவருக்குத் தெரியும்.

ஆகவே எப்படியாவது வினாத்தாளைப் பெற்றுச் சூரியமூர்த்தியைத் தேர்வுப்பரீட்சையைத் தாண்டிவிடச் செய்ய வேண்டும் என்று ஹரிகிருஷ்ண சர்மா சூழ்ச்சி செய்து கொண்டிருந்தார். ஆல்பர்ட் அகப்பட்டான். பல மாதங்களாக நூறு ரூபாய் கடன் கேட்டுக் கொண்டிருந்த அவனை வீட்டுக்கு வரவழைத்துப் பணம் கொடுத்து நோட்டு எழுதி வாங்கிக் கொண்டார். அப்பாவியான குமாஸ்தாவுக்குத் துர்ப்போதனை செய்து அவன் தலைமை ஆசிரியரின் பீரோவுக்கு மறுசாவி போட்டுத் திறந்து இருடும் நிலைக்குக் கொண்டு வந்து விட்டார் சர்மா. தூயவனான கைகேயி மந்தரையின் சில வார்த்தைகளால் தீயவளாகி விடவில்லையா? ஒரு மகாராணியே பணிப் பெண்ணொருத்தியால் மனமாற்றம் அடைந்து விட்டாளே! படித்தஆசிரியர், ஓர் ஏழைக் குமாஸ்தாவைத் தம் சொற்படி கேட்கச் செய்வதில் வியப்பு என்ன?

விஞ்ஞான சாலையில் நீராவியில் காண்பித்துப் பிரித்து, வினாத்தாளைப் பார்த்துக்கொண்டு பழையபடியே உயர்ந்த ரகப் பசையால் ஒட்டி ஹரிகிருஷ்ண சர்மா ஆல்பர்ட்டினிடம் கொடுத்துவிட்டார்.

வினாத்தாள்கள் அடங்கிய உறையை முன்னிருந்த இடத்திலே கொண்டுபோய் வைத்துப் பூட்டும்வரை ஆல்பர்ட்டின் இதயம் பட பட வென்று அடித்துக் கொண்டது. தன்னுடைய இடத்துக்குப் போய் உட்கார்ந்த பின்தான், பெருமூச்சுவிட்டு 'இனிமேல் பயம் இல்லை. தலைமை ஆசிரியருக்குத் தெரியாது' என்று நிம்மதியடைந்தான்.

தங்கப் பதுமை போன்ற குழந்தையை மடியின்மேல் தூக்கி வைத்துக் கொண்டு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார் தட்சிணாமூர்த்தி ஐயர். "சிரிக்கிறானடா பயல்? உம். எங்கிருந்து வந்தாய்? தெரிகிறதாடா என்னை?" என்று கேட்டுக் குழந்தையின் கன்னத்தை இலேசாகக் கிள்ளினார். அவரை மயங்க வைத்தது அதன் புன்னகை. சாய்ந்து கொண்டு மார்பின்மீது குழந்தையைத் தூக்கிக் கிடத்திக் கண்களை மூடிக்கொண்டார். சொர்க்கபோகமாயிருந்தது அவருக்கு. குழந்தைக்கு அப்படியில்லையோ என்னவோ? அது பெரிதாக அழ ஆரம்பித்து விட்டது. மறுபடியும் எழுந்து உட்கார்ந்தார். குழந்தை அழுகையை நிறுத்தவில்லை.



"யாரங்கே, உள்ளே? குழந்தையை எடுத்துப் போ" என்றார். அவருடைய மனைவி வந்து குழந்தையை எடுத்துக் கொண்டாள்.

"பசுமாடு கன்றுக்கே பால் கொடுக்கவில்லை. உதைத்து விட்டது. மரத்துப் போன மாடு இனிமேல் கறக்காது. உடனே வேறு ஒன்று வாங்கிக்கொண்டு வந்து கட்டிவிட்டு மறு காரியம் பாருங்கள்" என்று சொல்லி விட்டு அவள் போனாள்.

மலைத்துப்போனார் தட்சிணாமூர்த்தி ஐயர். பம்பாயிலிருந்து அவருடைய இரண்டாவது பெண் கபத்திரையும், மாப்பிள்ளையும் வந்திருந்தார்கள். பத்துப் பதினைந்து நாட்கள் தங்குவார்கள். குழந்தைக்குப் பால் வேண்

# உங்களுக்கு அதிக சக்தி அவசியம்

நீங்கள் சரீர தளர்ச்சியினால், சோர்வுற்று இருக்கிறீர்களா ?
நீங்கள் சக்தியற்றவர்களாக இருக்கிறீர்களா?
அப்படியென்றால், உங்களுக்கு க்ளுகோவிடா அவசியம். க்ளுகோவிடா உங்களுக்குத் சக்தியை ஊட்டுகிறது. க்ளுகோவிடாவில், ரத்தத்துடன் சீக்கிரமே கலந்துகொள்ளும், சர்க்கரை சேர்ந்துள்ளது. இதனால் க்ளுகோவிடா, உங்கள் தேகத்திற்கு அவசியமான சக்தியை உங்களுக்குத் தேவையான சமயத்தில் அளிக்கிறது. க்ளுகோவிடாவிலுள்ள விடமின்கள், உங்களை பலமுள்ளவர்களாக்கி, சுறுசுறுப்புடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கச்செய்கின்றன.




## க்ளுகோவிடா

வெகு விரைவில்
சக்தியூட்டுகிறது



கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

பம்பாய்-1

ஏஜெண்டுகள்: பாரி அண்டு கம்பெனி லிமிடெட்

டும். வாங்கும் பால் நன்றாயிருக்குமா? அந்தப் பசுவைக் கொடுத்துவிட்டு வேறு பசு ஒன்று வாங்குவதென்றால் மேற்கொண்டு பணம் கொடுத்தாக வேண்டும். பணத்துக்கு எங்கே போவது?

எவ்வளவு சம்பளம் வந்தாலும் குடித்தனம் நடத்த முடிய வில்லையே! ஆச்சு! தை பிறந்து விட்டால்......மண வாழ்வில் பொருளாதாரப் பிரச்னை என்னும் மேகங்கள் இருண்டு இருண்டு குமுறி வந்தன.

★

ஆல்பர்ட் அடைந்த மன நிம்மதி நிலைக்க வில்லை. 'அரண்மனை ரகசியம் அங்காடி பரசியம்' என்பது போல ஆகிவிட்டது. தான் பெற்ற இன்பத்தைத் தன் அருமருந்தன்ன நண்பனும் பெற வேண்டுமென்று சூரிய மூர்த்தி சங்கரனுக்கு ரகசியமாகத் தேர்வுப் பரீட்சையின் கணக்கு விடைகளைச் சொன்னான். சங்கரன் கோவிந்தனுக்குச் சொன்னான். கோவிந்தன் கோபாலனுக்குச் சொன்னான். அம்பலத்துக்கு வந்துவிட்டன கேள்விகள். மற்ற உபாத்தியாயர்கள் மூலம் தலைமையாசிரியர் செவிக்கும் விஷயம் எட்டியது. பீரோவைத் திறந்து பார்த்தார் தலைமையாசிரியர். வைத்தபடியே இருந்தன வினாத்தாள்கள் கொண்ட எல்லா உறைகளும்.

''ஆல்பர்ட்!''

ஆல்பர்ட் வந்து மேஜையின் எதிரில் தலை குனிந்து நின்று கொண்டிருந்தான்.

''கொண்டு வா ஒரு தஸ்தா காகிதம்.'' அவன் கொண்டு வந்தான்.

''அரைக்கால் காகிதத் துண்டுகளாகக் கத்தியால் கிழி!''

தட்சிணாமூர்த்தி அய்யர் நாற்காலியிலிருந்து எழுந்திருந்தார். கோபம் அவர் முகக் குறியாக இல்லை. நடுக்கத்துடன் காகிதத் துண்டுகளை அடுக்கினான் ஆல்பர்ட்.

''வா, என்னோடு.''

பள்ளி இறுதி வகுப்பின் ஒரு பிரிவுக்குச் சென்றார். அங்கு ஹரிகிருஷ்ண சர்மா பாடம் நடத்திக் கொண்டிருந்தார். தலைமையாசிரியரைக் கண்டு அமைதியாக எழுந்தார்.

''ஆல்பர்ட்! ஒவ்வொரு பையனிடமும் ஒரு காகிதமாகக் கொடு'' என்றார் தலைமையாசிரியர். சர்மா ஒன்றும் விளங்காமல் விழித்தார்.

''அன்புள்ள மாணவர்களே! இதுவரையில் இந்தப் பள்ளிக்கூடத்தில் கேள்வித்தாள் பகிரங்கமானது கிடையாது. உங்களுடைய நேர்மையை நம்புகிறேன். ஒவ்வொருவரும் உங்கள் பெயரையும் அதன் அடியில் யார் மூலம் உங்களுக்குக் கணக்குப் பரீட்சையின் விடைகள் தெரிய வந்தன என்றும் எழுத வேண்டும். பெயர் மட்டும் போதும்; வேறு விவரம் ஒன்றும் வேண்டாம்'' என்றார் தலைமை ஆசிரியர். கபடமாகச் சிரித்துக் கொண்டார் ஹரிகிருஷ்ண சர்மா.

சேகரித்த காகிதங்களையெல்லாம் ஆல்பர்ட் எடுத்துக் கொண்டு வரத் தலைமையாசிரியர் தம் அறைக்கு வந்து சாவதானமாக அமர்ந்து காகிதங்களையெல்லாம் பரிசீலனை செய்தார். பெயர்களை அகராதி வரிசையில் அடுக்கி



டைரக்டர்: பாட்டுக்கு அவள் இரவல் குரல் கொடுக்கும்போது நீங்கள் வாயை அசைத்துக் கொண்டிருங்க என்று சொன்னேன். நீங்கள் பாட்டுக்கும் பட்டாணி தின்று கொண்டிருக்கீங்களே!

நடிகை: சும்மா வெறும் வாயை அசைப்பது ரொம்பச் சிரமமாக இருக்கு. அதனாலே பட்டாணியைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கேன்!

---

ஆஜர்ப் பதிவுப் புத்தகப் பெயர்களுடன் ஒப்பிட்டார். ஆ! இதோ! சூரிய மூர்த்தி! சூரிய மூர்த்தி என்ற பெயருக்குக் கீழே துண்டுக் காகிதத்தில் எழுதப் பட்டிருந்தது என்ன? 'என் தகப்பனார்.'

ஆச்சரியமாயிருக்கிறதே! பள்ளிக்கூட நிர்வாகக் கமிட்டி தலைவருக்கு எப்படித்தெரியும்?

''ஆல்பர்ட்!''

கதி கலங்கிப் போனான் ஆல்பர்ட். மிரள மிரள விழித்தான். அவனுடைய தோற்றமே அவனைக் குற்றவாளி என்று நிரூபித்து விட்டது. குற்றத்தை மறைத்துக் கொள்ளக் கூடிய கடின சித்தம் அவனிடம் இல்லை. அவனுடைய பெயரைப் பற்றிய பிரஸ்தாபமே ஒரு காகிதத்திலும் இல்லாவிடினும் அவனாக அரண்டு போய்த் தன்னைத்தானே காட்டிக் கொடுத்து விட்டான்.

''உண்மையைச் சொல்!''

''எனக்கு ஒன்றுமே தெரியாது, ஸார்!''

''ஆல்பர்ட்!''

கோபக் கனலைக் கக்கின அவர் கண்கள்.

''ஸார்!''

''என்ன?''

''நான்.........நான்.........'' ஆல்பர்ட்டின் நாக்கு மேல் வாயில் ஒட்டிக் கொண்டது.

''நிர்வாக அதிகாரம் ஓரளவு தான். கல்வியைப் பற்றிய வரை என் உரிமையில் யாரும் தலையிட முடியாது. போய் அவரிடம் சொல்லி விட்டு வா.''—சீறினார் தலைமை ஆசிரியர்.

ஆல்பர்ட் வெளியில் போனான். ஹரி கிருஷ்ண சர்மா வகுப்பு வேலை முடிந்ததும் இளைப்பாறும் அறையில் வந்து பத்திரிகை புரட்டிக் கொண்டிருந்தார். சூரியமூர்த்தி இப்படி அசட்டுத்தனம் செய்வான் என்று அவர் எண்ணவில்லை. என்ன எழுதிக் கொடுத்தான் என்று தனியே அழைத்து விசாரித்தார். தன் தகப்பனார் சொன்னதாக எழுதிக் கொடுத்ததாகச் சூரியமூர்த்தி சொன்னான். அனர்த்தம்! தலைமை ஆசிரியர் தம்மிடம் ரகசியமாகச் சொல்லியிருப்பதாக அல்லவா ஹரிகிருஷ்ண சர்மா கேள்வித் தாளை ஒரு வக்கீல் குமாஸ்தாவை விட்டுக் குறிக்கச் சொல்லிக் கொடுத்திருந்தார். எவ்வளவோ முன் ஜாக்கிரதையாக இருந்தும் அவரது பெயர் வெளியாகக் கூடிய நிலையை உண்டாக்கி விட்டானே சூரியமூர்த்தி!

ஆல்பர்ட்டின் மூலம் பணத்தைக் கொடுத்து அனுப்பி அமுக்கிவிட முடியாதா? பள்ளிக்கூட நிர்வாகக் கமிட்டித் தலைவருடைய தயவைச் சம்பாதிக்கப் போய் அவருடைய விரோதத்தைச் சம்பாதிப்பதாக அல்லவா முடிந்து விடும்? பணத்தின் சக்தியில் சர்மா நம்பிக்கை வைத்தார். ஆல்பர்ட் தலைமையாசிரியர் அறையிலிருந்து நேரே ஹரிகிருஷ்ண சர்மாவிடம் வந்தான். சூரியமூர்த்தியின் தகப்பனாரிடம் போவதாகச் சொன்னான் ஆல்பர்ட். கலவரமடைந்தார் சர்மா.

"நீ எடுத்துக் கொடுத்ததாக தலைமை ஆசிரியரிடம் ஒப்புக்கொண்டு விடு. ஐந்நூறு ரூபாய் தருகிறேன். அவர் காலிலே விழுந்து அழு. உன் பணம் என்று சொல். என் பெயரை இழுத்து விடாதே!" என்றார் சர்மா.

அவனை வீட்டுக்கு அழைத்துப் போய் ஐந்நூறு ரூபாய் நோட்டுக்களை அவனிடம் கொடுத்தார். அப்போதும் விஷமப் புத்தி விடவில்லை. அந்த நோட்டு இலக்கங்களைக் குறித்துக் கொண்டார். அவைகளில் ஊன்றிப் பார்த்தாலன்றிக் கவனிக்க முடியாத குறிகளிட்டார். தலைமையாசிரியருக்குப் பொறி!

ஆல்பர்ட் தலைமையாசிரியர் அறைக்கு வந்ததும், "போய்ச் சொன்னாயா? என்ன சொன்னார்?" என்று அவர் கேட்டார்.

"நான்தான் ஸார் சூரியமூர்த்தி கணக்கில் 'வீக்' ஆக இருக்கிறான் என்று சேர்மன் தயவைச் சம்பாதிக்கக் கவரை எடுத்துப் பிரித்தேன். உங்களிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்ததாகச் சொன்னேன். திருடினேன் என்று சொன்னால் என்னை டிஸ்மிஸ் செய்துவிடுவார், ஸார்! பின்னைக் குட்டிக்காரன் ஸார்" என்று சொல்லிக் கொண்டே மேஜையின்மேல் ஐந்நூறு ரூபாய்களை வைத்தான்.

பணத்தைப் பார்த்ததும் தலைமை ஆசிரியரின் உதடுகளில் புன்னகை மலர்ந்தது. மின்னல் போல அந்தப் புன்னகை கணத்தில் மறைந்தது. இரு புருவங்களும் நெறிந்தன. உதடுகள் குவிந்தன. கண்கள் சிவந்தன. பல் வரிசைகள் நெறு நெறு வென்று உறைந்தன. அவர் ரௌத்ராகாரமானார்.

"உன்னை நான் அமைதியாக ராஜிநாமா செய்து விட்டுப் போகச் சொல்லலாம் என்று நினைத்தேன். இப்போது ஜெயிலுக்கு அனுப்பப் போகிறேன். போலீசுக்கு போன் செய்கிறேன்."

"ஸா....ஆ....ஆ....ர்!"

அவர் கோபம் இளகியது. நடு நடுங்கிப் போன ஆல்பர்ட்டினிடம் அநுதாபம் பிறந்தது. "ஏது இந்தப் பணம் உனக்கு?"

"என் சொந்தப் பணம்தான், ஸார்!"

"இல்லை."

"பின்னைகுட்டிக்காரன்......"

"உண்மையைச் சொல்லப்பா ஆல்பர்ட். நான் உன்னை ஒன்றும் செய்துவிடவில்லை. பொய் சொன்னால் தொலைந்தாய்."

பச்சாத்தாபம் தொனிக்க ஆல்பர்ட் எல்லாவற்றையும் சொன்னான்.

"இந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு போய் ஹரிகிருஷ்ண சர்மாவிடமே கொடுத்து விட்டு அவரை இங்கு வரச் சொல்!"

எந்த உபாத்தியாயர்களால் கல்விக்கூடங்களுக்குப் பெருமை ஏற்படக் கூடுமோ அவர்கள் இப்படிப்பட்ட துஷ்கிருத்தியங்களில் ஈடுபடுவதாக இருந்தால் கல்வியால் பயன் என்ன? மனம் புண்பட்டார் தலைமை ஆசிரியர். அவர் மனத்திலே விரோத பாவம் இல்லை. ஆனால் வேதனை இருந்தது. ஆல்பர்ட் திரும்பி வந்து ஹரிகிருஷ்ண சர்மா அவரை வீட்டிலே வந்து பார்ப்பதாகச் சொன்னதாகத் தெரிவித்தான்.

தட்சிணாமூர்த்தி அய்யர் வீட்டுக்குப் போனதும் ஒரு செய்தி அவரை வரவேற்றது. ஹரிகிருஷ்ண சர்மாவின் மனைவி வந்திருந்ததாகவும், காந்திமதியை ஸ்ரீதரனுக்கும், ஜயராமனுக்கு விசாலாட்சியையும் கல்யாணம் செய்வது பற்றிப் பேசிக் கொண்டிருந்ததாகவும் தட்சிணாமூர்த்தி அய்யரின் மனைவி சொன்னாள். காந்திமதியின் கல்யாணம் இவ்வளவு சுலபமாக நிறைவேறுவதிலே வியப்பும், உவகையும் அடைந்தார் தட்சிணாமூர்த்தி அய்யர். என்ன இருந்தாலும் நிலைமையைச் சமாளித்து விடுவதிலே ஹரிகிருஷ்ண சர்மா மிகவும் கெட்டிக்காரர்தான் என்பதை அவர் ஒப்புக் கொண்டார்!



# மாஸ்டா பல்புகள்

பிரகாசம்

அதிகம்

நீடித்து

உழைக்கும்







அங்கீகாரம்பெற்ற டீலர்கள்

V. B. திருவேங்கட முதலியார், டவுன் பஜார், ஆர்காடு, வடஆர்காடு ஜில்லா
பி. நடேசன் & கோ., லிமிடெட், 10, மவுண்ட் ரோடு, சென்னை-2
போம்ரா பிரதர்ஸ், 392, தங்கசாலைத் தெரு, சென்னை-1



# சாயல்

சி.சு.செல்லப்பா

"சௌம்யா, நீ வரவில்லையா அம்பிப் பாப்பாவைப் பார்க்க?"

"ஊஹூம்!"

"நாங்க எல்லாம் புறப்பட்டாச்சு நர்ஸிங் ஹோமுக்கு." அப்பாவின் குரல் அவள் மனம் மாறி வரச் செய்ய அழுத்தி அவசரப்படுத்துவதாக வந்தது.

"நான் வரவே போறதில்லே." தன் விளையாட்டுச் சாமான் அலமாரித் தட்டைக் குடைந்து கொண்டிருந்த குழந்தை, முகத்தை அசைப்பாகக் கூடத் திருப்பாத அலட்சியம் காட்டி மிழற்றினாள்.

"ஏன் கண்ணு, இப்படிச் சொல்றது!" குழந்தையிடமிருந்து எதிர்பார்த்திராத இந்த உறுதிக் குரலைக் கண்டு, திகைத்துக் கேட்டார் தந்தை: "அம்பிப் பாப்பாவையும் அம்மாவையும் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வரவேண்டாமா, நீ போய்?"

"நான் வரலேன்னா." பூனைக் குட்டியின் இளஞ்சிறலாக வந்தது குழந்தையிடமிருந்து.

"அவள் விளையாட்டிலே, மூழ்கியிருக்கிறாள். எப்படி வருவாள்?" என்று சௌம்யாவின் மறுப்புக்கு அத்தை நோக்கம் கற்பித்துச் சொன்னாள்.

"இந்த மொண்ணை மூக்குக்கு என்ன அத்தனை உபசாரம், வராவிட்டால் போகட்டுமே!" என்று குழந்தையின் பக்கம் பாய்ந்து அவள் உப்பக் கன்னத்தை மென்மையாகத் திருகிக்கொண்டே, "ஏன், அம்பிப் பாப்பாவைப் பார்க்கப் பிடிக்கவில்லையா உனக்கு? பொறாமைக்காரி!" என்று செல்லமாக வைதாள் அவள் அத்தை. "மொண்ணை மூக்குக்கும் சப்பை வாய்க்கும் இந்த அழகு அக்காவைத்தானே கொண்டிருக்கிறான் அம்பிப் பாப்பா!"

சௌம்யாவின் கைகள் இரண்டும் அலமாரியைத் துழாவுவதை விட்டு, "விடுங்கோ, அத்தை! சும்மாச் சும்மா கன்னத்தைக் கிள்ளுகிறீர்களே!" என்று கடுப்புக் குரலுக்கு இடையே அத்தையின் கையை உதறித் தள்ளின. ஆனால் அத்தை அதை விளையாட்டாக எடுத்துக் கொண்டு, சற்று அழுத்தி முழுத் திருகலுக்குப் பின்தான் கையைக் கன்னத்திலிருந்து எடுத்தாள்.

"நாம் போகலாம் அண்ணா!" என்று அவள் புறப்பட்டாள்.

"நீயும் உன் அண்ணாவும் வீட்டிலே இருங்கோ. ரமணி! அவளைப் பார்த்துக்கோ!" அவரும் புறப்பட்டு விட்டார்.

அப்பாவும் அத்தையும் புறப்பட்டு வாசலுக்குச் செல்லு மட்டும் அவர்கள் போவதைப் பார்த்துக் கொண்டே நின்றாள் சௌம்யா. அத்தையின் திருகல்கள் அவளுக்கு வலிக்கும்படியாக இல்லை. அத்தை சொன்னதுதான் அவளை உறுத்தியது. எத்தனாவது தடவையாக அத்தை இதைச் சொன்னாள் என்ற கணக்கும் அவளுக்குத் தெரியாது. இன்னும் அத்தை மட்டும் எத்தனைதரம் கேலி செய்திருந்தாலும் கூட அவளுக்கு அவ்வளவு புண்பட்டிராது. இந்த அத்தைக்கு ஏற்ற வேலை என்று உதட்டைப் பிதுக்கியிருப்பாள்!

ஆனால் அம்பிப் பாப்பா பிறந்த அன்றைக்கு அத்தை ஆரம்பித்து வைத்தது இன்னும் நின்றபாடில்லே. ஆஸ்பத்திரியில் அம்மாவுக்குத் துணையாக இரவு முழுதும் இருந்த அத்தை காலையில் வீட்டுக்கு வந்ததும் அம்பிப் பாப்பா ராத்திரி பிறந்ததாக அப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்ததைச் சௌம்யா கேட்டாள்.

"சௌம்யா! உனக்கு அம்பிப் பாப்பா வந்திருக்கிறான்!" என்று அப்பா அவளுக்குப் படும்படியாக அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே சொன்னார்.

'அம்பிப் பாம்பா, அம்பிப் பாப்பா' என்று சௌம்யா தனக்குள் முணு முணுத்துக் கொண்டாளே தவிர, ஒன்றும் புரியாத ஒரு திகைப்புடன் அப்பாவையும் அத்தையையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அம்பிப் பாப்பா எங்கே இருந்து வந்தான், எப்படி வந்தான், யாரு அழைத்துக் கொண்டு வந்தார்கள்? இவையெல்லாம் அவளுக்குள் தெளிவில்லாமல் எழுந்து குழப்பின. அப்பாவையும் அத்தையையும் ஏதோ கேட்க வேணும் என்று தோன்றினமாதிரி இருந்தது. ஆனால் கேட்க வாய் வரவில்லை. ஆனால் அத்தை வரும்போதெல்லாம், "சௌம்யா! அம்பிப் பாப்பா பிறக்கப் போகிறான் பாரு, உன்னை வெளுத்துக் கட்ட. இரு, இரு!" என்பாள்.

"அம்பிப் பாப்பா சின்னவன்தானே, என்னை அடிக்கமுடியுமோ?" என்று சௌம்யா சாதுர்யமாகக் கேட்பாள்.

"நீ சின்னவள் என்னை அடிக்கிறாயே; அதுமட்டும் தேவலையோ?" என்பான் ரமணி.

சௌம்யாவுக்கு விவகாரமாகப் பதில் சொல்ல வராது. "நான் ஓடிப் போயிடுவேனே!" என்பாள்.

அம்பிப் பாப்பா என்றைக்குப் பிறக்கப் போகிறான் என்று திடீரென்று நினைத்துக் கொண்டு, எப்போதாவது அம்மாவைக் கேட்பாள். அம்மாவுக்குச் சிரிப்பும் எரிச்சலுமாக வரும். அவளுடைய சன்னைக் கேள்விகளைக் கேட்டு, "சாமி கொடுக்கிற அன்றைக்குப்

பிறப்பான், போ!'' என்று அதட்டிச் சொல்லி அவனை அனுப்பி விடுவாள்.

ஒரு நாள் அத்தையும் அப்பாவும் அம்மாவை ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போனபோது சௌம்யா வாசற்படியில் நின்று கொண்டிருந்தாள். அம்மா மூக்கி முனகிக் கொண்டே காரில் ஏறி உட்கார்ந்தாள். அத்தை அவளைத் தாங்கிப் பிடித்து உட்கார்த்தினாள். சௌம்யா அதைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்தாள்.

''ரமணி! அம்மா ஆஸ்பத்திரிக்கு எதற்குப் போகிறாள்?'' என்று ரமணியைக் கேட்டாள்.

ரமணிக்கும் விஷயம் தெரியாவிட்டாலும் ஏதோமாதிரியாகப் புரிந்துகொண்டிருந்தான். ஆனால் அவளுக்கு அதை விளக்கிச் சொல்ல அவனுக்குக் கூச்சமாக இருந்தது! ''அம்மாவுக்கு வயிற்று வலியாம். டாக்டரிடம் காண்பிக்கப் போகிறாள்'' என்றான்.

அப்போது அம்மா காரிலிருந்து அவளைக் கூப்பிட்டாள். அம்மா கூப்பிட்டது அவள் காதுவரை எட்டவில்லை. அம்மா கூப்பிடுவதாக அத்தையின் குரல்தான் பலத்து வந்தது. அவள் கையைப் பிடித்துக் கொண்டு ரமணி அவளைக் காருக்கு அழைத்துச் சென்றான்.

அம்மாவிடம் நெருங்கவே சௌம்யாவுக்கு என்னவோ போலிருந்தது. அம்மா பல்லைக் கடித்து வலியைச் சமாளித்துக் கொண்டு அவளைப் பார்த்துச் சிரித்தாள். ''சௌம்யா! சமர்த்தாக இரு. படுத்தாமல் இருக்கிறாயா?'' என்றாள்.

சௌம்யா பேசவில்லை. அம்மாவை வெறித்துப் பார்த்துக் கொண்டே 'ஆகட்டும்' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள்.

அப்பாவும் சொன்னார்: ''ரமணி குழந்தைகூடவே இரு. நான் அம்மாவை ஆஸ்பத்திரியில் கொண்டு விட்டு விட்டுச் சீக்கிரம் வந்து விடுகிறேன்!''

''ஆகட்டும், அப்பா'' என்று ரமணி சொல்லிக் கொண்டிருக்கும்போதே கார் அங்கிருந்து புறப்பட்டு விட்டது.

அப்பா சீக்கிரமே திரும்பி வந்தவர் சௌம்யாவிடம் எதுவும் அம்மாள் பற்றியோ அம்பிப் பாப்பா பற்றியோ பேசவேயில்லை. காலையில் அத்தை ஆஸ்பத்திரியிலிருந்து வந்து அம்பிப் பாப்பா பிறந்திருப்பதாகச் சொன்னபோதுதான் திகைப்புடன் அப்பாவையும் அத்தையையும் மாறி மாறிப் பார்த்தாள் சௌம்யா.

அத்தை மேலே சொன்னாள்: ''அண்ணா! என்ன ஆச்சர்யம் போ. தத்ரூபம் இந்தச் சௌம்யாவேதான் அது. இந்த மொண்ணை மூக்கு அப்படியே......'' என்று சொல்லிக் கொண்டே சௌம்யாவை அணைத்து மூக்கைப் பிடித்தாள். அத்தையின் கையைச் சௌம்யா பிடுங்குவதற்குள் அத்தை கையை எடுத்து அவள் உப்பக் கன்னத்தைக் கிள்ளி, ''இதே உப்பக் கன்னம், சப்பைவாய்...'' என்றாள். அவள் கன்னத்தையும் திருகி மோவாயையும் பிடித்து ஆட்டினாள்.



அம்பிப் பாப்பா பிறந்த சந்தோஷத்தில் இந்தக் கேலி அவ்வளவாக அப்போது சௌம்யாவுக்கு உறுத்தவில்லை. மாலையில் அப்பாவுடன் ஆஸ்பத்திரிக்குச் சென்ற இடத்தில் திரும்பவும் இதேமாதிரி நடந்தபோதுதான் அவளுக்குச் சுருக்கென்றது. சௌம்யாவைத் தூக்கி அம்மா பக்கத்தில் நெளிந்து கொண்டிருந்த பாப்பாவை அவளுக்குக் காட்டிய அப்பாவே சௌம்யா மூக்கைப் பிடித்துக் கொண்டு, ''இதே மூக்கு, வாய், கன்னம் தான்'' என்றார். அவ்வாறு சொல்லிக் கொண்டே கன்னத்தையும் திருகினார்.

''போங்கள் அப்பா!'' என்று சௌம்யா அப்பா கையைத் தள்ளினாள். அதே சமயம் ரமணியும் சிரித்துக் கொண்டே அவள் மூக்கைப் பிடித்து, ''உன் மூக்கு மாதிரிதான் அம்பிப் பாப்பாவுக்கு!'' என்றான்.

''போடா கிளி மூக்கா!'' என்று அவன்மீது சீறினாள் சௌம்யா. பெரியவர்கள்மீது காட்ட முடியாத ஆத்திரம் அத்தனையையும் அவன் மீது கொட்டியமாதிரி வந்தன வார்த்தைகள்.

அத்தையும் கெக்கெலிகொட்டிக்கொண்டே எதிர்ப் பக்கத்திலிருந்து சௌம்யா பக்கம் பாய்ந்து வந்தாள். அத்தையின் குறி மூக்காகத்தான் இருக்கும் என்று இயல்பாக யூகித்து விட்ட குழந்தை தற்காப்பாக அதை மூடிக் கொண்டாள். ''மூக்கை மூடிக் கொண்டால்...'' என்று அத்தை விடாமல் கன்னத்தை மிருதுவாக இழைத்து, ''நீ ஒரு உப்பக் கன்னி, அவன் ஒரு உப்பக் கன்னன்'' என்றாள்.

''எல்லோருமாக என்னத்துக்குக் குழந்தையைச் சீண்டுகிறீர்கள் பாவம்!'' என்று அம்மா படுக்கையிலிருந்து இன்பமும் இரக்கமும் கலந்த தீனமான குரலில் மந்தமாகச் சிரித்துக் கொண்டு சொன்னாள். ''சௌம்யா! அவர்கள் என்ன வேணுமானாலும் சொல்லி விட்டுப் போகட்டும். என் அழகு எனக்குப் போதும்னு சொல்லிவிடு!''

அம்மாவின் சமாதானம் சௌம்யாவுக்கு அவ்வளவு திருப்தியாகப் படவில்லை. அம்பிப் பாப்பாவை மறுபடியும் கண்களை நிலைக்க வைத்துப் பார்க்கவேயில்லை அவள். ஆஸ்பத்திரி கட்டடத்தையும் சாமான்களையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, அப்பாவோடு வீட்டுக்குத் திரும்பினாள்.

அம்மாவுக்குத் தெரிந்த எல்லோரும் வந்தார்கள். ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டு வீட்டுக்கும் வந்தார்கள். சொல்லி வைத்தாற்போல ஒவ்வொருவரும் சௌம்யாவிடம் வருவார்கள். 'இவளை மாதிரிதான் மொண்ணை மூக்கு...' என்று கூறி அவள்மூக்கைப்பிடித்துக் கன்னத்தையும் நன்றாகத் திருகி அவளிடம் கொஞ்சுவார்கள்.

குழந்தையின் மென்மை இருதயம் இதற்கு மேல் தாங்க முடியவில்லை. இந்தக் கேலி அலுக்கும்படியாக ஆக்கி அவளுக்குள் ஆழப் பதிந்து புண்ணாக்கி விட்டது. இதற்குமுன்பு, அத்தை எப்போதாவது சொல்லிக் காட்டுவதைத் தவிர அவள் மனத்தில் தைக்கும்படி

யாக யாரும் சொன்னதில்லை. இப்போது அம்பிப் பாப்பாவினால்தானே எல்லோரும் அவளைக் குத்திக் காட்டுகிறார்கள் ......?

அம்பிப் பாப்பாவைப் பார்க்கப் போக வேணும் என்றே அவளுக்குத் தோன்றவில்லை. மொண்ணை மூக்கும், சப்பை வாயும் உப்பக் கன்னமும்தான் அவளுக்கு ஞாபகம் வந்தன, அவனைப் பற்றி நினைக்கிற போதெல்லாம். நர்ஸிங் ஹோமுக்குப் போகிற போதெல்லா மும் அப்பாவும் அத்தையும் அழைத்ததற்குத் தீர்மானமாக மறுத்து விட்டாள். இன்றும் அவள் போகவில்லை.

அவர்கள் போனதும் ரமணி வாசலி லிருந்து உள்ளே வந்தான். "ஏன் சௌம்யா நீ போகவில்லை? பிடிவாதமாக இருக்கிறாயே?"

அவன் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லவில்லை சௌம்யா. "இந்த அம்பிப் பாப்பா எதற்கு என் மாதிரி பிறந்தான்?" அவள் முகத்தை வைத்துக் கொண்ட விதம் எவ்வளவு கசப்பு அவளுக்குள் ஏறி இருந்தது என்பதைக் காட்டிக் கொடுத்தது.

ரமணிக்கு அந்தக் கேள்வி விசித்திரமாகப் பட்டது. கண்களைச் சுருக்கிய பார்வையுடன் "ஏன், பிறந்தால் என்ன சௌம்யா அதனாலே?" என்று கேட்டான்.

"உன் மாதிரி பிறந் திருக்கலாமே, இனி மூக் காக!" ரமணியைப்பற்றி அத்தை முன் ஒரு சமயம் கேலிசெய்த அந்த ஒன்றுதான் அவளுக்குத் தெரியும்.

"ஏன் சௌம்யா, நான் உன்னை ஒண்ணுமே சொல் லாத போது என்னைக் கிளிமூக்கு என்கிறாயே?" என்று சமாதான மாகக் கேட்டான் ரமணி.

சௌம்யா ஆத்திரத்துடன் அவனைப் பார்த் தாள். "அவன் என் மாதிரி இருக்கிறதனாலே தானே மொண்ணை மூக்கு, சப்பைவாய்ன்னு என்னைச் சும்மாச் சும்மா சொல்கிறே!" அவள் முகம் கன்றி இருந்தது.

ரமணிக்குப் புரிந்த மாதிரி பட்டது. ஆனால் அவளுக்குச் சமாதானம் கூறத் தக்க வார்த்தைகள் அகப்படவில்லை அவனுக்கு. அவன் வயதுக்கு மீறின பிரச்னையாக இருந் தது அது. அவள் மனம் நன்றாக நொந்து போயிருப்பதை அவன் உணர்ந்தான். அவன் பதில் சொல்லத் தயங்கிக் கொண்டிருக்கும் போது சௌம்யாவே தொடர்ந்தாள்.

"அம்பிப் பாப்பாவை எனக்குக் கொஞ்ச மும் பிடிக்கவே இல்லை!"

ரமணி திடுக்கிட்டான்! "அப்படிச் சொல் லக் கூடாது, சௌம்யா!"

"அவன் கிட்ட நான் இனிமேல் போகவே மாட்டேன்!"

"நம் வீட்டு அம்பிப் பாப்பா, சௌம்யா!"

"பின்னே எனக்கு ஏன் அவன் வசவு வாங்கித் தருகிறான்!"

"பாப்பா என்ன பண்ணுவான், பாவம்."

சௌம்யா மௌனமாக இருந்தாள். ஆனால் அவள் உதடு இறுக்கத்திலிருந்து, அவள் தன்



உறுதியிலிருந்து தளரக் கூடியவளாக இல்லை என்பது தெரிந்தது. ரமணியும் கொஞ்சம் மௌனமாக இருந்தான். மேற்கொண்டு என்ன சொல்லி அவள் மனத்தை மாற்றச் செய்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. பேச்சை மாற்றினான்.

"நாளைக்குப் பாட்டி வரப் போகிறாள், சௌம்யா!"

"அந்தப் பாட்டியும் வேறு வந்து என் கன்னத்தைத் திருகுவாள்!" என்று சௌம்யா கடுப்பாகச் சொன்னாள்.

"பாட்டி ரொம்ப நல்லவள். அப்படிச் செய்யவே மாட்டாள்" என்று ரமணி அவ ளுக்கு உத்தரவாதம் அளித்துப் பேசினான்.

சௌம்யா அதை ஏற்கவேயில்லை என் பதை முகச் சுளிப்பு மூலம் காட்டிக் கொண் டாள். இது விஷயத்தில் தனக்கு அநுசரணை யாக யாரும் இருக்கக்கூடும் என்ற நம்பிக்கை கொள்ளாத நிலையில் அவள் இருந்தாள்.

"பாட்டியை நீ பார்த்திருக்கிறாயா, சௌம்யா?" என்று ரமணி அவளைக் கேட் டான். அந்தப் பாட்டியைப் பார்த்த ஞாபகம் தெளிவாக வரவில்லை சௌம்யாவுக்கு. ஆனால் வீட்டில் எல்லோரும் பேசிப் பேசி அவளுக்கு நிறையத் தெரிந்திருந்தமாதிரியும் பட்டது. ஐந்தாவது வயதில் பாதியைத் தாண்டியிருந்த அவள், பாட்டியைப் பார்த்து ஒரு வருஷத் துக்கு மேல் ஆகியிருந்தது.

திடீரென்று ரமணி தொனியை மாற்றி இலேசான பரபரப்புடன் 'சௌம்யா!' என்று கூப்பிட்டான். சௌம்யா அவன் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள்.

ரமணி சொன்னான்: "பாட்டியிடம் அப்பா வுக்கும் அத்தைக்கும் சொல்லித் தரலாம். அவர்களைக் கோபிக்கச் சொல்லலாம் பாட்டி." அவளைத் திருப்திப்படுத்த அதுதான் வழியாகப்பட்டது.

ரமணி இதைச் சொல்லவுந்தான் சௌம்யா வுக்குக் கொஞ்சம் நம்பிக்கை ஏற்பட்டமாதிரி இருந்தது. "பாட்டி நாளைக்கா வரப் போகி றாள்?" என்று கேட்டாள்.

"ஆமாம், தின்பதற்குப் பக்ஷணமெல் லாம் நிறையக் கொண்டு வருவாள்."

"முந்தி திரட்டிப்பால் கொண்டு வந் தாளே, அவள்தானே!"

"ஆமாம்; அதே பாட்டிதான். இப்பவும் கொண்டு வருவாள்!" அவளுக்கு ஆவலூட் டும்வகையில் பேசினான் ரமணி.

அவள் தன் ஞாபகச் சுழலுக்குள் மூழ்கிப் பேசச் சௌம்யா அவனைத் தொடர்ந்து சென்றுவிட்டாள். அம்மாவையும் அம்பிப் பாப்பாவையும் அழைத்துக்கொண்டு அப்பா

வும் அத்தையும் வந்த காரின் ஹாரன் சத்தம் தான் அவர்கள் கவனத்தைத் திருப்பியது. ரமணி எழுந்து வாசலுக்கு ஓடினான்! ''சௌம்யா! அம்மா அம்பிப் பாப்பா வந்தாச்சு. பார்க்க வா'' என்று கத்தினான்.

ஆனால் அவன் உற்சாகம் சௌம்யாவின் குதிகால்களுக்கு ஏற்படவில்லை. உதடுகள் ஆள் காட்டி விரலைக் கவ்வி நெளிய, புருவத்தைச் சுருக்கிய கண்களுடன் வாசலைப் பார்த்துக் கொண்டு காலைக்கூட மாற்றிப் போடாமல் நின்ற இடத்திலேயே இருந்தாள். அப்பா காரின் முன்வரிசையிலிருந்து இறங்கிப் பின் வரிசைக் கதவைத் திறக்க, மெத்தென்று இருந்த துணி மடிப்பின் மீது நெளியும் பாப்பாவை அணைத்துக்கொண்டு அத்தை இறங்குவதைக் கவனித்தாள். பிறகு அம்மாவை அப்பா கைத்தாங்கலாக இறக்கினார். அவள் ஆயாசத்துடன் நடந்து படியேறி வாசற்பக்க ஹாலுக்கு நுழையப் போனவள், நின்று தன்னைப் பார்த்து வரும்படி கையை அசைத்துக்கொண்டே 'சௌம்யா!' என்று கூப்பிடுவதையும் கேட்டாள்.

ஆனால் அம்மாவின் அழைப்புக் கூட ஓடி வரச் செய்ய அவளைத் தூண்டவில்லை.

கொஞ்ச நேரம் கழித்து ரமணி வந்து, ''சௌம்யா! உன்னைக் கூப்பிடுறா அம்மா'' என்று கூறினான்.

'' நான் வரவில்லை, போ.''

ரமணி கையைப் பிடித்து இழுத்தான். சௌம்யா முரண்டிக் கொண்டு கத்தினாள்.

'ரமணி, விட்டுவிடடா அவளை! தானே போகிறாள்.'' அப்பாவின் குரல் அவனை அதட்டியது.

அதற்கு மேல் யாரும் அவளை வற்புறுத்தவில்லை. அவளை மறந்துவிட்டு எல்லோரும் நடந்து கொண்டமாதிரி தோன்றியது.

**ம**றுநாள் காலை சௌம்யாவை எழுப்பியது ரமணியின் குரல்தான். ''சௌம்யா! சௌம்யா! பாட்டி வந்தாச்சு. இன்னும் தூங்கறியே!'' அவளைப் புரட்டி எழுப்பினான். சௌம்யா முனகிப் புரண்டு கொடுத்து நெளித்து, சுருட்டி எழுந்தாள். அவள் கண்களுக்குப் போதிய உணர்வு ஏற்படு முன்பே, ''சௌம்யா! சௌம்யா!'' என்று ஒரு புது கனத்த குரல் அவள் அருகேயே அழைத்தது. இறங்கியதும் இறங்காததுமாக அறைக்குள் சென்று புதுப் பேரக் குழந்தையையும் மருமகளையும் பார்த்து விட்டு அப்போதுதான் அங்கே வந்தாள் பாட்டி. சௌம்யா தலையைத் தூக்கிப் பார்த்தாள்.

''யார் தெரிகிறதா, சௌம்யா?'' என்று அப்பா கேட்டார்.

'' அவளுக்குத் தெரியாது!'' என்றாள் அத்தை.

'' முத்தி திரட்டிப்பால் கொண்டு வந்தான்னு சொன்னேயே, அந்தப் பாட்டி!'' என்றான் ரமணி.

'' அட போக்கிரி! இன்னும் அதை ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கா இது!'' என்று கேட்டுக் கொண்டே அவளை நெருங்கி அவள் கைகளைப் பிடித்துத் தூக்கி நிறுத்தித் தன்னோடு அணைத்துக் கொண்டாள் பாட்டி. '' இப்பவும் உனக்கு நிறையத் திரட்டிப்பால்

கொண்டு வந்திருக்கேன்.—ரமணி! அந்தத் தூக்கை எடுத்துக் கொண்டு வா.''

சௌம்யா சற்றுப் பின் நகர்ந்து பாட்டியை அப்போதுதான் முதல் தடவையாகக் கொஞ்சம் அக்கறையுடன் பார்த்தாள். இந்தப் பாட்டியிடந்தானே அப்பாவுக்கும் அத்தைக்கும் சொல்லித் தர வேண்டும் என்று ரமணி சொன்னான்! பாட்டியின் முகத்தைச் சற்று ஆராய்ந்தாள் சௌம்யா.

வீட்டில் அவரவர் வேலையைக் கவனிக்கப் போய்விட்ட சமயம் பாட்டியும் சௌம்யாவும் தனியாக இருக்கும்போது ரமணி அங்கே வந்தான். நின்று கொஞ்சம் தயங்கிவிட்டு, ''சௌம்யா! பாட்டியிடம் சொன்னாயா?'' என்றான் அவளைப் பார்த்து.

'இல்லை' என்பதற்கு அடையாளமாகச் சௌம்யா தலையைச் சாய்வாக உயர்த்தி அசைத்தாள். அந்த அசைப்பில் தொனித்த ஒரு அசிரத்தை அவன் அதை இப்போது அவ்வளவு முக்கியமாகக் கருதவில்லை போல் காட்டியது.

'நான் சொல்லட்டுமா?' என்று அவளிடம் அநுமதி கோரிய பாவனை காட்டி விட்டு, பாட்டியிடம் தானே ஆரம்பித்து ஒரே மூச்சில் சொல்லிக் கொண்டிருந்தான் ரமணி. அவன் கூறி வரும்போது தன் பார்வையைப் பாட்டியின் முகத்தில் ஊன்றியவாறே கேட்டு வந்தாள் சௌம்யா. நடுநடுவே, எதையோ சொல்ல விரும்பியது போலவும், ஆனால் ரமணி சொல்லி முடிப்பதற்காகக் காத்திருந்த மாதிரியும் உதடுகளை அவ்வப்போது கூட்டிக் கூட்டிக் கலைத்துக் கொண்டிருந்தாள்.

ரமணி சொன்னதை எல்லாம் சிரிப்புடனே கேட்ட பாட்டி, ''குழந்தையை எதற்கு அப்படி நோகப் பண்ண வேண்டும்? அவரவரைப் பகவான் எப்படிப் படைச்சாரோ, அப்படித்தானே இருப்பார்கள். அப்பா, அத்தை இருக்கிற அழகுக்குக் குழந்தையைச் சொல்ல வந்து விட்டார்களாக்கும்!'' என்று சௌம்யாவுக்கு ஆறுதலாகச் சொன்னாள். உடனே, ''கல்யாணி, சுந்தரம்!'' என்று அங்கிருந்தபடியே அதட்டிக் கூப்பிட்டாள்.

''என்ன அம்மா?'' என்று கேட்டுக் கொண்டே இருவரும் வந்தார்கள்.

''நன்றாகக் குழந்தையைக் கரித்திருக்கிறீர்கள், பாவம்!'' என்று கண்டித்தாள். ''அதற்கு என்ன புரியும், உங்கள் கேலி எல்லாம்? கொள்ளாக் குறையாகப் பாட்டி எப்போது வருவாளென்று காத்திருந்து அன்றைவை விட்டுச் சொல்லச் சொல்றது! அதன் மூக்கையும் வாயையும் நன்றாகப் பழித்திருக்கிறீர்கள்!'' என்றாள்.

''இதோ, இந்தப் பாட்டிக்கும் மூக்கு அப்படித்தானே இருக்கிறது. இதோ, சப்பை வாய்!'' என்று பாட்டி முகத்துக்கு நேராகக் கையை உயர்த்திச் சுட்டிக் காட்டினாள் சௌம்யா. ''அம்பிப் பாப்பா மாதிரிதானே இருக்கிறாள்!'' அடக்கி யிருந்த ஆத்திரம் பிதுங்கி வந்த மாதிரி வெடுக்கென்று வார்த்தைகள் வந்து விழுந்தன.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்ட பார்வையில், இக்கட்டான நிலை

வேலைக்காரன்: எசமான்! கார் வாசலில் உங்களுக்காக நின்னுகொண்டிருக்கு!



முதலாளி (வேலை மும்முரத்தில்): அட! என்னத்துக்கு நின்னுண்டே இருக்கணும்? கொஞ்சம் உட்காரச் சொல்லு, அப்பா! இதோ வந்துவிட்டேன்!

மையில் குழந்தையின் வார்த்தைகள் தங்க வைத்து விட்டதைக் குறிப்பால் சொல்லிக் கொண்ட மாதிரி அசடு வழியச் சிரித்தார்கள். உண்மையில், தங்கள் தாயாரைத் தான் குழந்தை கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் உணர்ந் திருந்தாலும் தங்கள் தாயைப் பரிகசித்து உபமானமாகச் சொல்லும் மனம் அவர்களுக்கு ஏற்படவில்லை. பழிப்பது என்ற நோக்கம் இல்லாமல் கேலியாகக் குழந்தையைச் சொல்லிக் காட்டியது அசந்தர்ப்பத்தில் மாட்டி விட்டது.

"பாட்டியை அப்படிச் சொல்லக் கூடாது, சௌம்யா!" என்று ரமணி உபதேசமாகச் சொன்னான். "பெரியவர்களை அப்படிச் சொன்னால் நாக்கில் புண் வருமாம்!"

"என்னை மட்டும் சும்மாச் சும்மாக் கேலி பண்ணினால் அத்தைக்கும் அப்பாவுக்கும் புண் வராதோ?" சௌம்யா மடக்கிப் பேசினாள். "ஏன் பாட்டி, சின்னவர்களையும்தானே கேலி பண்ணக்கூடாது?"

"ஆமாண்டி கண்ணு, யாரையுமேதான்" என்று சௌம்யாவை அணைத்துக் கொண்டே சொன்னாள் பாட்டி. தத்ரூபம் தன்னையே கொண்டிருந்த பேத்தியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த பாட்டிக்குக் குழந்தையின் வார்த்தைகள் அதிர்ச்சி தரவில்லை; வித்தியாசமாகவே படவில்லை. சௌம்யா, பிறந்த குழந்தை, தான் மூவரையும் சேர்த்து, பழிப்பு நோக்கம் இல்லாது போனாலும், ஒதுக்கிப் பேசிய பெரியவர்களின் வார்த்தைகள் தான் வித்தியாசமாகப் பட்டன.

"அம்மா! கேலியை இது இவ்வளவு நிசமாக எடுத்துக் கொண்டு விட்டது, பாரேன்!" என்றாள் அத்தை.

"கேலியும் நிசமும் குழந்தை உலகத்தில் ஒன்றுதான்" என்றாள் பாட்டி. "நீங்கள் அதை உபமானமாகச் சொன்னீர்கள். அது என்னை உபமானமாகச் சொல்லிவிட்டது. நியாயம்தானே!"

"என்ன பாட்டி சொல்றே?" என்று பாட்டியின் மடியிலிருந்து முகத்தை உயர்த்திய படியே கேட்டாள் சௌம்யா.

"அம்பிப் பாப்பா என் மாதிரிதான் இருக்கான், சௌம்யா! நீயும் பாட்டிமாதிரிதான் இருக்கே. நாம் மூன்று பேரும் ஒண்ணு" என்று குழந்தையின் தலையை வருடிக் கொண்டே சொன்னாள் பாட்டி. தன்னைக் கொண்டு இரண்டு பிஞ்சு உருவங்கள் பரம்பரையை நீட்டிச் செல்வதைக் கண்டு அடைந்த ஒரு திருப்தி அந்தக் குரலில் தொனித்தது. "அப்பாவும், அத்தையும் நம்ப மாதிரியே இல்லை!" என்றாள் பாட்டி.

"பின்னே, யார் மாதிரி?"

"உங்கள் தாத்தாவை அவர்கள் கொண்டிருக்கிறார்கள்."

"தாத்தாவுக்கும் ரமணி, அப்பா, அத்தை மாதிரி இனி மூக்குத்தானா பாட்டி?"

'ஓ!' என்று பாட்டி கூவினாள். "என்ன கேள்வி யெல்லாம் கேட்கிறது இது!" ஆனால் கேள்வியில் இருந்த உண்மை மறுக்க முடியாததாக இருந்தது.

"பாட்டி!" என்று முகம் பார்த்துக் கூப்பிட்டாள் குழந்தை. விசாரணைக் குறி ஏறிய முகத்துடன் பாட்டி சௌம்யாவைப் பார்த்தாள்! "நீ சின்னவளாக இருக்கிறப்போ உன்னையும் இப்படித்தானே கேலி பண்ணினார்கள்?"—கேள்வியைக் கண்டு பாட்டி திடுக்கிட்டுப் போய் விட்டாள்.

"ஆமாம், கண்ணு! குழந்தையாக இருக்கிறபோது எல்லாரையும்தான் நன்றாகக் கேலி பண்ணுவார்கள்."

பாட்டியின் பதில் தனக்குக் கொஞ்சம் ஆறுதல் அளித்தமாதிரி சௌம்யா காட்டிக் கொண்டாள். ஆனால் அடுத்த விநாடி "நாளைக்கு அம்பிப் பாப்பா என்மாதிரி பெரியவனாக ஆனப்புறம் அவனையும் இப்படித்தான் கேலி பண்ணுவாளா?" என்று கவலை தொனிக்கக் கேட்டாள்.

குழந்தையின் விசாரம் எப்படி வெல்லாமோ கவர் விட்டுப் பாய்வதைக் கண்டு பாட்டி கொஞ்சம் குழம்பினாள். "ஆமாம்" என்றவள், "பாப்பாவைப் பார்க்க வர்றயா?" என்று கூறி எழுந்தாள்.

சௌம்யா சிறு தயக்கத்துக்குப் பின், தானும் எழுந்தாள். பாட்டியின் கையைப் பிடித்துக் கொண்டு நடந்தாள்.

"சௌம்யா!" அறைக்குள் நுழையவும் அம்மாவின் ஆவல் குரல் அவளை நோக்கி வந்தது. "பாட்டி கூடத்தான் அம்பிப் பாப்பாவைப் பார்க்க வரணும்னு இருந்தாயா?"

சௌம்யா அம்மாவின் முகத்தில் ஒரு ஒட்டப் பார்வை செலுத்தி விட்டு அம்மா பக்கத்தில் கழித்துக் கொண்டிருந்த பாப்பாவைப் பார்த்தாள். பார்த்தவாறே நடந்து நெருங்கி, பாட்டியுடன் நின்றாள். இப்போது முகத்தைத் திருப்பிக் கொள்ளவில்லை. அம்மாவுக்குப் பதிலும் சொல்லவில்லை. அம்பிப் பாப்பாவின் முகத்தின்மீது பதிந்தன விழிகள். அவனது மொண்ணை மூக்கையும் சப்பை வாயையும் அவள் கண்டாள்.

"எதற்கு அப்படிப்பார்க்கிறே அம்பியை?" என்று கேட்டாள் அவள் அம்மா.

"பாப்பாவை யாராவது மொண்ணை மூக்கு, சப்பை வாய்ன்னு சொல்லட்டும், என்ன பண்ணுகிறேன், பாரு!" என்று சௌம்யா வெடித்துச் சொன்னபொழுது மூன்று முகங்களில் ஒரே சாயல் பளிச்சிட்டது.

# எல்லோருக்கும் தெரியும் —

நீங்கள்
செலவழிக்கும்
பணத்திற்கு
**ப்ரூக் பாண்ட் தேயிலை**
அதிகப்படியான,ருசியான
தேநீரை அளிக்கிறது

...மேலும் காற்றுப்
புகாமல் நன்றாக
பாக் செய்யப் படுவதால்
**ப்ரூக் பாண்ட் தேயிலை**
களங்கமற்று மெத்தவும்
சுத்தமாக உங்களுக்குக்
கிடைக்கிறது

...இன்னும்
ஒவ்வொருவாரத்தி
லும் 2,10,00,000
**ப்ரூக் பாண்ட் தேயிலை**
பாக்கெட்டுகள்
தயாரிக்கப்படுகின்றன

**ஆகையால்தான் மற்றெந்தத் தேயிலையையும் விட அதிகப்படியான ஜனங்கள்**

**ப்ரூக் பாண்ட் தேயிலையையே**

**அருந்துகிறார்கள் !**




ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்




காலையில் மணி ஒன்பது இருக்கும். ரங்கூன் ராமசாமிப் பிள்ளையின் கார் டிரைவர் ஓடி வந்தான். அப்போதுதான் நான் காலை ஆகாரத்தை முடித்து விட்டு, அன்றையச் செய்தியைப் படிப்பதற்காகச் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தேன்.

"உங்களை ஐயா கையோடு அழைச்சுக்கிட்டு வரச் சொன்னாங்க" என்றான்.

"என்ன விஷயம்?" என்று கேட்டேன் அசிரத்தையாக.

"என்னமோ தெரியலே, கோபமா இருக்காங்க. உங்களை உடனே கூட்டிவர என்னை அனுப்பினாங்க. கார் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க. நானும் ஒன்றும் புரியாமல் கையிலிருந்த செய்தித் தாளைக் கீழே வைத்துவிட்டு அவனைத் தொடர்ந்தேன்.

ராமசாமிப் பிள்ளையின் வீட்டினுள் நுழைந்தபோது, அவர் அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருந்தார். கையில் அன்றையப் பத்திரிகை இருந்தது. என்னைக் கண்டதும், "வே, ஆண்டியாபிள்ளை, உம்ம சொல்லைக் கேட்டு நாசமாப் போச்சுவே" என்றார். அவர் உடல் பதறியது.

"என்ன விஷயம்? இப்படிப் பதறுவானேன்? கொஞ்சம் பொறுமையாய்ப் பேசுங்கள்" என்று சொல்லிக்கொண்டே அங்கிருந்த நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அதில் அமர்ந்தேன்.

"என் குடி கெட்டுப் போச்சுவே. இந்தப் பயல் இப்படிச் செய்வானென்று தெரியாமல் போச்சு. இப்போ என் மானமேபோச்சு,போம்" என்றார்.

"என்னய்யா விஷயம்? விஷயத்தை இன்னும் நீங்கள் சொல்லவில்லையே" என்றேன் நிதானமாக.

"இதோ பாரும், இந்தப் பேப்பரிலே என்ன இருக்குதுன்னு?" கையிலிருந்த பத்திரிகையை என்னிடம் நீட்டிவிட்டு அறைக்குள் புறுகுப் பூனை மாதிரி நடைபோட்டார்.

பத்திரிகையைப் பிரித்துப் பார்த்தேன். முதல் பக்கத்தைத் திருப்பிய உடனே அயர்ந்து விட்டேன். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தேன். ஆச்சரியமான விஷயந்தான். ரங்கூன் ராமசாமிப் பிள்ளைக்குக் கோபத்தை மூட்டும் விஷயந்தான் இருந்தது. முதல் பக்கத்தில். இதற்கு யார் காரணம்? யார்மீது பழி போடலாம். விளம்பரத்தின் மீதும், கடைசியில் விதியின் மீதுமே பழி சுமத்தி விடவேண்டும். வேறு வழி? இதற்குக் காரணத்தை ஆதியிலிருந்து ஆராய வேண்டுமென்றால், பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால் சென்றால்தான் முடியும்.

* * *

பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால், ரங்கூன் ராமசாமிப் பிள்ளை, தமது ரங்கூன் வியாபாரங்களை ஒருவாறாக முடித்துக் கொண்டு, பல லட்சங்களோடு தமிழ் நாடு வந்து விட்டார். அதே சமயம், சிங்கப்பூர் சிவராமப் பிள்ளையும் சிங்கப்பூரை விட்டுத் தமிழ்நாடு வந்து சேர்ந்தார்.

அந்த இரண்டு ஆசாமிகளுக்கும் குழந்தைப் பருவத்திலிருந்தே சண்டைதான். ராமசாமிப் பிள்ளைக்குச் சொந்த ஊர் திருநெல்வேலி. சிவராமப் பிள்ளையின் சொந்த ஊர் திருநெல்வேலிக்குப் பக்கத்திலுள்ள பேட்டை என்ற ஊர். இருவரும் எட்டாவது வகுப்பு வரையில் திருநெல்வேலியில் படித்தார்கள். அப்போது ஏற்பட்ட சில்லறைச் சண்டை, நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, பெரும் பகையாகிவிட்டது. பிறகு, இருவரும் கடல் கடந்து சென்றார்கள். கடல் கடந்த பிறகும் பகையை மறந்துவிடவில்லை. அதாவது, கடல் கடந்திருந்தபோது மறந்திருந்தாலும், திரும்பச் சொந்த ஊர் வந்த பிறகு, மறக்காமல் பகையை ஞாபகப்படுத்திக் கொண்டார்கள்.

ராமசாமிப் பிள்ளைக்கு ஒரே ஒரு ஆண் குழந்தை மட்டும் வாரிசு. அதேபோல் சிவராமப் பிள்ளைக்கும் ஒரே ஒரு பெண் குழந்தை மட்டும் வாரிசு.

ராமசாமிப் பிள்ளை, தமிழ்நாடு வந்தபிறகு, சிவராமப் பிள்ளையைப் பற்றி விசாரித்தார். சிவராமப் பிள்ளையும் தம்மைப்போல் பல லட்சங்களைத் திரட்டி வந்திருக்கிறார் என்ற செய்தி, ராமசாமிப் பிள்ளையின் அமைதியைக் கெடுத்தது. எத்தனை லட்சம் என்பதை அறியத் துடித்தார். மொத்த மதிப்பில் ஒரு அணு தாம் அதிகமாகச் சம்பாதித்திருக்கிறோம் என்று தெரிந்துவிட்டால் போதும், ராமசாமிப் பிள்ளைக்கு மனம் நிம்மதியடைந்து விடும். ஆனால், அந்த இரகசியம் வெளிக்குத் தெரியவில்லை. அந்தச் சமயத்தில்தான் நான் ஒரு யோசனை கூறினேன்.

"உங்கள் பையன் ஆறுமுகத்துக்கு, சிவராமப் பிள்ளையின் பெண் நிர்மலாவைக் கலியாணம் செய்து விட்டால், சிவராமப் பிள்ளையின் சொத்து முழுவதும் உங்கள் வீட்டுக்கு வந்து விடும்" என்றேன். முதலில் இந்த யோசனை ராமசாமிப் பிள்ளைக்கு இனித்தது. உடனே கசந்தும் போய் விட்டது.



"சீ! அந்தப் பயல் வீட்டில் பெண் எடுக்கவா! அந்தப் பேச்சையே இனி எடுக்காதேயும்" என்றார் எரிச்சலுடன்.

இந்தப் பேச்சு நடக்கும்போது, ஆறுமுகத்துக்கு வயது பத்து. நிர்மலாவுக்கு வயது எட்டு. இரண்டு பிள்ளைகளும் செல்லும் கார்கள் எதிர்ப்பட்டால் ஆபத்துதான். இரண்டு கார்களும் உறுமிக் கொண்டு உராய்வதுபோல் செல்லும். ஒரே திசையில் சென்றாலோ இதைவிட ஆபத்துத்தான். ஒன்றையொன்று முந்த வேகமாக ஓடும். இதற்காக ராமசாமிப் பிள்ளையும், சிவராமப் பிள்ளையும் கோர்ட்டில் அபராதம் செலுத்தி யிருக்கிறார்கள். இரண்டு பண்ணையார்களின் வேலையாட்களும்கூடப் பகைத்துக் கொண்டார்கள்.

ஒரு சமயம் ராமசாமிப்பிள்ளையின் வீட்டு வேலைக்காரனும், சிவராமப்பிள்ளையின் வீட்டு வேலைக்காரனும் திருநெல்வேலி கோயில் மண்டபத்தின் முன்னாலிருந்த புல்லுக் கட்டுக்காரியிடம புல்லுககடடை ஒரே சமயத்தில் விலை பேசினார்கள். போட்டி ஏற்படவே பேரம் ஏலமாகி விட்டது. அந்தப் புல்லுக் கட்டை வாங்காமல் விட்டுவிட்டால் தங்கள் முதலாளிக்கு அவமானம் என்று கருதினார்கள். ஏலம் ஏறிக்கொண்டே போய் நூறு ரூபாயில் நின்றது. நூறு ரூபாய்க்குக் கேட்டான் ராமசாமிப் பிள்ளையின் வேலைக்காரன். சிவராமப் பிள்ளையின்ஆள் யோசித்தான். விலையை ஏற்றிக் கேட்க நினைத்தான். அதே சமயம் எதிர்க் கட்சிக்கு நூறு ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்ற எண்ணம் வந்ததும், மேலே கேட்கவில்லை. ராமசாமிப் பிள்ளையின் வேலைக்காரன் புல்லுக் கட்டுக்காரியை வீட்டுக்கு அழைத்துச் சென்று முதலாளியிடம் நூறு ரூபாய் வாங்கிக் கொடுத்தான். அன்று காலையில் அந்தப் புல்லுக்கட்டுக்காரி யார் முகத்தில் விழித்தாளோ? ராமசாமிப் பிள்ளைக்கு, சிவராமப் பிள்ளையின் வேலைக்காரன் ஏலம் கேட்டுத் தோற்றதில் பரமதிருப்தி. சிவராமப் பிள்ளையே அவருடைய வேலைக்காரனிடம் தோற்று விட்டதாக ஒரு பிரமை. அதே சமயம், சிவராமப் பிள்ளை, தம் வேலையாளை வேலையை விட்டே நீக்கி விட்டார்.

"நாலணாக் கட்டை, நூறு ரூபாய்க்கு அவன் எடுக்கும்படி செய்து நஷ்டத்தை ஏற்படுத்தினேன்" என்று வேலைக்காரன் கூறியும் சிவராமப் பிள்ளைக்குத் திருப்தி ஏற்படவில்லை.

"அவன் நூறு ரூபாய்க்குக் கேட்டான் நீ ஏண்டா நூற்றைம்பதுக்குக் கேட்கவில்லை? ஆயிரமானால்தான் என்ன? நீ கேட்க வேண்டியதுதானே! உன் அப்பன் வீட்டுச் சொத்தா குறைந்துவிடும்? உன்னால் என் மானம் போச்சுடா. நீ வேலைக்கே வேண்டாம்" என்று கோபத்தில் கத்தினார்.

பாவம், அந்த வேலைக்காரனுக்குச் சீட்டு அந்த நிமிஷமே கிழிந்து விட்டது.



எப்படிப் போட்டி? இப்படிப் போட்டியிருக்கும்போது, அந்த இரண்டு பேர்களுடைய குழந்தைகளும் இணைய முடியுமா?

ராமசாமிப் பிள்ளையின் புத்திரபாக்கியமோ, அறிவில் அசமந்தயானாலும் சுறுசுறுப்புள்ளவன். பதினாவது வயதில் இரண்டாவது வகுப்பை மிகுந்த சிரமத்துடன் எட்டிப் பிடித்தான். ஆனால், நிர்மலாவோ எட்டாவது வயதில், ஐந்தாவது வகுப்பு படித்தாள். ராமசாமிப் பிள்ளைக்கு, நிர்மலா ஐந்தாவது வகுப்பு படிப்பதும், ஆறுமுகம் இரண்டாவது வகுப்பு படிப்பதும் மிகுந்த வேதனையைக் கொடுத்தது. அதற்கு என்ன செய்ய முடியும்? ஆறுமுகத்தின் மூளைக்கு இருக்கும் சக்திக்கு அவ்வளவுதானே முடியும். "நம்ப பையன் படிப்பில் சுகமில்லை. என்ன செய்ய?" என்றார் ராமசாமிப் பிள்ளை.

"படிப்பு எதற்கு இந்தக் காலத்தில்? படிக்காதவனுக்குத்தான் இப்போ நல்ல காலம். படித்தவனை மதிக்கிற வழக்கம் தான் நம் நாட்டிலே மறைந்து போய்விட்டதே. பையனைத் தொழிலில் திருப்பி விடுங்கள்" என்று ஆலோசனை சொன்னேன்.

"என் மச்சினன், மதுரையில் ஒரு பெரிய வியாபாரி. அவனிடம் அனுப்பி வியாபாரத் துறையில் பழக விடலாம். இல்லையா?" என்றார். நானும் தலையை அசைத்தேன்.

ஆறுமுகம் மதுரைக்குப் புறப்படும் நாளன்று பத்திரிகையில் புகைப்படத்துடன் ஒரு விளம்பரம் வெளியாகி இருந்தது. அதை ராமசாமிப் பிள்ளையிடம் காட்டினேன்.

"கா. மா. சா. அ. கு: இ. வெ. உ. கலியாணசுந்தரம் அவர்களின் புதல்வன் வேலாயுதம், வியாபாரத் துறையில் இந்த மாதம் 15-ந் தேதி இங்கிலாந்து செல்லுகிறான்" என்பதுதான் அந்த விளம்பரம். "இது என்னய்யா விளம்பரம்? எவன் எங்கே போனால் யாருக்கென்ன? பத்திரிகையில் விளம்பரம் செய்து ஏன் தம்பட்டம் அடிக்கிறாங்க?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் ராமசாமிப் பிள்ளை.

"இது விளம்பர யுகம். கலியாணத்தைக் கூட இந்தமாதிரி விளம்பரத்தினாலே செய்கிற காலத்திலே நீங்கள் இதைக் கண்டு அதிசயிக்கிறீர்களே! இந்த விளம்பரத்தினாலே யாருக்கு நஷ்டம்? இப்போ இந்த விளம்பரத்திலிருக்கும் பையன் எல்லோருக்கும் விளம்பரமாகி விட்டான். அவனுக்கும் திருப்தி. இதைப் பிரசுரித்த பத்திரிகை முதலாளிக்கும் பணம் லாபம். நம் ஆறுமுகத்தைக் கூடப் பத்திரிகையிலே போடலாம்" என்றேன்.

"நம்ம பையனும் இப்படிச் சீமைக்குப் போனால் பத்திரிகையில் போடலாம். இவனுக்கு அவ்வளவு கெட்டிக்காரத்தனம் கிடையாதே?" என்று கூறிப் பெருமூச்சு விட்டார்.

"இப்போ என்ன குறைஞ்சு போச்சு, ஆறுமுகம் மதுரைக்கு வியாபார விஷயமாகப் போகிறான் என்று போடலாமே!" என்றேன்.

"இதை யெல்லாம் போடலாமா?"

"ஏன் போடக்கூடாது? இங்கிலாந்தும், இந்தியாமாதிரி ஒரு நாடுதானே? லண்டனும், மதுரைமாதிரி ஒரு ஊர்தானே? அங்கு போவதில் என்ன முக்கியத்துவம் இருக்கிறது? அதையெல்லாம்போடும்போது, நம்ஆறுமுகத்தைப் பற்றி மட்டும் போடக்கூடாதா?" என்றேன்.

ராமசாமிப்பிள்ளை யோசித்தார்.

"நீங்கள் பேசாமல் இருங்கள். நான் எழுதித் தருகிறேன். அதேமாதிரி பத்திரிகையில் விளம்பரத்துக்குக் கொடுத்து விடலாம். சிவராமப் பிள்ளையும் பத்திரிகை பார்ப்பார். அதனால்தான் சொல்லுகிறேன்" என்றேன்.

அவர் தலையை அசைத்தார். இரண்டு நாட்களுக்குப் பிறகு பத்திரிகைகளில் புகைப்படத்துடன் வந்த விளம்பரம் இது:

"ரங்கூன் பண்ணையார் ராமசாமிப்பிள்ளையின் ஏக புதல்வன் திரு ஆறுமுகம், வியாபாரத் துறையின் நுணுக்கங்களைக் கற்றறிய மதுரைக்கு இந்த மாதம் 10-ந் தேதியன்று காலையில் பயணமானார். பலர் மலர் மாலை சூட்டி வழியனுப்பினார்கள்."

தமது மகனுடைய படத்தைப் பத்திரிகைகளில் கண்ட ராமசாமிப் பிள்ளைக்குத் தாங்க முடியாத சந்தோஷம். அது போல் விளம்பரம் செய்யச் சிவராமப் பிள்ளைக்கு ஒரு ஆண் குழந்தையில்லை யென்பதில் மிகுந்த திருப்தி. ஒரு மன நிறைவு! ஆனால், அவருடைய மகிழ்ச்சி நிலைக்கவில்லை. ஒரு வாரத்துக் கப்பிறகு, பத்திரிகையைத் திருப்பியபோது, ஒரு பெண் குழந்தையின் புகைப்படத்துடன், ஒரு விளம்பரம் வெளியாகியிருந்தது!



"சிங்கப்பூர் சிவராமப் பிள்ளையின் அருமைப் புத்திரி செல்வி நிர்மலா, பரத நாட்டியக் கலையின் நுணுக்கங்களைக் கற்றறியத் தென்காசிக்கு 17-ம் தேதியன்று ரயில் ஏறினாள். ரயில் நிலையத்தில் பலர் வந்திருந்து அவளை வழியனுப்பினார்கள்."

இந்த விளம்பரத்தைப் பார்த்த ராமசாமிப் பிள்ளையின் இரத்தம் கொதித்தது.

"பொறாமைக்காரப் பயல். நான் என் மகனைப் பத்திரிகையில் போட்டதும், அவனும், தன் மகளைப் பற்றிப் போட்டு விட்டானே. ஆமாம், தென்காசியில் என்ன கலையைப் படிக்கப் போகிறாள்?" என்றார்.

"தென்காசியில் யாராவது ஒரு நட்டுவனார் இருப்பார். தென்காசியில்தானே சிவராமப் பிள்ளையின் தங்கை இருக்கிறாள்! அவள் வீட்டிலிருந்து கொண்டு நாட்டியம் பழகுவாள்" என்றேன்.

"அப்போ படிப்பை விட்டாச்சா?"

"இப்போ கோடை விடுமுறைதானே? பள்ளிக்கூடம் திறந்ததும் திரும்ப வந்து விடுவாள். அப்படித்தானிருக்கும்" என்றேன்.

இப்படியே பன்னிரண்டு வருடங்கள் கழிந்தன. ஆறுமுகம் படிக்காவிட்டாலும் வியாபாரத்தில் மிகுந்த தேர்ச்சி பெற்றான். மிகுந்த மூலதனத்தில் ஒரு பெரிய வியாபாரத்தை ஆரம்பித்தார் ராமசாமிப்பிள்ளை. அதைத் திறம்பட நடத்தினான் ஆறுமுகம். இப்போது அவனுக்கு வயது இருபத்திரண்டு.

நிர்மலாவோ பி. ஏ. படிப்பில் மாகாணத்துக்கே முதன்மையாகத் தேறினாள். அதோடு பரத நாட்டியத்திலும் தேர்ந்தாள்.

கடைசியாக, சமீபத்தில் ராமசாமிப் பிள்ளை கொடுத்த விளம்பரம் இதுதான்:

"ரங்கூன் ராமசாமிப்பிள்ளையின் ஏக புத்திரன் திரு ஆறுமுகம், தன் சொந்த வியாபாரம் நிமித்தமாக, சென்னைக்குத் தென் பிராந்திய ரயில்வேயைச் சேர்ந்த திருநெல்வேலி எக்ஸ்பிரஸில் இந்தமாதம் 5-ம் தேதி புறப்பட்டார். பலர் மலர்ந்த முகத்துடன் வழியனுப்பினார்கள். சென்னையிலிருந்து திரும்பும்போது, சிதம்பரம், தஞ்சாவூர், கும்பகோணம் ஆகிய நகரங்களுக்குச் செல்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது."

இந்த விளம்பரத்தை அவர் திரும்பத் திரும்பப் படித்து மகிழ்ந்தார். அந்த விளம்பரத்தை எழுதிய என்னிடம் பத்து தடவைகளுக்கு மேல் வாசித்துக் காண்பித்தார். ஆனால், அதே பத்திரிகையின் மறு பக்கத்திலிருந்த விளம்பரத்தைக் கண்டபோது, ராமசாமிப் பிள்ளையின் முகத்தில் ஈயாடவில்லை. மறு பக்கத்திலிருந்த விளம்பரம் இதுதான்:

"சிங்கப்பூர் சிவராமப் பிள்ளையின் ஏக புத்திரி குமாரி நிர்மலா, கல்லூரி மாணவிகளுடன் கலாச்சாரக் கோஷ்டியில் சேர்ந்து சென்னைக்கு இந்த மாதம் 3-ம் தேதி தென்காசியிலிருந்து திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் முதல் வகுப்புப் பெட்டியில் சென்றாள். சென்னையில் பல இடங்களில் அவளுடைய நாட்டியம் நடக்கும் என்று தெரிய வருகிறது. அவள் கல்லூரிப் படிப்பிலும் சிறந்து விளங்குவதோடு பரதநாட்டியத்திலும் தேர்ந்து விளங்குகிறாள். சென்னையிலிருந்து திரும்பும்போது கோயம்புத்தூர், பழனி, முதலிய நகரங்களுக்கும் செல்வாள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அங்கும் அவளுடைய நாட்டியம் நடைபெறலாம்."

இந்த விளம்பரத்தைப் படித்த ராமசாமிப் பிள்ளை கோபத்தில் பத்திரிகையைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தார்.

ஆறுமுகம் சென்னைக்குப் போய் மாதம் மூன்றுக்கு மேலாகி விட்டது. இன்னும் பத்து நாட்களில் திரும்ப வேண்டும். அதற்குள் பத்திரிகைகளில் ஒரு விளம்பரம் வெளியாகியது. அதைப் பார்த்து விட்டு எல்லோருமே திடுக்கிட்டார்கள். நாங்கள் மட்டுமென்ன? சிவராமப் பிள்ளை கூடத் திடுக்கிட்டிருப்பார்.

பத்திரிகையின் முதல் பக்கத்தில் ஒரு திருமண விளம்பரம். உயரே தம்பதிகளின் புகைப்படம்.

"ரங்கூன் ராமசாமிப் பிள்ளையின் புதல்வன் திரு ஆறுமுகத்துக்கும், சிங்கப்பூர் சிவராமப்



பிள்ளையின் புதல்வி செல்வி நிர்மலாவுக்கும் பழனி கோயிலில் முருகன் சந்நிதியில் திருமணம் நடந்தது. பல மாணவிகளும், வியாபாரிகளும் கலந்து வைபவத்தைச்சிறப்பித்தார்கள்.''

இதுதான் விளம்பரம்!

இதைப் பார்த்து விட்டுத்தான் ராமசாமிப் பிள்ளை கோபம் கொண்டு என்னை அழைத்து வர டிரைவரை அனுப்பினார்.

* * *

'பிள்ளைவாள்! கொஞ்சம் நிதானமாயிருங்கள். ஆறுமுகம் சென்னையிலே நிர்மலாவைப் பார்த்திருப்பான். விதி சதி செய்திருக்கும். தெய்வ சங்கல்பம்! இரண்டு பேருக்கும் கலியாணம் ஆகிவிட்டது. இனி, உங்கள் பகையை மறந்து ஒன்று சேருங்கள். அது தான் நல்லது. நீங்கள் ஒன்று சேர்ந்ததையும் பத்திரிகையிலே விளம்பரம் பண்ணிவிடலாம்'' என்றேன்.

ராமசாமிப் பிள்ளைக்குக் கோபமும் வந்தது. சிரிப்பும் வந்தது.

''எல்லாம் இந்த விளம்பரத்தால் வந்தது தான்'' என்றார்.

''விளம்பரமாவது? எல்லாம் விதிதான். உங்களையும், சிவராமப் பிள்ளையையும் சேர்க்க விதி செய்த சூழ்ச்சி இது. இதோ பாருங்க, உங்க மகனையும், மருமகளையும் ஆசீர்வாதம் செய்து காஷ்மீருக்கு அனுப்பி வையுங்கள். ஒரு மூன்று மாதம் சந்தோஷமாகப் போய் விட்டு வரட்டும். அவங்க இரண்டு பேரும் காஷ்மீர் போவதையும் பத்திரிகையிலே விளம்பரம் செய்துவிடலாம்'' என்றேன்.

நல்லவேளையாக ராமசாமிப் பிள்ளையும், சிவராமப்பிள்ளையும்என்னுடைய பகீரதப்பிரயத்தனத்தால் இணைந்தார்கள். புது தம்பதிகளும் காஷ்மீர் சென்றார்கள். பத்திரிகைகளிலும் விளம்பரம் வந்தது.

உண்மையில் நடந்தது இதுதான். பத்திரிகையில் வெளியான விளம்பரங்களிலிருந்து நிர்மலாவும், ஆறுமுகமும் ஒருவரை யொருவர் காணத் துடித்தார்கள். சென்னையில் ஆறுமுகத்துக்கும் நிர்மலாவுக்கும் அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பும் கிடைத்தது. பிறகு என்ன? காதல் நடங்கலின்றி வளர்ந்தது. இருவரும் சென்னையிலிருந்து திரும்பும்போது, பழனியில் ஆண்டவன் முன்பு திருமணத்தையும் முடித்துக் கொண்டார்கள். பெற்றோர்களின் சம்மதம் கிடைக்காதென்று அவர்களுக்குத் தெரியுமானதால், திருமணத்தைப் பத்திரிகையில் விளம்பரம் செய்து விட்டார்கள். இந்தத் திருமணத்தை முடித்து வைத்தது விதியோ விளம்பரமோ? எப்படியாவது இருந்துவிட்டுப் போகட்டும்.

கடைசியாக ஒரு விஷயம். பத்திரிகைகளுக்கு விளம்பரம் சேகரித்துக் கொடுக்கும் ஏஜண்டாக நானிருக்கிறேன்! இல்லையென்றால் எனக்கு இதில் என்ன அவ்வளவு அக்கறை? ஆனால், ராமசாமிப் பிள்ளைக்கு நான் ஒரு விளம்பர ஏஜண்டு என்பது இன்னும் தெரியாது!

## ஏப்ரல் மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. ஏப்ரல் மாதப் போட்டிக்கு ஏப்ரல் 1-ந் தேதியிலிருந்து 30-ந் தேதி வரை கதைகள் எழுதியனுப்பலாம். ஏப்ரல் மாதப் போட்டிக்கு வந்த கதைகள் மே மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஜூன் மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவிடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

—ஆசிரியர், கல்கி



# குடும்பத்துக்கு உத்தமமான சோப்

மார்கோ சோப்பை வழக்கமாக உபயோகிப்பதால், சருமம் மிருதுவாகவும் வழவழுப்பாகவும் கெடாமலும் இருக்கிறது. அதிலிருந்து வரும் ஏராளமான நுரை சரும துவாரங்களில் ஆழமாகச் சென்று, முற்றிலும் சுத்தப்படுத்துகிறது. இது குடும்பத்திற்கு உத்தமமான சோப். மணம் உடையது. மிக மெல்லிய சருமமுடையவர்களுக்கும் சிறிதும் தீங்கிழைக்காதது. வாட்டும் குளிரிலும் உற்சாகமளிக்கும் சக்திவாய்ந்தது.

# மார்கோ சோப்

வாசனை நீக்கப்பட்ட வேப்ப எண்ணெயில் தயாரிக்கப்பெற்றது.

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட், கல்கத்தா -29.

தென் இந்திய ஆபீஸ் : 6/149, பிராட்வே, சென்னை-1

# படித்துப் பாருங்கள்

## யோகசாதனை

யோக சமுச்சயம் என்று பொதுவாகக் குறிக்கப்படும் ஸ்ரீ அரவிந்தருடைய யோக மார்க்கமும் அதன் சாதனமுறைகளும் நுட்பம் மிகுந்தவை. சம்பிரதாயமான அஷ்டாங்க முறைகளிலிருந்து மாறுபட்டவை. அவற்றின் ரகசியங்களையும் நுட்பங்களையும் புத்தகங்களிலிருந்து மட்டும் படித்துப் புரிந்து கொள்ளுவது கடினம்.

இந்தக் குறைபாட்டை ஓரளவுக்கு நீக்க முற்பட்டிருக்கிறது யோகசாதனை—அன்னையுடன் சம்பாஷணைகள் என்னும் இப் புத்தகம். இப் புத்தகம் முன்பு 1940-ம் ஆண்டில் "யோகம் செய்ய வேண்டுமா?" என்னும் தலைப்பில் வெளியிடப்பட்டது. அதனுடைய முக்கிய பகுதியான யோக சாதனைகளும் அதற்கு அவசியமான இதர விஷயங்களும் மட்டுமே இப்போது வெளிவந்துள்ள இப் பதிப்பில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

[யோக சாதனை—அன்னையுடன் சம்பாஷணைகள்—மொழிபெயர்ப்பு, பி. கோதண்டராமன். ஸ்ரீ அரவிந்த ஆசிரமம், புதுவை. விலை: ரூ. 1—50 ]

## திருவெம்பாவை திருப்பள்ளி எழுச்சி

ஸ்ரீ தேவாலயங்களில் வழிபாட்டுக்குத் திருவெம்பாவை ஓதப்படும்போது ஒருவித ஒழுங்குமுறை இருத்தல் அவசியம்.

அவ்வித இசையமைப்பு ஆலய பூஜா காலங்களுக்கு உபயோகப்படும்படி எட்டாம் திருமுறைப் பகுதியான திருவாசகத்துக்கு இல்லை என்ற குறையை நிவர்த்தி செய்கிறது இந்த நூல். ஸ்ரீ சங்கரநாராயண ஸ்வாமி தேவஸ்தானத்தின் வெளியீடாகப் பிரசுரிக்கப்பட்ட இந்நூல் திருவெம்பாவை இருபது பாக்களுக்கும் அவற்றுடன் ஓதப்படும் திருப்பள்ளி எழுச்சி பத்து பாக்களுக்கும் கர்நாடக ஸங்கீத ராகங்களில் ஸ்வரங்கள் அமைத்து, அந்தந்தப் பாக்களின் பாவங்களுக்கேற்ற ராகங்களைப் பொறுக்கி எல்லோருக்கும் பயன்படும் முறையில் தரப்பட்டிருக்கின்றன. டாக்டர் கே. சங்கரநாராயணனும் டி. எம். தியாகராஜன் அவர்களும் இப் பாக்களை இசைப்படுத்தியிருக்கிறார்கள். தேவாலயங்களுக்கு மட்டுமன்றி மற்றவர்களுக்கும் கூடப் பயன்தரக் கூடியது.

[திருவெம்பாவை—திருப்பள்ளி எழுச்சி—ஸ்ரீ சங்கரநாராயணஸ்வாமி தேவஸ்தானம்—சங்கரநாயனார் கோவில்.]

## ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் காமகோடி பீடம்

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் 51-வது வருஷ பீடாரோஹண விழா சமீபத்தில் தியாகராய நகரில் கனகாபிஷேகம் செய்து அன்பர்களாலும் பக்த கோடிகளாலும் சிறப்புடன் கொண்டாடப்பட்டது. அக் காட்சியைக் கண்டு களித்தவர்களெல்லாம் இப் பிறவிப் பயனை எய்தியதாகவே பரவசமடைந்தனர். அந்தச் சந்தர்ப்பத்தில் தம்முடைய பாத காணிக்கையாக, சென்னை ஹிந்து தியாலஜிகல் உயர் பள்ளி தலைமை ஆசிரியர் திரு எஸ். பாலகிருஷ்ணஜோஷி ஒரு சிறு புத்தகத்தை அச்சிட்டுப் பலருக்கு வழங்கினார். அவர் அதற்கு முன் சில முக்கியமான சந்தர்ப்பங்களில் ஆச்சாரிய ஸ்வாமியைப் பற்றி நிகழ்த்திய பிரசங்கங்களையும், பத்திரிகைகளுக்கு எழுதிய கட்டுரைகளில் சிலவற்றைத் தொகுத்தும் இச் சிறு புத்தகத்தில் அளித்திருக்கிறார்

கிடைக்குமிடம்: தலைமை ஆசிரியர் எஸ். பாலகிருஷ்ண ஜோஷி, சென்னை ஹிந்து தியாலஜிகல் உயர் பள்ளி, சென்னை.

## ஜிதந்தே ஸ்தோத்ரம்

இது ஸ்ரீநாராயண மூர்த்தியின் தோத்திரமாக அமைந்துள்ள இப்புனித நூல் ருக் வேதத்தைச் சேர்ந்த மஹாமந்திரம். நாரத முனிவர் ஒரு சமயம் ச்வேதத்வீபத்துக்குச் சென்றிருந்தபோது அங்கே தவம் செய்து கொண்டிருந்த பிரும்ம புத்திரர்கள் மூலம் இவ்வரிய மந்திரம் அவருக்கு உபதேசமாகக் கிடைத்தது. ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஊறித் திளைத்த மகா புருஷரான ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை ஜிதந்தே ஸ்தோத்ரத்தின் மகிமையை நன்கு எடுத்துக்கூறி வியாக்கியானமும் அருளியிருக்கிறார். ஜிதந்தே ஸ்தோத்திரங்கள் ஐந்தென்று தெரிய வருகிறது: ஆறாவது ஸ்தோத்திரமும் சில பதிப்புக்களில் காண்கின்றது.

ஆதிப் பரம்பொருளும் ஆதிமூலமுமான மகாவிஷ்ணுவையே தியானித்து அவரது திருவடிகளையே புகலிடமாகக் கொண்டு சரணாகதி செய்வதுதான் தலையாய பக்தி என்பதை இப்புராதன பக்திக் கிரந்தம் வலியுறுத்திக் கூறுகிறது.

இந்தச் சிறந்த தோத்திர நூல், வெறும் தோத்திர நூலாக இல்லாமல் பல தத்துவங்களையும் வேதாந்தக் கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு பக்தி, ஞானப் பொக்கிஷமாக விளங்குகிறது. "ஜிதந்தே" என்று ஆரம்பமாவதால் இந்த நூலின் பெயரும் "ஜிதந்தே ஸ்தோத்ரம்" என்று வழங்கலாயிற்று.

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை, ஸ்ரீ புத்தன் கோட்டகம் ஸ்ரீநிவாஸாச்சார்ய ஸ்வாமி ஆகியவர்களின் வியாக்கியானங்கள் முதல் ஜிதந்தே ஸ்தோத்திரங்களுக்கு மட்டும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. மற்ற ஸ்தோத்திரங்களுக்குப் பதவுரை, கருத்துரை எழுதியிருப்பவர் திருமலை ஈச்சம்பாடி வீரராகவாச்சார்யார். வடமொழி சுலோகங்களைத் தேவநாகரியில் வெளியிட்டிருக்கிறார்கள். புராதனப் பெருமை வாய்ந்த இந்த அரிய நூலை ஆதரிப்பது ஆஸ்திகப் பெருமக்களின் கடமையாகும். பெரு முயற்சி எடுத்து இந்நூலை நல்ல பதிப்பாக வெளியிட்டிருப்பவர்களைப் பாராட்டத்தான் வேண்டும்.

கிடைக்குமிடம்: என். வி. வாசுதேவன், 'பாதுகா ஆசிரமம்', 33, கோதண்டராம ஸ்வாமி கோவில் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை—17; விலை: ரூ. 2.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publication Private Limited
Managing Editor: T. Sadasivam

# அவனுக்கு ஜான்ஸன்ஸ் பேபி பவ்டரின் சுகத்தை அளியுங்கள்




இலவச புத்தகம்: ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது ஹிந்தி பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிடவும்!

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்
பி. ஓ. பாக்ஸ் 1976,
டிபார்ட்மெண்ட் 24-8
பம்பாய்

